சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பண்டார சாத்திர முகவுரை.



திருநின்ற சைவத் திறமல்க ஞானத்
தருநின்ற நால்வர் தருஞ்சீர் — மருநின்ற
பண்டார சாத்திரத்தைப் பார்த்துப் பரவுதும்யாங்
கண்டார வின்பங் கனிந்து.

சமயங்கள் பலவற்றுள்ளும் மிகச் சீரியதும் ஜநநமரண சாகரத்தினின்று முத்தி நெடுங்கரை யேற்றுகைக்குப் பெரும்புணையாயதுமாகிய சைவசித்தாந்த மெய்கண்ட சாத்திரத்தி னுண்ணிய வுண்மைகளை விரித்துணர்த்துவா னெழுந்தது இப்பண்டார சாத்திர மென்னும் நூல். சைவாகமாந்தத்தி லின்றியமையாதனவா யறிந்துகோடற்குரிய பொருள்கள் யாவும் இச்சாத்திரத்திற் செறிந்து விளங்குகின்றன. தத்துவங்களி னியல்புகளையும் முத்தியின் வேறுபாடுகளையும் அவைகளின் முடிவையும் அம்முடிவி னெய்தும் பொருளையும் மிகத் தெளிவாகவும் விரிவாகவும் இந்நூல் போதிப்பதாகும். இப்பெற்றித்தான ஞானசாத்திரத்தை ஆன்றோர் பண்டார சாத்திர மென்பர். 'பண்டாரசாத்திரம்' என்னுந் தொடர்மொழி பண்டாரம் சாத்திரம் என்ற விருமொழிகளாலாயது. அது ஆறும் வேற்றுமைச் செய்யுட்கிழமையதாகும். சிவஞானச் சரக்கறையை விளக்கும் சாத்திர மெனப் பொருளேற்கும்போது இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனுமுடன் தொக்க தொகையாகும். இருபெயரொட்டெனினும் பொருந்தும்.

இப்பண்டாரசாத்திரம் திருக்கைலாய பரம்பரை மெய்கண்டார் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பாநுவாகிய நமச்சிவாயமூர்த்திகளை ஆதி குருமூர்த்தமாகக் கொண்டெழுந்த திருவாவடுதுறை யாதீனத்துப் பண்டாரசந்நிதிகளும் அவர் வழிப்பெரியார்களும் அருளிய ஞான சாத்திரங்களிற் பதினொரு நூல்களைக் கொண்டுள்ளது. அப்பதினொரு சாத்திரங்களும்,

“தரசமயத் தசகாரி யங்கள் மூன்று
சன்மார்க்க சித்திசிவாச் சிரமத் தேற்றம்
பரசமயப் பற்றொழிபஃ றொடைகள் மூன்று
பகருஞ்சித் தாந்தசிகா மணிய தொன்று
முரசமையச் சித்தாந்த வுபாய நிட்டை
முயல்நிட்டை விளக்குப தேச வெண்பா
வரசமயத் ததிசயமைந் தெழுத்தின் மாலை
யருடருமெய்ப் பண்டார நூல்க ளாமே”

என்ற ஆன்றோர் செய்யுளான் நன்குபோதரும். இப்பதினான்கு சாத்திரங்களில், தசகாரியம், சன்மார்க்கசித்தியார், சிவாச்சிரமத்தெளிவு, சித்தாந்தப்பஃறொடை, சித்தாந்தசிகாமணி, உபாயநிட்டைவெண்பா, நிட்டைவிளக்கம், உபதேசவெண்பா, அதிசயமாலை, நமச்சிவாயமாலை ஆகிய இப்பத்து ஞானசாத்திரங்களையும் நமச்சிவாயமூர்த்திகள்பால் ஞானோபதேசங்கேட்டு மூன்றாவது பட்டத் திலங்கிய அம்பலவாண தேசிகர் அருளினர். அவர் காலத்துத் துவிதீயபட்டத்திலமர்ந்தருளிய தக்ஷிணாமூர்த்திதேசிகர் தசகாரியம், உபதேசப்பஃறொடை ஆகிய இரண்டு சாத்திரங்களையும் தந்தருளினர். எட்டாவது பட்டத்து மாசிலாமணிதேசிகர்பாற் சங்காபிஷேகமும், ஈசானதேசிகரென்ற சிறப்புத்திருநாமமும் பெற்ற திருநீயசுவாமிநாததேசிகர் தசகாரியம் என்ற ஒரு ஞானநூலையும், பதினோராவதுபட்டத் திலங்கிய பின் வேலப்பதேசிகர் காலத்துத் திராவிடமா பாடிய கர்த்தராகிய மாதவச் சிவஞான சுவாமிகளுக்கு ஞானாசாரியராய் விளங்கிய துவிதீய பெரூர் வேலப்பதேசிகர் பஞ்சாக்கரப்பஃறொடை யென்ற ஒரு ஞான சாத் திரத்தையும் அருளினார்கள்.

இப்பதினான்கு சாத்திரங்களுடன் அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த பாஷண்டநிராகரணம் என்னும் சாத்திரமும், அவ்வம்பலவாணதேசிகர் அருளினதாகச் சிலர் கூறுகின்ற அநுபோக வெண்பா என்ற ஓர் சிறிய அநுபோக சாத்திரமும், பதினோராவது பட்டத் தெழுந்தருளிய பின்வேலப்பதேசிகர் காலத்து அடியார் குழாத் தொருவர் அருளிய நமச்சிவாயமூர்த்தி ஞானத் தாராட்டு என்ற சாத்திரமும், சாம்பவம் என்னுந் தீக்கையை ஒருற்சவமாகக் கொண்டெழுந்த உற்சவ விளக்கம் என்னும் ஒரு நூலும், முத்தி பஞ்சாக்கரமாலை என்னும் ஒரு நூலும் இப்பதிப்பிற் சேர்ந்துள்ளன.

இப்பண்டாரசாத்திரம், மெய்கண்ட சாத்திரங்களையே முத னூலாகக்கொண் டெழுந்ததென்பது நூலுட் சென்று ஆராய்பவர்க்குத் தெற்றென விளங்கும். வேதாகமங்களின் திரண்ட சாரமே ஆகமாந்த மெனவும், அவ்வாகமாந்தமே சைவசித்தாந்த மெனவும் படும். வேதாகம சாரமாகிய தேவார திருவாசக திருமந்திரங்களைப் பின்பற்றி யெழுந்த மெய்கண்ட சாத்திரம் சைவசித்தாந்தத்திற்குப் பிரதான நூலாகும். சைவாகமாந்தத்தை வகைப்படுத்தி முறை செய்த மெய்கண்ட சாத்திரத்திற்கும் ஏனையவழி நூற்களாகிய சைவ சித்தாந்த சாத்திரங்களுக்கும் இப்பண்டார சாத்திரம் சைவார்த்தத்தை நுண்ணிதி னுணர்த்தும் அடிப்படையான அநுபவ நூலாயது.

“கனியுறழ் வேதக் கலையொரு மூன்றுங்
கண்கவர் வியாதனு ஞன்காங்
கருத்துறு நிகம முருத்திரர் கேட்பக்
கவின்றெழு நான்கென லாய
துனிதவிர் மூவ ரிசைதமிழ் முறைதாஞ்
சுந்தர கோட்டியி னேழாற்
றாயவை பின்னர் நம்பிமாட் டருளாற்
சுடர்த்தொகை மந்திர மாரு
மினிதின்மெய் கண்டா னியம்புநூன் முதலை
வீரெழு கோசங்க ளென்ன
வின்னியற் சைவ ஞானமா யினவே
யெழிற்றகை யுமாபதி சிவனே
டணைமகிழ் தசகா ரியமுதற் றசநான்
கவைபுகன் றுவடு துறையி
னஞ்செழுத் துண்மை விளக்கிமெய்ப் போகத்
தழுத்துவே லப்பதே சிகனே.”

என்ற சான்றோர் திருவாக்கும் இக்கூற்றை வலியுறுத்தும்.

இப்பெற்றி யமைந்த இவ்வரிய பெரிய சாத்திரத்தின் உட் கருத்தை அபியுக்தரொருவர் இயற்றி யருளிய இச்சாத்திரக்கொளு வினால் நன்கு புலனாகும்.

“முதுமறை நுவலு மூவகைப் பொருளை
முடிவிலா ஞானத்தி னிலையை
முன்றெனு மவற்றைப் பாட்டினை வகுத்து
முறைமைசால் காரியம் பத்து

முத்திபி னேற்றி முட்டற நவிறல்
முற்றச காரிய நூலாம்.
முன்னவ னருளா லியற்றிற மல்க
முன்பினிற் காரியம் பத்தை
மூதறி வாளர் சிறப்பொடு தெரித்தல்
மூர்த்தியார் காரிய மொழியாம்.
முந்தைய வவத்தைப் பத்தையு முன்பின்
முறைதந்து கருவிக ளனைத்து
முத்தனும் வண்ணங் கழற்றுவ கழறல்
மூன்றதாங் காரிய மாற்றம்.
மோகமே யாதி மூன்றையுங் கடிந்த
முனிவர்செல் நெறியின தியல்பும்
விதிகொள்சோ பான வகையுமெய்ச் செறிவும்
விதிப்பது மார்க்கசித் தியதே.
விழிப்புளார் தெளிவுந் தெளிவுளார் விழிப்பும்
விழுப்பொருட் சேர்தரு தீக்கை
மேன்மையு மவற்றுள் விழுமிய தீக்கை
விழுப்பமும் பயிறலைச் சான்றோர்
விழைதரு சைவ வாச்சிர மந்தான்.
வேறுபட் டியைதரா வொழுக்க
வித்தையுஞ் சைவ வுண்மையும் விரித்து
வியனகக் கிளவியின் விதித்தல்
விரிந்தசித் தாந்தப் பஃறொடை யதுவாம்.
விரிவிலா வறிநர்க டமக்கு
விருத்தியார் சைவ வத்தத்தைப் பொய்ந்நூல்
மாற்றியவ் வூழினிற் றெருக்து
விரியநு ரொழிக்கும் ஞானசித் தாந்த
விரியுப தேசப்பஃ றொடையாம்.
புதிதுதன் னருளாற் பொறிப்பகை சமட்டிப்
போதமா ரிறைதனி ஞானம்
புண்ணிய ருணர வுணர்த்துறு தன்மை
புகல்வதைந் தக்கரத் தொடையாம்.
புரைதபக் கடிந்து பொங்கொளி மிகுந்துப்
புராரியைப் புணர்தருஞ் சைவப்
புங்கவர் நெறியைச் சிக்கெனப் பிடிக்கப்
பொறிப்பதச் சிகாமணிப் பனுவல்.
போக்கொடு வரவும் புரிதலுஞ் செறிவும்
பொத்திய மலப்பிணி கரப்பும்

போர்க்கெழு மாயைப் புணர்வொடு கன்மப்
　　பொருபடை வலிமையு நீத்துப்
பொன்னிக ரிதழி யந்தொடைப் புனிதன்
　　பொலங்கழ றன்னையுந் தன்னையும்
புகலுறக் காட்ட லுபாயநிட் டையதாம்.
　　போற்றியோங் கொளிதழை நம்பன்
றுதிதனை யாடி யவனடி நண்ணத்
　　தூயசிந் தனையதைக் கூறிச்
சுடரிய ஞானச் செயல்பல புகறல்
　　சுருக்கமி னிட்டையின் விளக்கம்.
துடிதுடித் தோடு மனத்தினை நிறுத்தித்
　　தூயதாக் கண்டவட் டவத்துத்
தொன்னெறி நின்று சுரர்க்கரி தாகுஞ்
　　சோதியின் ஞானத்தை வழங்கல்
துகளறு முபதே சத்துவெண் பாவாம்.
　　சுத்தனச் சுத்தமொன் றில்லாத்
துரிசினர்க் கருளு மதுவதி சயமாம்.
　　சுற்றுபே ரின்பமே பணித்தல்
சுகிர்தநன் னமச்சி வாயமா மாலை.
　　துறைசையஞ் சம்பிர தாயஞ்
சொற்பொரு ளாயும் புலவர்தம் புலத்துச்
　　சூழ்கபண் டாரநூற் கொளுவே.

இனி, ஸ்ரீகண்டருத்திரரினின் றுதித்த நுருவாசர், ஸ்ரீகண்டருத்திரரால் உபதேசிக்கப்பெற்ற இருடிகளாகிய கவுசிகர், காசிபர், பாரத்துவாஜர், கவுதமர், அகஸ்தியர் முதலிய ஐவர்க்கும், அவர்களின் சிஷ்யர்களாகிய சநற்குமாரர், சநகர், சநாதனர், சநந்தனர் என்பார்க்கும் கதம்பவிருக்ஷத்தினால் புனையப் பெற்ற ஆமர்த்தகம் எனப் பெயரிய ஒரு சிறந்த ஆச்சிரமத்தை ஸ்தாபித்து, சைவாகமாந்தத்தை எங்கும் பரவச் செய்தனர். பின் அவ்வாமர்த்தக மடத்தினின்று புஷ்பகிரி, கோளகி, இரணபத்திரம் என மூன்று மடங்கள் பிரிந்துள்ளன. சநற்குமாரர் முதலிய நால்வரும் அவர்களின் சந்ததியார்களும் மேற் கூறிய ஆமர்த்தகம், புஷ்பகிரி, கோளகி, இரணபத்திரமாகிய நான்கு மடங்களுக்கும் முறையே அதிபதிகளானார்கள். பின்பு இம்மடங்களுக்கு அநேக கிளை மடங்கள் ஏற்பட்டு அவைகளுக் கேற்பப் பல பத்ததிகளும் உளவாயின. இங்ஙன மூளவாய மடங்களாலும் அவைகளின் அதிபதிகளாலுமே சைவாகமாந்தம் பரதகண்ட முழுவதும்

பரவுவதாயிற்று. மேலும் இச்சைவ வான் பயிர் இந்நாட்டிற் செழித்து வளர்வதற்கு முக்கிய காரணபூதராய் இருந்தவர் தொண்டையோரென்பது தேவார மோதிய மூவர் முதலிகள் தொண்டையர் நாமத்தைக் குறித்திருக்குந் திருப்பாசுரங்களானும், அத்தொண்டையோர் எடுப்பித்த பல கோயில்கள், மடங்கள், பொறிப்பித்த பல சிலாசாசனங்கள், செய்வித்த பல தானங்கள், விடுவித்த பல மானியங்கள் இவைகளானும் நன்கு அறியலாகும். இவர்க்குப்பின் சோழமன்னர், பல கோயில்களைப் புதுப்பித்தும், புதிய கோயில்களையும் திருத்தொண்டர் மடங்களையும் நிருமித்தும், அவற்றில் மூவர் முதலிகளையும் திருத்தொண்டர்களையும் பிரதிஷ்டை செய்வித்தும் பலவாறுகச் சைவத்தைப் போற்றி வந்தனர். பின்னர்ப் பதினைந்தாம் நூற்றாண்டின் முற்பகுதி முதல் பல சைவ மடங்கள் ஏற்பட்டு அவைகளின் குருமூர்த்தங்களாகிய பண்டார சந்நிதிகளும் அவர்களின் தொண்டர் குழாங்களும் இயற்றியருளிய ஞானசாத்திர வாயிலானும் ஞானோபதேசத்தானும் சித்தாந்த சைவமானது மிகப் பரவிப் பொலிவுற்றது. அங்ஙனம் பொலிவுற்ற பல சைவாதீனங்களுக்குந் தோற்றுவாயாயிருந்த ஸ்தலம் ஸ்ரீகாழியம்பதியே. ஸ்ரீகாழிக்கழுமல முதுபதியின்கண் விளங்கிய மச்சுச்செட்டியாரென்ற காரணத் திருநாமங்கொண்ட அருணமச்சிவாயர், கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார்பால் ஞானோபதேசங் கேட்ட ஆணையானே காழிக் கங்கை மெய்கண்டார், சித்தர்சிவப்பிரகாசர் இவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்தருள, அவர்களின் பிற்றோன்றலாகிய காழிச் சிற்றம்பல நாடிகள், காழிப்பெரும்பழுதைகட்டிச் சிற்றம்பலவர், காழிச்சிறுபழுதைகட்டிச் சிற்றம்பலவர், நமச்சிவாயமூர்த்திகள் முதலிய பின்பல நிஷ்டானுபூதிச் செல்வர்களாலே பல சைவாதீனங்களும் ஸ்தாபனமாயின. அங்ஙன மேற்பட்ட பல சைவமடங்களில் திருவாவடுதுறை ஆதீனம், தருமபுரவாதீனம், சூரியனார்கோயிலாதீனமாகிய மூன்றும் சிறந்தன. இவற்றுட் காலத்தினால் முந்தியது திருவாவடுதுறை. இவ்வாதீனத்திருந்தே இப்பண்டார சாத்திரம் எழுந்தது. இது போலவே முத்தி நிச்சயம், சதமணிக்கோவை, சிவபோகசாரம் முதலிய அரிய பெரிய சாத்திரங்கள் கூடிய பண்டாரசாத்திரம் ஒன்று தருமபுரவாதீனத்திற்கும் உளவாகும். அச்சாத்திரமும் இறைவனருளால் விரைவின் வெளிவரலாம்.

உமாபதிசிவாசாரியார் சங்கற்பநிராகரணம் எழுதிய ஆண்டு ௧௩௧௩ கி. பி.; அவர் பரிபூரண காலம் உத்தேசம் ௧௩௨௫; திருவாவடுதுறை யாதீன ஸ்தாபநாசாரியரும் ஆதிகுருமூர்த்தியு மாகிய நமச்சிவாயமூர்த்திகள் அவ்வுமாபதியார்முதல் நான்காவது பரம்பரையின ராதலின், பரம்பரை ஒன்றுக்கு முப்பது வருடம் கொடுப்ப, அவர் காலம் ௧௪௧௫; இம்முறைப்படி மூன்றாவது பட்டத் திலகிய அம்பலவாண தேசிகர் காலம் ௧௪௭௫; அவர் காலத்தில் துவிதீய பட்டத்தி லமர்ந்தருளிய தக்ஷிணாமூர்த்திகள் காலமு மஃதே; பின்னர் எட்டாவது பட்டத் தெழுந்தருளியிருந்த மாசிலா மணிதேசிகர் காலம் முன் முறை யாகவே கணக்கிட ௧௫௨௫; அவர் காலத்துத் திருதீய பட்டத்தமர்ந்த சுவாமிநாததேசிகர் காலமும் அஃதே. பின்பு பதினோராவது பட்டத்து விளங்கிய பின்வேலப்ப தேசிகர் காலமும் முன்போலவே கணக்கிட ௧௭௧௫. இவர் காலத்தே துவிதீய பட்டத்தமர்ந்தருளிப் பேரூரிற் பரிபூரணமான பின்வேலப்ப தேசிகர் காலமும் அஃதே யாகும். இப்பதினொரு பட்டங்களினு மில கிய பண்டார சந்நிதிகளில் இருவர் ஐம்பது வருடம்பட்டத்திருந்தன ரென்பது கர்ண பரம்பரை யானதால் பதினோராவது பட்டத்தின் காலம் ௧௭௫௫. ஆகவே இப்பண்டார சாத்திரம் ௧௪௭௫ முதல் ௧௭௫௫ வரையுள்ள காலத்ததாம்.

இப்பண்டார சாத்திரம் அச்சுக்கு வாராதிருந்தது பற்றி எனது நண்பர் பலர் பல முறைகளிலும் எடுத்துக் குறை கூற நான் அதைச் செவியேற்று அதனை வெளியிட விருப்ப முற்றிருந்த காலத்து ஓர் நாள் இறைவனருளால் எனது அகத்துள்ள பற்பல சுவடிகளைப் பரிசோதிக்கையில் வெகு பழமையான ஒரு சுவடியின்கண் மெய் கண்ட சாத்திரமும், பண்டார சாத்திர நூல்களும், சிற்றம்பல நாடி கள் சாத்திரக் கொத்தும், சதமணிக்கோவை, பூஜை அட்டவணை, மாபட்டவணை, பதிபசுபாசப் பனுவல் முதலிய பல சாத்திரங்களும் சேர்ந்திருக்கக் கண்டு மிகமகிழ்வுற்றேன். இதுகாறும் வெளிவரா திருந்த பண்டார சாத்திரத்தைப் படித்துப் பார்க்க அதனை விரை வின் அச்சூர்தியி லேற்றுவிப்பது ஆவசியகமெனப் புலனாயிற்று. இச் சாத்திரத்தை அச்சிட வேண்டி வேறு பிரதிகள் கிடைக்கக் கூடு மாயின் அவைகளையும் ஒருவாறு சேகரித்து ஒத்துப்பார்த்துப் பதிப்பி க்கலாமென்று நினைத்தேன். அது பற்றி எனது நண்பர்கள் பலரையுங்

கடித வாயிலாகவும் நேரிலும் விசாரிக்கையில் சில பிரதிகள் முற்றி யனவும் குறைந்தனவுமாகக் கிடைக்கப் பெற்றேன். அவைகளில் திருவாவடுதுறை யாதீனத்து கசு-வது பட்டத் திலகிய சுப்பிரமணிய தேசிகர்பால் ஞானோபதேசம் பெற்றுக் கல்வி யறிவொழுக்கங்களாற் சிறிய பெரியபூஜை-சுப்பிரமணியத்தம்பிரான் சுவாமிகள்பால் பல பிரதிகளைக்கொண்டு பரிசீலனமான கையெழுத்துப் பிரதிப் புத்தகம் ஒன்று கிடைக்கப் பெற்றேன். பின்பு எனது ஆசிரியர் மகா-ள-ள-ஸ்ரீ வித்துவான் ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள் தம் நண் பர்கள் பலருக்கும் யாழ்ப்பாணம் முதலிய பல விடங்களுக்குங் கடிதம் விடுத்து விசாரித்ததில் திருமயிலாப்பூர் மகா-ள-ள-ஸ்ரீ சே. வி. ஜம்பு லிங்கம்பிள்ளையவர்கள், திருச்சிராப்பள்ளியில் பென்ஷன் தார் மாஜிஸ் டிரேட் மகா-ள-ள-ஸ்ரீ தி. மா. சாம்பசிவம்பிள்ளையவர்களிடம் ஒரு சுவடி யிருப்பதாகவும் அவர்கள் அதை அனுப்புவதற்குச் சித்தமாக விருப்பதாகவும் தெரிவித்தார்கள். எனது நண்பராகிய பென்ஷன் தார் சப்ரிஜிஸ்டிரார் மகா-ள-ள-ஸ்ரீ ச. சிதம்பரமுதலியா ரவர்கள் தம க்குத் திரிசிரபுரம் மகா-ள-ள-ஸ்ரீ தி. மா. சாம்பசிவம் பிள்ளையவர்கள் இஷ்டரென்று சொல்லித் தாமே அங்குப் புறப்பட்டுப் போய் அச் சுவடியை வாங்கி வந்தார்கள். நான் மேற்போந்த பல சுவடிகளினு மிருந்து குறித்திருந்த பாடபேதங்களைச் சிதம்பரம் தமிழ்க் கலா சாலைப் போதகாசிரியர் மகா-ள-ள-ஸ்ரீ பொன்னோதுவா மூர்த்திகள் தம் சிரமத்தைக் கருதாது தம் சுவடியுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளும்படி உதவினார்கள். இவ்வரிய சாத்திரம் வெளிவந்து யாவரும் பயனடைவான்வேண்டி மேற் போந்தவர்களுக் கிருந்த பேரவாவையும் சைவப்பற்றையும் பொது நோக்கத்தையும் கேட்க வும் நேரிற் பார்க்கவும் மிக்க மகிழ்ச்சி யுற்றேன். இப்பெற்றி யமைந்த பெருந்தகையார்களுக்கு எனது மனப்பூர்வமான வந்தனத்தைப் பன் முறையும் அளிக்கின்றேன். இச்சிறிய சாத்திரத்தை யச்சிடுங்கால் ஆங்காங்கு எனக் கேற்பட்ட ஐயங்களைத் தீர்த்து, ஒப்பிடுதல் பரி சோதித்தல் முதலான பல காரியங்களையும் ஆரம்ப முதல் முடிவு வரையில் என்னுடன் கூடி யுழைத் துதவிய எனது அருமை ஆசிரிய ரான வித்துவான் மகா-ள-ள-ஸ்ரீ ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்களது கைம்மாறற்ற பெருநிலை வன்மைக்கு எனது மனப் பூர்வமான வந்தனத்தைப் பன் முறையும் செலுத்தக் கடமைப்பாடு டையே னாவேன்.

எனது விருப்பத்தின்படி, சென்னை நியாய கலாசாலைப் பேராசிரியர் திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., எம். எல்., அட்வொகேட் அவர்கள் தங்கள் பல வேறு பட்ட காரியங்களி னிடையே சிரமத்தைச் சிறிதுங் கருதாது இவ்வரிய சாத்திரத்திற்குச் சிறந்த முன்னுரை யெழுதி யுபகரித்த பேரன்பும், பெங்களூர்ச் சமஸ்தானகலாசாலை யுயிர்நூலாசிரியர் திராவிட கன்னட ஆங்கில பாஷா கலா வல்ல வித்துவான் திருவாளர் ப. மு. சோமசுந்தரபிள்ளை எம். ஏ., எல். டி., அவர்கள் சிறப்புப்பாயிரம் இயம்பிய பேரார்வமும் எனதுள்ளத் தென்றும் நிலவுக.

இவ்வினைஞனை இப்பெரிய முயற்சியிற் செலுத்தி நடத்தி யாதொரு விக்கினமு மின்றி இனிதின் இந்நூல் நிலவும் வண்ணம் நிறை வேற்றி யருளிய எல்லாம் வல்ல சிவபெருமானது திருவருளை எஞ் ஞான்றும் எனது மன வாக்குக் காயங்களாற் சிந்தித்துத் துதித்து நமஸ்கரிக்கின்றேன்.

வாழியர் நான்மறை வாழியர் சைவநூல்
வாழியர் காழி வளர்நகரம்—வாழியர்
மாத்துறைசைச் சந்தானம் வாழியர் குன்றத்தூர்
மாத்துறையுங் கச்சி வளம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ காழி,
குரோதன ஹு ஸிம்ஹ ராவி
உ௨௯

இங்ஙனம்,
ச. சதாசிவமுதலியார்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சென்னை நியாயகலாசாலைப் பேராசிரியர்
திருவாளர். கா. சுப்பிரமணியபிள்ளை, எம். ஏ., எம். எல்.,
அட்வொகேட் அவர்கள் எழுதிய

# முன்னுரை.

கடவுள், உயிர், உலகம் என்பனவற்றின் இயல்பையுந் தொடர்பையும் உண்மையாகத் தாமே கண்டுகொள்ளுதல் சிற்றுயிர்களுக்கு இயலாத தொன்று. ஆகையால் அவ்வுண்மை ஞானத்தை முழுமுதற் கடவுளே தக்க தவத்தினர்க்கு முதற்கணுணர்த்தி அவர்கள் பரம்பரை வாயிலாக ஏனையோரும் அதனை உணர்ந்து உய்யுமாறு கருணை செய்கின்றார் என்பது பெரியோர் கருத்து.

‘ஆரண மாக மங்க ளருளினு லுருவு கொண்டு
காரண னருளா னாகிற் கதிப்பவ ரில்லை யாரும்.’—என்பதுங் காண்க.

திருக்கயிலாயத்திலே எழுந்தருளியிருந்த ஸ்ரீகண்ட முதல்வர்பால் நந்திபெருமானும் அவர்பால் சனற்குமார மகாமுனிவரும் அவர்பால் சத்திய ஞானதரிசனிகள் என்பவரும் அவர்பால் பரஞ்சோதிமாமுனிவரும் ஞானோபதேசம் பெற்றனர். பரஞ்சோதி மாமுனிவர் தமிழ்நாட்டிலே திருவெண்ணெய்நல்லூரிலே தோன்றியருளிய வேளாளகுலதிலகராகிய ஸ்ரீமெய்கண்டதேவருக்குச் சைவ சித்தாந்த ஞானத்தை நல்கியருளினார். அவர், சித்தாந்த வுண்மைகளைச் சிவஞானபோதமென்னும் அரிய தலைமணி நூலுள் தொகுத்தமைத்துத் தமது மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மருக்கும் அறிவுறுத்தருளினார். அம்மாணாக்கரது பரம்பரை வாயிலாகத் தமிழ்நாடெங்கும் சைவசித்தாந்த அறிவு தழைத்தோங்கிற்று. அவருள் முதல் நின்றவர் மெய்கண்டதேவ நாயனாரது தந்தையின் சமய ஆசிரியராகிய அருள்நந்தி சிவாசாரியர். அவர் சிவஞானசித்தியார் இருபாவிரு

பது என்கின்ற இரண்டு நூல்களையும் இயற்றியருளினார். அவருடைய ஞானப்புதல்வர் மறைஞானசம்பந்த சிவாசாரியார். அவருடைய மாணவர் தில்லைவாழ்ந்தணர் தலைவராகிய உமாபதி சிவாசாரியார். இவர் சிவப்பிரகாசம் முதலிய எட்டு ஞான நூல்கள் இயற்றியருளினார். சிவஞானபோதத்திற்கு முன்பே திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்ற ஞானநூல்கள் சிறந்து விளங்கின. ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனாரது மாணாக்கருள் ஒருவராகிய மனவாசகங் கடந்தார் என்பவர் உண்மைவிளக்கம் என்னும் அருள் நூலை இயற்றியருளினார். இந்நூல்கள் பதினான்கும் மெய்கண்டசாத்திரம் எனப் பெயர் பெற்றன.

மேற்கூறிய உமாபதி சிவாசாரியரிடத்தே அருள் நமச்சிவாயதேசிகர் என்பவர் ஞானஉபதேசம் பெற்றுத் திருவாவடுதுறையில் தவமிருந்த சித்தர் சிவப்பிரகாசருக்கு உபதேசித்தருளினார். சித்தர் சிவப்பிரகாசரிடம் திருவாவடுதுறை ஆதீன முதற்றலைவராகிய நமச்சிவாய மூர்த்திகள் ஞான உபதேசம் பெற்றனர். அவர் தமது ஆசிரியரது கட்டளைப்படி திருவாவடுதுறையில் எழுந்தருளியிருந்து சிவப்பிரகாசதேசிகருக்கு ஞான தீக்கை செய்து சைவசித்தாந்த நூல்களை அறிவுறுத்தருளினர். அச்சிவப்பிரகாசதேசிகர் தமது ஆசிரியர்பால் விடைபெற்றுச் சிதம்பரம் சென்று அங்கே திருக்கோயிற் பூசைக்கு வைணவர்களால் நேர்ந்த இடையூறுகளை நீக்கிப் பின்பு ஞான நிட்டையிலே வீற்றிருந்தருளினர். பின்னர், ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள், மறை ஞான தேசிகர் என்னும் தக்க மாணவர்க்கு ஆசாரிய அபிஷேகம் செய்து உபதேசித்தருளினர். அவரும் ஞான நூலுணர்ச்சி பெற்ற வுடனே இடையறாத நிட்டையில் அமர்ந்தருளினர். ஆதலால், மீண்டும் நமச்சிவாய மூர்த்திகள் தமது பரம்பரையில் ஞானோபதேசமும் ஞான நூலுணர்ச்சியும் நிகழ்ந்தோங்கும் வண்ணம் அம்பலவாணதேசிகர் என்பார்க்கும் தக்ஷிணாமூர்த்தி தேசிகர் என்பார்க்கும் உபதேசம் செய்து பட்டம் கொடுத்து சைவசித்தாந்த நூல்களைப் போதித்தருளினார். அவருள், ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி தேசிகர் தசகாரியம், உபதேசப்பஃறொடை என்னும் இரண்டு அரிய நூல்களைச் செய்தருளிச் சின்னப்பட்டத்திலிருந்த வண்ணமே கடவுளோடு இரண்டறக் கலந்தனர். அம்பலவாணதேசிகர் வேறு பத்து

ஞான நூல்கள் இயற்றியருளினர். அவையாவன: தசகாரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத் தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாயநிட்டை வெண்பா, அதிசயமாலை, நமச்சிவாய மாலை என்பனவாகும். பாஷண்டநிராகரணம் என்னும் கண்டன நூலொன்று இவரால் இயற்றப்பட்டதாகக் கூறப்படுகின்றது. பூப்பிள்ளை அட்டவணை என்னும் உரை நடை நூலும் இவர் இயற்றியதென்ப. இவருக்குப்பின் நாலு பட்டங்கள் கழிய மாசிலாமணி தேசிகர் என்பார் பண்டார சந்நிதியாக வீற்றிருந்த காலத்தில் திருநெல்வேலி ஈசானிய மடாலயத்தில் இருந்த ஈசானதேசிகர் என்னும் சிறப்புப்பெயர்பெற்ற சுவாமிநாததேசிகர் என்பவர் ஒரு தசகாரியம் இயற்றினார். அவரே இலக்கணக் கொத்துரை செய்தவர். மாசிலாமணிதேசிகர் காலத்திற்கு இரண்டு தலைமுறைகளுக்குப்பின் பெரிய பட்டத்திலும் சின்னப்பட்டத்திலும் பின் வேலப்பதேசிகர் என்னும் திருநாமமுடைய இருவர் எழுந்தருளியிருந்தனர். சின்னப் பட்டத்திலிருந்த வேலப்பத் தேசிகசுவாமிகள் பஞ்சாக்கரப்பஃறொடை என்னும் ஞான நூலை இயற்றியருளினர். மரபட்டவணை, அநாதி யட்டவணை, வாருண பத்ததி மொழி பெயர்ப்பு, வாதுளாகம ஞான பூஜாவிதி மொழிபெயர்ப்பு முதலிய பல நூல்களுடன் அனுயோக வெண்பா என்னும் அருமையான நூலும் அவ்வாதீனத்து ஆன்றோரால் இயற்றப்பெற்றன வென்பர்.

ஸ்ரீமத் அம்பலவாணதேசிகர் செய்த பத்து நூல்களும், தக்ஷிணாமூர்த்திதேசிகர் இயற்றிய இரண்டு நூல்களும், ஈசானதேசிகர் செய்த தசகாரியமும், வேலப்பதேசிகர் இயற்றிய பஞ்சாக்கரப்பஃறொடையும் பண்டாரசாத்திரமெனப் பெரியோரால் வழங்கப்பட்டு வருகின்றன. திருவாவடுதுறை ஆதீனத்திலே ஞானாசாரியராய் வீற்றிருந்தருளிய பண்டார சந்நிதிகள் முனிவராலும் தமது ஞானாசாரியரிடத்தே சங்காபிஷேகம் பெற்ற ஈசானதேசிகராலும் இந்நூல்கள் இயற்றப்பெற்றமையான் அவற்றிற்குப் பண்டாரசாத்திரம் எனும் பெயர் ஏற்பட்டது. இவ்வரிய ஞான நூல்கள் மேலே கண்ட மெய்கண்ட சாத்திர உண்மைகளைத் தெள்ளிதின் விளக்குவன வாதலின் சைவசித்தாந்த நூல் கற்பார்க்கு இப்பண்டாரசாத்திர உணர்ச்சி மிகவும் இன்றியமையாததாகும்.

இவற்றுள் அம்பலவாணதேசிகரியற்றியருளிய தசகாரியம் பாசஞானம், பசுஞானம், சிவஞானம் என்றவற்றினிலக்கணத்தையும், கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அவத்தைகளினியல்பையும், மாயையைச் சத்தி யென்பதற்குக் காரணமும், தத்துவரூபம், தத்துவக்காட்சி, தத்துவசுத்தி, ஆன்மரூபம், ஆன்மக்காட்சி, ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் தசகாரியங்களினியல்பையும், சீவன் முத்தி, பரமுத்தி என்பவற்றின் வேற்றுமைகளையும், சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கும் பெருமையுடையது.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திதேசிகர் அருளிச்செய்த தசகாரியத்துள் சிவஞானபோதப் பன்னிரு சூத்திரக்கருத்துக்களின் தொகுப்பும், தசகாரியச் சுருக்க விளக்கமும், சிவானுபூதிச் செல்வர் சிறப்பும் இனிது உணர்த்தப்படுகின்றன.

சுவாமிநாததேசிகர் தாமியற்றிய தசகாரியத்துள் அவத்தை பத்தினையும் உபதேசம் பெறுவதற்குமுன் ஐந்தென்றும், பின் ஐந்தென்றும் பகுத்து அவற்றின் தன்மைகளைத் திட்பமாக விளக்கியுள்ளார். சித்தாந்த நூலினுட் போந்த ௩௬ தத்துவங்களையும் இறுதியிற் றொகுத்துக் கூறியுள்ளார்.

சன்மார்க்க சித்தியார் என்பது சைவசித்தாந்தத்துட் கூறிய ஞான நெறியின் இலக்கணத்தைச் சரியை, கிரியா யோக நெறியினின்றும் ஏனைச் சமயத்தார் கூறும் யோக நெறிகளினின்றும் பிரித்துச் செவ்விதில் விளக்குஞ் சீருடையது. சிவாச்சிரமத்தெளிவு என்பதனுள் துறவோர்க்குச் சிவதருமணி தீக்கையும், ஏனையோருக்கு உலக தருமணி தீக்கையும் உரியவென்பதைப் பல காரணங்கள் காட்டி ஆசிரியர் நிறுவுகின்றார். சித்தாந்தப்பஃறொடையுள் தக்க தலைவனாகிய ஞானாசிரியன்பால் தக்க தலைவியாகிய நன்மாணாக்கன் ஞானோபதேசம் பெறுமுறையை விரித்துரைக்கும் முகத்தான் சைவ சித்தாந்த வுண்மைகள் யாவற்றையும் ஆசிரியர் இனிது விளக்கியுள்ளார்.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்திதேசிகர் தமது உபதேசப்பஃறொடையுள் அவ்வாறே அரிய கருத்துக்களை அமைத்துத் தமது ஞானாசாரி

யருக்கு நல்ல சொன்மாலை புனைந்துள்ளார். சின்னப்பட்டத்துப் பின் வேலப்பதேசிக சுவாமிகள் செய்தருளிய பஞ்சாக்கரப்பஃறொடையும் அதன் ஆசிரியர் தமது ஞானாசாரியர் தமக்குச் சிவஞானம் விளக்கிய நன்றியைப் பாராட்டும் நன்மணிக்கோவையாக இலங்குகின்றது.

ஸ்ரீமத் அம்பலவாணதேசிகர் அருளிச் செய்த சித்தாந்த சிகாமணி யென்பது அகப்பற்று, புறப்பற்று நீங்கித் திருவருள் நாடு தற்குரிய உறுதியைக் கடைப்பிடித்தற்குப் பெரிதும் பயன்படும் நற்கருவி நூலாக அமைந்துள்ளது. உபாய நிட்டை வெண்பா வென்பது பற்றற்றுத் தன்னையும், தலைவனையும் காணும் உபாய முறையைத் தெரிவிப்பது. நிட்டை விளக்க மென்பது சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானச் செயலை இனிது விளக்குவ தாகும். உபதேச வெண்பா என்பது மனந்தூயராகிச் சரியை, கிரியா, யோகங்களிற் பயின்று ஞானம் கடைப்பிடிக்கும் முறை கூறுவ தாகும். அதிசயமாலை என்பது தகுதி யில்லாத தமக்குக் கூத்தப் பெருமான் குருமூர்த்தி வாயிலாக வெளிப்பட்ட அதிசயத்தை அம் பலவாணதேசிக சுவாமிகள் வியந்து கூறின துதிமாலை. நமச்சிவாய மாலை என்பது பேரின்ப அவாமேலீட்டினால் திருவருட்பேற்றை விரும்பித் தமது ஞானாசாரியராகிய நமச்சிவாயமூர்த்தியைப் பாடிய வாழ்த்து நூலாகும்.

அம்பலவாணதேசிகர் இயற்றியதாகக் கூறப்படும் பாஷ ண்டநிராகரண மென்றது இலிங்கதாரணம் செய்யும் வீரசைவர் சம யத்தை மறுக்கும் நோக்கத்தான் கூறப்பட்ட தில்லைப்பெருமான் புகழ் மாலையாக விளங்குகின்றது. அநுபோக வெண்பா வென்பது சைவ சித்தாந்த உண்மைகளை அநுபூதியாற் கண்ட பெரியவர் ஒருவர் கூறும் அருள் நூலாக விளங்கும்.

இதுகாறும் குறிப்பிட்ட பண்டார சாத்திரம் பதினான் கும் ஏனைய இரண்டு நூல்களும் அச்சியற்றப் பெறாமல் சைவசித் தாந்த நூல் வல்லார் சிலர்க்கு மாத்திரம் அறிதற் பயன்படும் ஏடு களில் மறைந்து கிடந்தன.

'நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்'

என்னும் திருமந்திரக் கருத்துக் கிணங்க, இந்நூல்களை [illegible]

உழைப்போடு எழுதுவித்து, அவற்றின் பல பிரதிகளையும் பிழையற நன்கு ஆய்ந்து, தமிழ் நாட்டினர் யாவருக்கும் ஞானஅமுத மளிக்கும் வண்மையோடு அவற்றைச் சிறந்த அச்சுவாகனத்தில் ஏற்றி வெளிப்படுத்திய பெருமை இருபெருஞ் செல்வமும் இயல் பினில் ஒருங்குபெற்று அவற்றின் உண்மைப்பயனைச் செவ்விதின் துய்க்கும் பெருங்குடிப் பெருந்தகையராகிய சீர்காழிச் சிதம்பரநாத முதலியார் அவர்களது இளவல் திருவாளர் சதாசிவமுதலியாரவர் கட்கும், அவருக்குத்துணை நின்று உதவும் கலைஞர்க்கும் உரியதா கும். தமிழ் நூல் போற்றுதலைச் சிறிதும் கருதாத இற்றைக்காலத் திலே பழுது படாமல் அரிய இவ்வருள் ஞான நூல்களை உலகிற்கு வெளிப்படுத்திய நல்லறி வாளர்களுக்கு ஒருவாறு இயற்றுங் கைம் மாறாகச் சைவ நன்மக்கள் யாவரும் இவற்றைப் பெற்றுக் கற்று மகி ழ்ந்து பெரும்பயன் எய்தும் வண்ணம் திருவருள் சுரக்குமாறு சிவ முழுமுதலை வேண்டுகின்றேன்.

40, எழும்பூர் இராஜவீதி
சென்னைப்பட்டணம்,
13—8—1925.

K. சுப்பிரமணியன்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பெங்களூர்ச் சம்ஸ்தான கலாசாலை உயிர்நூலாசிரியர்

வித்துவான்

ஸ்ரீ. ப. மு. சோமசுந்தரபிள்ளை, எம்.ஏ. (ஆனர்ஸ்), எல்.டி.,

அவர்கள் இயற்றிய

# பிரகடனாசிரியர் பெருமை.



சுடர்மணி யிலகும் வாரி சூழ்தரும் புடவி மல்கக்
குடவளை முத்த மீனக் குடைபவர் குறைக டீர்த்துப்
படுதிரைக் காத்தா லெம்மான் படிவதற் கியைந்த நீர
நெடுவயி னொழுக்கும் பொன்னி நீத்தமே புனித மாமால். (௧)

மணியுறழ் நிறத்த வெள்ளம் வண்டின மதுக்கூட் டுண்ணப்
பிணிமல ரவிழ்க்கும் பாங்கர்ப் பெருங்குடி துவன்றி மங்குற்
றுணிகதிர் மரபி னன்னர்த் தோன்றிய சோழ மன்ன
ரணியிறை யாட்சி செய்ய வமர்ந்தது புனனா டாங்கண். (௨)

வெண்பொடி திமிர்ந்த மேனி மிளிர்சடை விளங்கி யாரங்
கண்டிகை யாரத் தாரக் கணித்தவஞ் செழுந்தாற் பாசம்
விண்டாற் கலந்த மெய்யர் வியற்றிரு மடத்தைக் கண்ணுற்
கண்டவர் மடத்தை விட்டுங் கடிபொழிற் றுறைசை மூதூர். (௩)

அத்தல வா                னருமறை யொழுக்கச் சைவ
மெய்த்தவர்          மை யென்றால் விளம்புதற் கியலா தேனுஞ்
சித்தம துறப்பற் றுலச் சிலரை யிறைஞ்சி நேய
வித்தகத் தன்மை யுற்றே றனைவியந் துரைப்ப துண்டால். (௪)

சூழ்விவென் மதியஞ் சூடுங் கோவியல் ஞானக் கொண்மூப்
பொழிவரு நியச் சைவப் புனிதரு ளாவர் தேவர்
விழைவுறு மவர்சீர்ச் சொல்ல வெல்லலாம் பவத்தை யன்றூர்
தழைதரு மொழியண் டார சாத்திர மென்ப வான்றோர்.

வேறு.

வித்தெனும் பகுதி ( ) ம
விரவிய வேதமோ நான்குஞ்
சத்தெனும பவனின் வந்தவப் பொருளைச்
சார்த்துமவ் வாகமம் பலவுந்
தொத்துமுத் தமிழி னகம்புறந் தழுவிச்
சுருதிமெய் கண்டமெய்ந் நூலு
மெத்திற மொழியு மத்திற நவலு
மிருந்தவே யிவையென வறைப. (௬)

புரிசிவ தவமுன் றமைதியின் முற்றிப்
புண்ணிய வருள்பதிந் திலகி
யிருள்கடி விளையி னெப்பது வாய்ப்ப
விறைநிறை பருவத்தி னுய்த்துக்
குருவடி வினனுய்த் தனிதிரு வாணைக்
கொள்கையி னறுவழி தூய்தா
வருள்தரப் புரிந்து திருவெழுத் தைந்தி
னுற்றினைத் தேற்றியப் பதியை. (௭)

உ [illegible] கழு பசுவை யைவகை மலத்தை
யுள்ளவா வுணர்ந்திட வுணர்த்தி
யருமலப் பிணியை யவிழ்த்தரும் பேற்றை
யமைதக வருளியம் மலந்தா
மிரிவன விலவாய்ப் புகுவன விலவா
யிருத்தியவ் வியல்புறு தன்மை
மருமலர்ப் பதத்தி னுணர்பொரு ளாதி
மருவிய மூன்றினைக் கழற்றி. (௮)

எறுழ்வலிக் கதிரைப் புணர்தரு விழியு
மியைந்தநீ ரிடைசெறி நிழலு
முறுவலித் தீயி னுறழ்கரும் பொன்னு
முறுபுன லுவருமப் பரிதி
சுறுவுறு மீனு நிகர்தனிக் கலப்பிற்
கனசவம் பலமதே தாய்ப்பப்
பெறுநெறி யிசைக்கு மாண்பின விந்நூற்
பெரியன புரிவன விவற்றை. (௯)

இருதிறத் திருவு மொருவயிற் பெற்றிங்
கிமைதவ வொழுக்கமோ டன்பர்
கருதரன் பதமே கணித்தரு ளெறியிற்
கருணையே நலமெனக் கொண்டு
களிசறுத் தவையின் வேந்தரு முவக்குங்
காட்சியா ரிதலிற் சிறந்தார்
முருகவிர் காழிச் சிதம்பர நாத
முதலியா ரினிதுளங் களிப்ப. (௰)

வேறு.

எழுதாத கிளவியென வெழுதாத வெழுத்ததனி
னெழுது வித்திங்
கெழுதாக வகையெவர்க்கு முபகரித்தான் யாவரொளி
னியம்பக் கேண்மி
இழுதாறு பொறிவண்டர் மொய்த்தமுத கிதவோலி
யுளார்ந்த பூமே
விழுதாக வுறுவருளங் கசிந்துருக்கும் பூந்தரா
பிசைந்து வாழ்வோன். (௧௧)

ஆன்றநறுந் துளவணிமா லைப்புயத்து மான்றபுரி
யமர்ந்து வீறு
சான்றவமு தக்கடலிற் றன்னகிரம் மதியெனத்
தழைப்பச் சால்பி
னோன்றவருட் குரிசில்சபா நாயகன்றன் றவத்தொழித்த
வினாயல் சேயத்
தோன்றவிரு நாற்புலவர் தமைப்பெயரிப் பாமாட்டித்
தொல்சீ ராளான். (௧௨)

திருந்துகலை யளக்கர்தமை யாங்கிலத்தெசந் தமிழ்க்கலந்த
நிண்ணத் தெப்பம்
பொருந்துபுந்தி திக்கடந்து புட்கலமா நற்பொருளைப்
போற்றி நன்ன
ரிருந்துசிவ வேடர்தமைச் சிவனெனப் பரசியவ
ரேற்ற முன்னி
யருந்துமவர் சீர்பரவுஞ் சேக்கிழார் திருமரபி
லுரர்ந்த சைவன். (௧௩)

சொற்றவா சகம்பிறழாச் சுகுணவான் கம்பீரன்
றூயன் சீலன்
கற்றவா வென்புகல்வல் புலத்தகையர் புலத்தகஞ்சொல்
கவிஞன் வாக்கி
யுற்றபே ருளத்தாலுஞ் சன்மார்க்க நடையாலு
முயர்சொல் லாலும்
பெற்றமே வியவரனை வழுத்துசதா சிவநாமப்
பெற்றி யோனே. (கச)



உ

# சூசிபத்திரம்.


| | | | | |
|---|---|---|---|---|
| ௧. | முகவுரை. | .... | .... | i |
| ௨. | முன்னுரை. | .... | .... | x |
| ௩. | சிறப்புப்பாயிரம். | .... | .... | xvi |
| ௪. | சூசிபத்திரம். | .... | .... | xx |
| ௫. | அம்பலவாணதேசிகர் தசகாரியம். | | .... | ௧ |
| ௬. | தக்ஷிணாமூர்த்திதேசிகர் தசகாரியம். | | .... | ௯ |
| ௭. | சுவாமிநாததேசிகர் தசகாரியம். | | .... | ௰௩ |
| ௮. | சன்மார்க்க சித்தியார். | .... | .... | ௰௭ |
| ௯. | சிவாச்சிரமத் தெளிவு. | .... | .... | ௨௧ |
| ௰. | சித்தாந்தப் பஃறொடை. | .... | .... | ௩௫ |
| ௧௧. | உபதேசப் பஃறொடை. | .... | .... | ௪௭ |
| ௧௨. | பஞ்சாக்கரப் பஃறொடை. | .... | .... | ௭௮ |
| ௧௩. | சித்தாந்த சிகாமணி. | .... | .... | ௮௧ |
| ௧௪. | உபாயநிட்டை வெண்பா. | .... | .... | ௯௩ |
| ௧௫. | நிட்டை விளக்கம். | .... | .... | ௱ |
| ௧௬. | உபதேச வெண்பா. | .... | .... | ௱௪ |
| ௧௭. | அதிசயமாலை. | .... | .... | ௱௧௰ |
| ௧௮. | நமச்சிவாய மாலை. | .... | .... | ௱௨௰ |
| ௧௯. | பாஷண்ட நிராகரணம். | .... | .... | ௱௩௮ |
| ௨௰. | அநுபோக வெண்பா. | .... | .... | ௱௪௧ |
| ௨௧. | ஞானத்தாராட்டு. | .... | .... | ௱௬௪ |
| ௨௨. | உற்சவ விளக்கம். | .... | .... | ௱௭௭ |
| ௨௩. | முத்திபஞ்சாக்கர மாலை. | .... | .... | ௱௮௰ |
| ௨௪. | பரிசோதந பத்திரம். | .... | .... | ௱௮௨ |
| ௨௫. | பிரதி பேதங்கள். | .... | .... | ௱௮௨ |

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பண்டார சாத்திரம்.

## அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

## தசகாரியம்.

நேரிசை வெண்பா.

தலையானை மாவித் தலையானை மின்பத்
தலையா வடுதுறைத்தா டந்த—தலையம்
பலவாணன் பாட்டிற் றசகா ரியத்தைப்
பலகால் வணங்குகையாற் பார்த்து.

மங்கல வாழ்த்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒருவிய விச்சை யாதி யுதயமா யொடுங்க வென்பான்
மருவிய கலாதி யிச்சை மறைந்திட வீசன் றன்பால்
விரவிய விச்சை யாதி விளங்கியாங் கொடுங்க வேண்டித்
திருவருள் வார ணத்தின் றிருவடி சென்னி வைப்பாம். (க)

அருந்திடும் வினையு மைய லாக்கிடு முடலும் போதத்
திருந்திடு மலமு மின்னே யிரிந்திட வுயிரு மின்பம்
பொருந்திட வுமையாள் கண்டு போற்றிட வம்ப லத்தே
திருந்திட நடனஞ் செய்வோன் றிருவடி யுளத்தின் வைப்பாம். (உ)

சதுமறி யாமை நீரத் தரித்தரு ளுருவு கொண்டு
நதிதரு வெண்ணெய் மெய்யன் றுலங்குசந் ததிக்கோர் ஞானக்
கதிபெனத் தோன்றித் தென்று வடுதுறைக் கண்ணி ருந்து
மதிதரு நமச்சி வாயன் மலர்கம லங்கள் போற்றி. (ங)

அரனரு ளுருவா யாளிக் களித்திட வுளத்தை மாயா
வரமது பிளக்குத் தூற்ற மொழித்துகின் மமை தாக்கி
வரமது தனைய ளித்து மருவுமா வடுத்து றைக்கோர்
பரன்மறை ஞான தேசன் பதாம்புயம் பற்றி வாழ்வாம். (௪)

## நூல்.

பதிபசு பாச மென்னப் பகர்வரப் பசுத்தா ளுகு
மதியது வற்றுப் பாசம் பதியென வரினு மாயா
விதிசெனு மலமே யாயு மேலதாம் பதிக்குக் கீழாங்
கதிமதி யவத்தை பத்தாய்க் கழறுவன் கருதி டாயே. (௫)

பிறவியிற் குருடர் கையிற் பெற்றிடுங் கோல்போ லான்மா
வறிவையா ணவமே மூடி யழித்திடக் கலாதி கோலாய்
நெறிதரச் செயவி னின்று நிலையிலாப் பொய்மெய் யாக
வெறிதர நரக சொர்க்க மேவலாற் பாச ஞானம். (௬)

கேவல மலத்தி னுண்மை கிளரொளி கலாதி வந்து
மேவினு மலமே யாவி வேண்டிடும் பொருள்கா ணுமற்
காவலாய் மறைத்து நின்று காட்டிடும் பொய்மெய் யாக
வாவதாற் சகல மாகு மாயினுங் கேவ லந்தான். (௭)

இயைந்திடுஞ் சரியை யாதிக் கெழுந்தவப் பதங்கள் பொய்யாய்க்
கயந்துமெய் வேற தாகக் கருதிக்கண் டுயிர்மே லாகப்
பயந்திடல் பசுவின் ஞானம் பார்க்கினின் மலம தாக
வுயர்ந்திடுஞ் சாக்கி ரத்தி னுண்மையென் றுரைப்பர் மேலோர். (௮)

ஒத்திடு மலம கற்றி யுயிரினை யணைத்துத் தம்பால்
வைத்திட விச்சா ஞானச் செய்தியை வைத்து ஞானப்
பித்திட மலங்க ளெல்லாம் பெயர்ந்திடப் பின்ன மற்றுச்
சத்துட னிச்சை மேவித் தரிப்பது சிவஞா னந்தான். (௯)

திருந்திய கருணை யாலே திருவுரு மூன்ற தாகி
யிருந்திடு மீசர் நோக்கு மியைந்திடு முயிர்க ணேக்குந்
தெரிந்தபுண் ணியமுஞ் சற்றுந் தெரிந்திடா தனவு மொத்து
விரிந்திட வறிவு மேலாய் விளங்கினற் பாத மாமே. (௰)

பாசவே றறுமா றுக்கும் பகர்சரி யாதி நான்கான்
மாசறும் பசுமே லாக மன்னுமவ் வாற தாகத்
தேசுறு மனுவு மீச னருளுமவ் வாற தாக
வேசறு முயிர தாக விளைந்துளம் புகுந்து நிற்கும். (௧௧)

அகத்திரு ளகற்றி நாலாஞ் சத்திநி பாத முற்றுப்
பகைத்திடு முடலை நோக்கிப் பயந்திடுஞ் சகத்தைப் பார்த்துத்
திகைத்திடும் பிறவி நோக்கிச் சேர்ந்திடுஞ் சுற்றங் கண்டு
பகைத்திடு மிவரே யென்னப் பதைத்துமெய் நடுங்கா நிற்கும். (௰௨)

புகுத்திநன் கறிவு ளத்துப் பொய்மலம் புறம்ப தாக
வகற்றிப்பே ரறிவே யாக்கி யாகுமுப் பொருள்கள் கண்டு
பகுத்திட வுளத்தி னின்ற பரம்பொரு டானே யிந்நாட்
செகத்தவ தரித்தே யுள்ளத் திகைப்பது தீர்ப்ப னாசான். (௰௩)

அண்டிடும் படலங் கின்றங் களித்திட வொளியைக் கட்குக்
கண்டிடும் பொருள்க ளொன்றுங் கண்டிடா வாறு போல
விண்டிடு மலமு னக்கு விளங்கிடு மறிவு மேலாய்க்
கொண்டிடும் பொருள்கள் காட்டிக் கொடுத்திடி னன்றிக் காணாய். ( )

கண்ணிகழ் படலத் தோற்குக் காட்டினுங் காணா னொன்றுங்
கண்ணிகழ் படல மற்றாற் காட்டிடக் காணு மாபோ
லுண்ணிகழ் மறைப்பு மின்னே யொழிந்ததில் வுடலு னக்குத்
திண்ணிய மறைப்பு மன்று தெளிந்திடு மொளியு மன்றாம். (௰௫)

காட்டினா லன்றிக் காணா தென்றுமுன் னோர்கள் செய்யு
ணாட்டிய தென்னை யென்னி னாட்டமற் றவர்க்குக் கோலக்
கூட்டியவ் வழியுங் காட்டிக் கொடுப்பவர் போல மாசு
வீட்டிடா தவர்க்குக் காட்டல் விதிவழி பதிய தன்றாம். (௰௬)

விதிவழிக் கில்லை யென்றும் விளங்குயிர்க் குள்ள தென்றும்
பதிநடை பகர்வ தென்னோ படலமே படர்ந்த கட்குக்
கதிர்நடை யின்றாய்க் காட்டுங் கருத்தது போல வீசன்
மதிநடை யின்றாய்க் காட்டு மென்றுநீ மதித்தி டாயே. (௰௭)

வுடலை மிக்கோர் விதித்திட வன்ற தாகக்
லென்னோ வானிற் கிளர்கதிர் தனைவி ளக்கோ
வளித்திடு மாத வன்ற னடைந்திடாக் கண்போ லாவி
யொளித்திரு ணிற்கப் போக முதவிடு மொளிய தன்றாம். (௰௮)

சத்தியா மாயை யென்னச் சாற்றிய தென்னை நூல்கள்
புத்தியாய் மறைப்புத் தீர்த்துப் புண்ணியம் புகுத்த லானுஞ்
சித்ததா மூலக மெல்லாஞ் செனித்திடு வித்தை யானு
மத்தன்றன் சத்திச் செய்திக் காஞ்செல்வ யாத லானும். (௰௯)

மயக்கிடு முடலை யென்று மறைவல்லோ ருரைப்ப தென்னை
யியக்கிடுங் கோல தாகி யிசைந்திடுங் குருடு போலத்
தியக்கிடு முடலை தாகிச் சேர்ந்துபோய் மெய்ய தாக
முயக்கிடு மலம தற்றான் முன்னிலை மயக்க மின்றாம். (௨௰)

கோலதி லிச்சை கூரக் கொடுத்தது குருடே யாமான்
மாலது கலைதி தன்னின் வந்தது மலத்தா லன்றே
கோலது போகந் துய்க்கக் கொடுத்தது நடையாய்க் கன்மத்
தாலதில் விகார மாகி யலைதலான் மயக்கு மென்பார். (௨௧)

இருட்டகால் விளக்கைக் கையா லெடுத்திடு வார்கள் கட்குப
பொருட்டா வேண்டு மாபோற் பொருந்திய மலத்தி னாலே
தெருட்டிடுங் கலைதி வந்து சேர்பொரு ளனைத்துங் காட்ட
விருட்டலை பதார்த்தம் போலா மிருந்தரு ளொழுந்த போது (௨௨)

மறைத்திடு மிருட்ட தன்றான் மன்னிய விளக்குக் கட்கு
நிறுத்திடும் பதார்த்தத் தொன்றாய் நிற்றலா லிருட்டோ டொன்றா
யறுத்திடுங் கதிரைக் காட்டா தாகலான் மயக்க மாக
வெறுத்திடு முடலு மிவ்வா றாமென விடுவர் மிக்கோர். (௨௩)

இயல்பது விசேட தாக வியம்புவ தெப்பொ ருட்கு
மயலது வன்னி யத்தின் மன்னிடல் பொதுவ தாகு
மயலதிற் சார்த லின்றி யடங்கறன் னியல்ப தாகு
முயலுமப் பொருட்குத் தக்க முறைமையைப் பகுத்துச் சொல்வாம்.()

தத்துவ மனைத்து நோக்கித் தனித்தனிச் செயல்கள் கண்ட
வொத்தகன் னுருவ மாகு மொன்றையோன் றுணையா திது
சத்தியஞ் சடமே யென்னத் தானதிற் றிடுதல் காட்டி
நித்திய மன்று மின்று னிர்குண மென்றல் சத்தி. (௨௫)

அனைத்தையுந் துறந்தோ மென்றான் யாவர்க்கு மேனு மென்ன
நினைத்திட வுயிர்க்கு நுட நிகழ நாள தாகச்
செனித்தனை நமை னின்றாங் தினைத்தனை தெளிந்து சற்று
முனைத்தனி நினைந்த தில்லை யுறுந்தெய வருள தென்றே. (௨௬)

அழிந்திட நினைம றைக்க வகவிரு ளிரிய மேலை
யெமர்க்கி யிச்சை முன்று மிரிந்திட நின்பா லொத்து
ளழுந்திடல் கா சி யாகுந் சொப்பன மருள தென்கே
யெழுந்திடு நினைவ டக்கி யிசைந்துனைத் தந்த கோவே. (௨௭)

இருந்திடு மகம தாக வெழுந்திடு நினைவ டக்கித்
தெரிந்திடுந் தனையி ழுந்து திருவரு ளிச்சை கூரப்
பொருந்திட லருளி னிச்சை பூண்டது சுழுத்தி யாகுந்
திருந்திட வதனிற் செய்தி செய்திட வேண்டு மெற்கே. (உஅ)

உலகினை விளக்கா நிற்கு முயர்கதி ரொளிய தாகி
யிலகிய கண்ணைச் செய்தி விளக்கிடா போல ஞான
நிலவிடு முயிரச் செய்தி நிறுத்திடா வதுவே யாகக்
குலவிட றுரியஞ் சுத்தி கொள்ளுமேற் சிவம தாகும். (உகூ)

ஓங்கிய ஞானந் தன்னி லொடுங்கலே யன்றி நேயந்
தாங்குதற் கில்லை யென்னிற் றனையறிந் திட்ட தின்றும்
வாங்கியே சிவத்தி னுன்னை வைத்தது மதிய தாகு
நீங்கலோ வருட்கு நேய நிகழ்த்திட வேண்டு மெற்கே. (௩0)

கிரணமக் கதிர தாகா கிளர்கதிர் கிரண மாகா
வரணது போல வீசன் கருணையா மருளு மொப்பாங்
கரணமே யுனக்க தன்றாய்க் காட்டிட வுதிக்கு நேய
மரணமு மிரிய வொன்றாய் மன்னுத லதீத மாகும். (௩க)

இகழ்ந்திடு மலம கற்றி யிலங்கிய வுயிரை வாங்கி
மகிழ்ந்திடக் கருணை யுள்ளே வைத்தத னியல்பு சற்றுந்
திகழ்ந்திடா தடக்கி நிற்ற றெளிவுறு சிவமே யாகு
நிகழ்ந்திடு முருவ மாதி நிலைமையு மிதனுட் சொல்வாம். (௩உ)

பித்ததா யுளத்தி னின்ற பிரிவிரு ளகல ஞான
வித்ததாய் நிற்கும் வீரம் விட்டரு ளிச்சை மேவ
வைத்தது ரூப மாகும் வருமருட் செயல தாக
வொத்தது காட்சி யாகு முயர்சிவ மதற்குத் தானே. (௩௩)

சத்தியின் செயல்க ளெல்லாந் தற்சிவ மதனுக் கின்றா
யொத்திட லுணர்வ ளித்த லுயர்சிவ யோக மாகும்
பித்தது வாகிச் சற்றும் பின்னம தற்றுத் தன்னுள்
வைத்துயிர்ப் போக மாக வளர்தலா ராமை தானே. (௩ச)

பரந்திடு மிச்சை மூன்றும் பொருந்தியன் றென்னை நோக்கி
யிரந்ததிங் கெங்கே யென்னி லீந்திட வாங்கித் தன்னுட்
கரந்திடு முன்னை யீசன் காறலை போல வொன்றாய்ப்
பரந்திடு ஞான நேயம் பற்றுமா னாவு முற்றே. (௩ரு)

அழித்திடு மலமும் யாணு யாகிய வுடலு மென்றாற்
செழித்திடும் வினையு மெங்கே தீர்த்தனை யென்னின் மாசு
மொழித்தசஞ் சிதமு நாலாஞ் சத்திநி பாதத் தாசான்
விழித்திட வேற தாகும் விட்டவவ் வகையுஞ் சொல்வாம். (௧௬)

நிறுத்திடு முடலைக் காட்டி நீக்குத லாலே முன்னை
யறுத்ததா மலமு மின்பா யாக்கிடு மகில மெல்லாம்
பொறுத்தலாற் றன்பாய் மற்றச் சஞ்சித மொழித்த தாகும்
புறத்திடு தத்து வத்தின் சுத்தியி னுடலம் போமே. (௧௭)

நின்றிடா வுடற னித்து நீங்கிய வான்மாக் கூடா
தொன்றிடான் சிவனு டற்க ணொத்திடு பவரா ரென்னிற்
பொன்றிடா வுயிரைத் தன்பாற் புகுத்துவா னுடற்கு வேறாய்ச்
சென்றிடான் சிவ னொத்து நிற்குமா போல நிற்பன். (௧௮)

மலவிரு ளகற்ற வாய்த்த கலைபது கொடுத்துக் கன்ம
பலமுள தருந்தித் தீய மறைப்பது பறித்து ஞான
நிலையுள மடிமை யாக நின்றிடு மன்றே யென்றாற்
கலைமுத லுடைமை யாகக் கைக்கொளல் வியப்போ காணில். (௧௯)

கண்ணினால் விடையந் தன்னைக் கவர்ந்திடு மாவி போல
நண்ணிய தனுவ தாகி நாடிய வுயிரை வாங்கிப்
பண்ணிய தனுவி னூடும் பலவுயிர் கவர்ந்தங் கன்பாய்
நண்ணுமப் போகங் கொண்டு நற்பலம் பதிப்ப னீசன். (௨௰)

தனுவது கருணை மேனி தானுவு மனுவு மொன்றாய்
நினைவது கருணை தானாய் நிற்றலாற் போக மன்பாய்
மனவிரு ளிரிய மற்றோ ருளமது மருவி மாயா
வினையறும் வினைபு சிப்பான் மேலவன் கருணை யாலே. (௨௧)

உற்றவன் சிவனே யாக வொத்துடற் சிவன தாகப்
பெற்றவ னருச்ச னாதி பிடிப்பதென் மலைவு தீரச்
சொற்றிட வேண்டு ஞேயந் துலங்கிய வாவி யான்மா
நற்றிரு மேனி யாகு நாடிலங் காங்கி யாமே. (௨௨)

மாசிலா வாவி யங்க மன்னிடு முயிரா மீச
னாசிலாத் தேகந் தேகி யானது போல மாணன்
றேசுலா மேனி யங்கந் திரண்டெழு குருவின் மேனி
யேசிலா வுயிரே யாகி யிசைந்ததங் காங்கி யாமே. (௨௩)

வெம்மையுற் றரக்கி னக்க மேவிய வரக்கின் றன்மை
செம்மைசற் றுண்டோ சீவ னீசனைச் சேர்ந்தொன் றாகித்
தம்மையற் றொன்றாய் நிற்ற றகுமுத லொன்றே யன்றோ
வம்மையற் றளித்த மேனி யதுபுகுந் துருக்கா நிற்கும். (சச)

அகம்புற மென்றி ரண்டா மறிவதை யொழித்து மாயாச்
செகம்புற மாக்கித் தன்னைத் தெரிசித்துச் சிவனோ டொன்றா
யிகம்பர மற்று நிற்கு மின்பத்து ளதீத மான
சுகம்புரி கருணை மேனி தொழுதுகண் டுருகா நிற்கும். (சரு)

ஆணவ மடைந்த வான்மா வாணவ மாய்ம றைந்து
காணுறுங் கருணை மேனி காணுறா போல ஞானத்
தாணுவை யடைந்த வான்மாத் தாணுவாய் மறைந்து நேயம்
பூணுறுங் கருணை மேனி போற்றியொன் றாயே நிற்கும். (சசு)

திருவுரு மூன்றி டத்துந் திருந்திய வணக்க மொன்ற
வருளிய தியல்பா மென்னை யடைந்திடு பவர்க்கி யானிங்
கிருளகற் றிடுவ தென்னோ வியைந்திடு மதைத்தி னின்றும்
பருவரற் படுதல் பார்த்துப் பரிந்திடல் கருணை வாழ்வே. (சஎ)

அங்கமுள் ளங்கி யொத்துத் தங்கலா லங்கி தானு
மிங்குயி ருள்ளே யீச னியைதலாற் கருணை தானுய்த்
தங்கிடு மிரும்பி னுள்ளே தரித்திடு மெரியே போலப்
பொங்கிய பாசம் போக்கிப் புகுந்திடுங் கருணை யாலே. (சஅ)

சீவனச் சிவனோ டொத்துத் தெளிவுறு முத்தி தன்னைப்
பாவினிற் சீவன் முத்தி பகருமேற் பரம முத்தி
மேவுவ தென்று மந்நூல் விளம்புமால் விகற்பங் கேணீ
யாவது மிரண்டு மொன்றே யாயினும் விகற்பஞ் சொல்வாம். (சகூ)

முத்தியு மிதுவே யாகு முடிவும்வே றில்லை யாகுஞ்
சித்தமு மிதுவே யாகுந் தெளிவுமே வில்லை யாகும்
பித்துமின் னொழிவே யாமேற் பேறிதற் கில்லை யாகு
மொத்தவிவ் வுடலு மிந்நா ளூறுவது மில்லை யாமே. (ருo)

ஆதலா லிரண்டு மொன்றே யாயினுஞ் சிவற்கு ளத்தை
யீதலான் மேனி யாகி யிசையினுங் கருணைமேனி
நீதியால் வழிபா டிற்று நின்றிட லானு முண்மைத்
தீதிலாச் சிவன் முத்திச் செயலெனச் செப்பு நூலே. (ருக)

பருவரன் மலத்தி னாலே படுமுயி ரனைத்துந் தன்பான்
மருவிடக் கொணர்ந்த வீசன் வடிவனைத் தினுக்கும் பூசை
யொருவிடிற் றுயர மாத லாற்றிடின் மகிழ்ச்சி யாத
றருமிவை யிரண்டு நீங்கத் தருதலே பரம முத்தி. (௫௨)

ஈசன்மே லெழுந்த வன்பு மீசனுஞ் சிவன் றன்மேல்
பேசிய தன்ற வன்றாட் பின்னமே யற்ற வன்பா
லாசையை யவனை யூப்பி யமர்ந்ததா லவனே யாகு
மாசிலா நூலோர் மிக்கு விதித்தலான் மதித்த நாமே. (௫௩)

முத்தியை நான்க தாக மொழிந்தனர் பரம மாகு
முத்தியோ டைந்த தாக மொழிந்தன ரில்லை யாருஞ்
சத்திய வவத்தை தன்னைச் சாற்றின ரில்லை முன்னோ
ருத்தம னுரைத்தா னென்னு முணருமா றுணர்ந்து கொள்வாய். (௫௪)

முன்னவன் வடநூ னோக்கி மொழிந்தனன் போத மற்றோன்
பின்னவ னந்நூ னோக்கிப் பெயர்த்தனன் சித்தி யாக
வன்னவை யிரண்டு நோக்கி யறைந்தனன் புடைநூன் மற்றோன்
சொன்னவை மூன்று நோக்கித் தொகுத்தன னவத்தை பத்தாய். ( )

## நேரிசை வெண்பா.

தசகா ரியமைம்பத் தஞ்சாய் விருந்தத்
திசையா வருள்புரிந்தா னென்று—வசைதீர்ந்த
மேலா வடுதுறைக்கோர் வீறம் பலவாணன்
மாலா மருவினர்க்கு வந்து.

அம்பலவாணதேசிகர் தசகாரியம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## தக்ஷிணாமூர்த்திதேசிகர் அருளிச்செய்த

# தசகாரியம்.

திருந்துவட கயிலைதனிற் பரமசிவ னளித்த
சிவஞான போதமுணர் நந்திமுதற் சிறந்தே
வருங்குரவர் வெண்ணெய்நல்லூர் மெய்கண்ட தேவன்
வழங்கருட்சந் ததியினமச் சிவாயதே சிகனு
மிருங்குரவ னளித்தசிவப் பிரகாச தேச
னிலங்குமறை வனத்தருகோர் வனக்குகையி லுறைநாட்
பொருந்தியவன் றிருவடிக்கீ ழவனருளே வலினுற்
போந்தருளா வடுதுறைவாழ் நமச்சிவா யனைப்புகழ்வாம். (க)

பொங்குமத வைங்கரனைப் புகழ்ந்துருகிப் போற்றியென்றும்
பூரணமா மரனருளைப் புணர்ந்துபோற்றி செய்தே
பங்கமறச் சத்திநிதாய்ப் பார்மருட வரவம்போற்
பரந்திழிந்தே வந்தவர்க்குப் பரஞான வடிவாய்த்
தங்கியமா னிடர்போலத் தரித்தருளி யருட்டீக்கை
தானளித்துச் சிவஞான போதத்தி லுண்மைதனி
லங்குரைத்த வவத்தைபத்து மாராய்ந்திங் கறைந்திடுவ
னவையென்போ லீசனிற காலுலகேற் றலைத்தவையாம். (உ)

முதற்கருத்துச் சங்கரனே முதலென்ன மொழிந்திடல்காண்
முற்றுமற்றி னத்துவித முப்பொருளு முண்டென்ன
விதற்கடைவே மூன்றிலுயி ரியாதெனதா லுண்டென்ன
லெழிஞன்கின் மூன்றவத்தை யிழித்திடலா லேற்றிடுதன்
மதிக்கையினுற் பிரமமென்றே வருமைந்தின் மறுத்திடல்கேள்
மதித்தறிவார்க் குயிர்க்குயிராய் மன்னிநின்றே காட்டுதலாம்
பதிக்கொருமை மலத்துரிமை பகருயிரே யறியுமதாற்
பதிபாசந் தெரித்திடலே பாராதிற் பாங்குறவே. (ந)

எற்றவினை யிருபாலு மணைந்துநின்றீ தாகாம
லீதலினு மெனத்தேறி யிசைந்தறிவே நாமென்றே
பார்த்துடனே தெளிவாகிப் பாரியனும் பகைப்பொருளும்
பாராம லறிவாதல் பாரேழில் ரூபமதாந்

தேற்றுமெட்டின் முப்பொருட்கு மூன்றறிவு மோதித்
தேர்ந்திடவே திருமேனித் தெளிவருளி மலங்காட்டிச்
சாற்றியிடு மான்மாவி னுண்மைதனைக் காட்டியபின்
றளராம லடைத விலக்கணமுஞ் சாற்றி. (௪)

பற்றவதி லருட்காட்சி பகர்ந்திடவங் கதுவாகிப்
பரஞான வின்பெனவே பணியறலும் பாரித்தே
சொற்றவிது கூடாதே யுபாயவழி தனையருளாற்
சொல்லியோகத் தான்கூட்டிச் சுத்திசெய்த லொன்பதிலா
முற்றவதில் ரூபகமுந் தெரிசனமுங் காட்டியபின்
மூழ்கியிட வின்பொழிக்க முன்னையில்லா வான்போலக்
கற்றமலன் பணியாகக் கருதிமலங் காணுதாற்
கதிர்முன்னி னிருள்போலக் காண்பதில் யோகமதாம். (௫)

காட்டியே சிவானுபவங் காணுமை காட்டாமற்
கண்கதிர்போ லொங்குமாய்க் கலந்தின்பாய் நின்றிடவே
கூட்டியே தன்னையென்று மொன்றிரண்டு மில்லாம
லான்போக முயிர்க்கறவே யுள்ளபடி யுள்ளதெல்லா
மூட்டியே கொண்டிடுவன் முன்னின்ற யானவைதான் [றதனி
முன்னுன்மாக் கருவியும்போன் மொழிந்திடும்பத் தொன்
வீட்டும்வினைப் பயனுறுவ ரெளிதாக வேனு
மீராறின் மூன்றுருவு மேத்தியன்பு செய்திடவே. (௬)

பாசவடி வேபகுப்பி லறிவதுவே ரூபகமாம்
பார்க்கிலதி லொருசெயனு மறநிற்ற றெரிசனமாந்
தேசுளநா மிதிலணைந்தோ முன்னுளி னிநாட்
டண்டாதே நிற்றலது சுத்தியதாந் தேர்ந்திடுநீ
யாசறவே தன்னறிவாய் மூன்றுமுண்டாய்த் தோன்றுங்கா
லதுரூப மாங்கறிவற் றுனைக்காண்ட றெரிசனமா
மேசறவே காட்டியதை யெப்போது மிதுகாட்டே
யிகழ்ந்திருந்தோ மிந்நாளு மெனவழுந்தல் சுத்தியதே. (௭)

திரிவிதமா மறிவுதனிற் றேர்ந்திரண்டுங் கிழிடவே
தேசுளதாய் மேலதுவாய் நிற்பதுவே சிவரூபம்
வருமிதனுக் கதிபதியாய் வாட்டிமல முணால்காட்டல்
வாழ்சத்தி யெனத்தோன்றக் காட்டிநிற்றல் காட்சியதாம்

பொருவிலதிற் பணியறவே யின்பொடுங்கப் புக்கழுந்தப்
பொய்ஞ்ஞானங் காணுமை காட்டிநிற்றல் சிவயோகங்
கருவியுளங் கொண்டுநின்று காட்டியே காண்பதுபோற்
கருதுமுயிர்ப் போகமெல்லாங் கண்டுநிற்றல் போகமதே. (அ)

தேசான ஞாதிருவே திருமேனி யாசானே
செப்பியவிப் பத்தவத்தை தெளிந்தனன்யா னிவைதன்னின்
மாசான மூன்றவத்தை மருவியது கருவியதா
மலமெங்கே மலமிருக்கி னீக்கமுமில் மலமறியா
வாசாம கோசரநீ வந்தாலெ னவத்தையினும்
வழங்கவிலை யுனதருளு மோங்கிவரில் வாயாது
பேசாய்மே லந்திற்கும் பிரிவின்மை பிரிவதுவும்
பிரியாய்நீ யறியாய்நா மாக்கியதிற் போராதால். (௯)

இப்படியிப் பொருள்பெற்று ரிம்மையே பரமுத்தி
யெய்திடுவர் சாதித்தோ ரந்தியத்தே யெய்திடுவர்
முப்பொருளும் வியாபகமே முற்றுந் தராதரமா
முப்பொருளு நித்தியமே மூடிருள்கண் கதிர்போல
வொப்பிதுவே வியாபகமு முட்புறம்பாந் தேசிகர்க்கு
மொப்பிதுவே திருமேனி யொழியாமூன் றவத்தையினுந்
தப்பினபேர் பதமுத்தி யடைந்தடைவ ராசானற்
றாணியினற் குலத்திலவ தரித்துவினைச் சமம்பிறந்தே. (௰)

தன்னறிவைப் பற்றுக தபோதனராஞ் சத்தியர்க
டாமறவே யூன்போகந் தாக்காமற் பரஞான
வந்நெறியில் வழுவாம லவனிவரை நீங்காம
னெறியே நேயத்தா லாக்கியுருக் கொண்டுவந்த
விந்நெறியே கருதியது தனுவாக வின்புற்றே
யெந்நாளுஞ் சிவானுபவ மெய்தியிங்கே யிருந்திடுவர்
துன்னெறியைக் கைவிட்டே தன்னின்பந் துய்ப்பரெனிற்
சோதியாய் நில்லாயேற் றுன்னெறிபோ காதறியே. (௰௧)

அன்றாலின் கீழிருந்தா ரங்கையருட் போதத்தி
னலன்மலத்தை நீக்கித்தா னரன்கழலே செலுமென்று
மின்றேக னெயாகி யிறைபணியார்க் கில்லையென்று
மிடைவிடா தன்பினு லரன்கழலே செலுமென்றுந்

தன்றாளி னையர்தமிழ் கூடலென்றுஞ் சாற்றியது
    தானென்றே வுயிர்ப்போகஞ் சாராதே யிரண்டி னிலும்
பொன்றாதே தன்னின்பம் புசிக்குமெனும் புத்தியினாற்
    பொன்றறிவி லவனை யிங்கெங்கே புத்தியன்றே. (௰௨)

உண்மையாஞ் சிவானுபவ னுன்போக மருந்திடினு
    முத்தமற்கே யாகுமவை தானென்போ னுலகினுள்ளோர்
வண்மையாங் கனவுதனில் வல்லிதனைப் புல்கிடவே
    வருவதெலாந் தூலவுடற் கொள்ளுதனி லானதுபோற்
றிண்மையாஞ் சாதகரு மருந்திடினுந் துணைமறவார்
    செய்வினையாட் டினைமறவா தனையடித்தாட் டிடினுமிக
வெண்மையாங் குணக்கோமா னிலங்கிடுமா வடுதுறைவாழ்
    வெனுநமச்சி வாயனெனக் களித்தநெறி யிதுவேதமே. (௰௩)

தக்ஷிணாமூர்த்திதேசிகர் தசகாரியம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சுவாமிநாததேசிகர் அருளிச்செய்த

# தசகாரியம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அளவிலா வண்ட மாயை யானகன்ம மாண வத்தோ
டளவிலாச் சீவ னுற்ற வடக்குவ மறிந்த சீவ
னளவிலாப் பிறவி நீத்தே யளவிலா வருளைச் சார்ந்தே
யளவிலா வரனைப் பெற்றே யளவிலாச் சுகமா ரும்மே. (௧)

பூறுவ வினையே கன்மம் புகழான பஞ்ச சத்தி
பேறுகொ ளவையே தங்கள் பிறிவிலா வக்க ரங்கண்
மாறுகொ ளான்ம ஞானம் வகைவகை தத்து வங்க
ளீறிலாத் தனுக்க ளாதி யிவையின்பத் துன்ப மூலம். (௨)

பக்குவந் தன்ம மூலம் பரிபாகம் பாத மொப்புச்
சற்குணக் குரவன் சாற்றுஞ் சத்தியஞ் சத்த மெல்லா
மிக்கிர மத்து ளேலை யிடரிலா தறிந்த சீவ
னக்கணம் பிறவி நீத்தே யளவிலாச் சுகமா ரும்மே. (௩)

வேறு.

அழிபொருளும் பொய்ப்பொருளு மளவிலவே யாதலினாற்
கழிபொருளாய்க் கைவிடுவா யொருக்காலுங் கருதாதே
யழிபொருளி லடங்காத வைந்துபெரும் பொருள்களையே
கழிபொருளாய்க் கருதாம லெப்பொழுதுங் கருதாயே. (௪)

வேறு.

மாயையா லறிவ தெல்லா மட்டிடாப் பாச ஞான
மோய்விலா மலங்க ளெல்லா மொழித்தறி வோடி ருந்த
லேயிருட் பசுஞா னந்தா னிடர்ப்படு முயிரி ருட்டே
போயிட விரக்கம் வைத்த பொருள்சிவ ஞான மாமே. (௫)

அபுத்தியாற் புத்தி தன்னா லகச்சரி யாதி நான்காற்
சுபுத்தியோ டந்த நான்காற் றோன்றுமே சிவதன் பங்க
ளுபத்திர மின்றிப் பத்து மொன்றன்பி னொன்று தோன்றுஞ்
சுபத்தினான் மலங்க ளெல்லாந் துடைத்துயிர் தோன்று மன்றே. (௬)

வேறு.

மெய்ப்பொருளிற் பொய்ப்பொருளின் மேவாத வழிபொருளில்
விருப்ப மற்று
லப்பொழுதே யுபிருண்டா மதன்பின்னே குருவுண்டா
மான பின்னே
யொப்பரிய நூலுண்டா முபதேசம் பலவுண்டா
முபதே சத்தூட
செப்பரிய தசகாரி யங்களென்னு மஞ்சவத்தைத்
தெளிவுண் டாமே. (௯)

வேறு.

செயிரறு சிவ னுண்டேற் றெளிக்கமுப் பொருளுந் தேரு
முயிர்மலங் கன்மங் கர்த்தா வுபாதான மைந்து மெய்யே
பெயருள முயற்கொம் பாதி பெயர்ப்பொரு ளில்லாப் பொய்யே
துயருறு சரீர மாதி தோன்றிநின் றழிந்து போமே. (௰)

ஒப்பிலா நிறுவி கார மொருவழி குணங்க ளப்புச்
செப்பிய சுதந்தி ரஞ்சிற் சிர்முதற் சமானந் தேசா
தப்பிலா விபுவி நாசஞ் சமர்த்தகை யனாதி சுத்தி
யப்பிர மேய மற்று மைந்திற்குஞ் சமான மாமே. (௰௧)

ஆரிரு ளாண வத்தோ டருங்கன்ம மாயை மாயை
யாரிருள் கேவ லாதி யாமொளி ஞான மூன்றே
சாருயிர் சார்ப தார்த்தஞ் சார்ந்தமுத் தொழில்க ளல்லாஞ்
சாருயிர் தனக்குக் கேடு சாரவே பண்ணுஞ் சார்பே. (௰௨)

அறிபவ னறிவிப் பானே யவர்களி னறிவு தானே
யறிபொருட் பகுதி தானே யறிதராப் பொருள்க டாமே
யறிபொருட் கருவி தானே யறிபய னாதி தம்மை
யறிவதே யறிவு செய்தி யதற்குமில் லாற தாமே. (௰௩)

வேறு.

தெருளிரவி தெருளுடைய சிறிதேனுஞ் சிலகாணுஞ்
சிறுமைக் கண்ணே
குருடிரவோ டிருள்விளக்கிர் கொளலின்மை கொடையின்மை
கொடைமாற் றுமை
மருளிவைபோற் பலவுளவே மருண்டாலு மிரண்டுருவை
வலியக் காணு
மிருளிலதுக் காகுமிதே யிருளதுக் காகாதென்
றையப் பாலே. (௰௪)

வேறு.

குருடரா மிருட்டுத் தம்மாற் கோலினாற் றீர்த்த மூன்றான்
மருடரா விழிப்புத் தன்னான் மருடரு மிமைப்புத் தன்னா
லிருடரா விரவி தன்னா லெழுந்ததம் மொளியால் வேறாற்
றெருடராப் பருதி தன்னைத் தேடியுங் கண்கா ணாதே. (௰௩)

தத்துவத் தொழிலைக் காண்டல் சடமென்ற றன்னை நீக்க
லத்தினா னன்மே லென்ற லருளினா னன்மே லென்றல்
பத்தனா னருளாய்ச் செய்தி பண்ணவே யெண்ணி நீக்கிச்
சித்தரு ளதுவாய்ப் போதல் சிவத்தினைச் சேர்த லேதே. (௰௪)

அருளினா னன்மே லென்ற லதுவொழிந் தெண்ணி நீக்கன்
மருளினா லருளாய்ப் போதல் வகைமூன்று முன்பே வந்த
வருளினை நான்மே லென்ற லருளினா னன்மே லென்றன்
மருளினா லெண்ணல் போதல் மகிழ்சிவஞ் சேர்தல் வந்த. (௰௫)

வேறு.

தன்னைத் தலைவ னெனக்கருத றலைமை யருளே யெனக்கருதல்
பின்னர்ப் புதிதா யருட்செயலைப் பெறவே யெண்ணா லதைநீக்கி
மன்னித் திருவ ருளாய்ப்போதன் மகிழும் பரசி வனைச்சேர்தல்
அன்னிக் கருது மவத்தையெனச் சொல்லுஞ் சுருதி சிவாகமமே. ()

வேறு.

அயர்வறுத் திட்ட ஞானி யகமறுத் திடலா லந்த
வுயிருடற் றொழிலி னோடு முயிருட னாமை மற்றோர்
செயிரறுத் திடும்பொ ருட்டுச் சிவன்றன தாகக் கொள்வன்
மயர்வறு முத்தி ரண்டை மாற்றுவ னென்றே யென்றும். (௰௭)

முதற்பதி யரனே யைந்து முன்னத்து ... ரண்டே
யிதற்பின்னே யனுமா னத்தா லெண்ணிலா வுயிர்கண் மூன்றே
யதற்பின்னே யவத்தை நான்கே யகமறுத் திடலே யைந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே. (௰௮)

மறப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்த லெட்டே
சிறப்புடை யுபாயந் தம்மாற் றெளிவித்த லுயிரை யொன்பா
னறுத்திடன் மலங்கள் பத்தே யழுந்தலே லிலுந்து ளொன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி. (௰௯)

## வேறு.

பலகலையு மெண்ணரிதாம் பார்க்கிலருஞ் செறிந்திடுமே
மலநிலையால் வருமெண்மை மருவியவுங் காட்டிடுமே
சொலவரிதாம் பன்னிறமுந் தன்னறிவுஞ் சொற்புகலும்
பிலமுளபோற் றீங்கண்டம் பேர்முதலாப் பன்னிரண்டே. (௨௦)

## வேறு.

இரண்டினி லைந்தி லாறி லேழினி லெட்டுத் தன்னிற்
றிரண்டிரண் டொன்ற தான திகழொன்பான் பத்துத் தன்னி
லிரண்டிலாப் பேறு தன்னி லிருத்திய பத்தோ டொன்றிற்
றிரண்டெழு முபதே சங்கள் சிவஞான போதஞ் சித்தி. (௨௧)

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபின் னிரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்றி னன்றாய் முடிந்தபின் னிரண்டி ரண்டே
யென்றநான் கீறு தாமே யிவையிரா றிலக்கத் துள்ளோ
யென்றமுப் பானொன் பானை யெனக்கரு ளிரங்கி னானே. (௨௨)

மண்ணொடு செவியே சத்தம் வாக்காதி யையைந் தாகு
மெண்ணிய மனமே யாதி யீரிரண் டிவைநா லாறே
கண்ணிய கால மாதி கருதிடி லேழுங் காணே
திண்ணிய சுத்த வித்தை யாதியா மைந்துந் தேறே. (௨௩)

இந்திரி யங்க டன்மாத் திரைகளோ டிகள்வா யுக்க
ளொன்றுபப் பத்துப் பூத மோரைந்து மவையை யைந்தே
யைந்துசுத் தம்மேழ் வித்தை யாங்கார மூன்று மூன்றா
வந்திடுங் குணங்க ளொன்காம் வாக்கந்தக் கரண நான்கே. (௨௪)

சுவாமிநாததேசிகர் தசகாரியம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# சன்மார்க்க சித்தியார்.

### சிறப்புப்பாயிரம்.

அறிந்தமெய் யாவடு தண்டுறையிற் கூட்டஞ்
செறிந்தமெய் யம்பலவா ணன்சீர்—நிறைந்தமே
சன்மார்க்க சித்தி தருதலினுன் முன்னுறைந்த
துன்மார்க்கம் போக்குதற்குச் சூழ்.

வெண்பா.

நூல்.

சிறியே னறியாமை தீர்ப்பதற்குப் புத்தி
யறியே னெனினு மருளி—னெறியே
முளைத்தார்க ணீர்மை முதிர்வினு வற்றே
னளித்தா ணமச்சிவா யா. (க)

பாசமாய்ச் சுத்தப் பசுவாய்ப் பதியாகித்
தேசுற்ற வாவிச் சிறப்பென்று—னேச
முடைத்தாய்த் தனுவற் றுணராமற் கண்ணை
யடைத்தாய்வ தேதா மறை. (உ)

அறிவாய்ப் பரிபூ ரணமா யகண்ட
செறிவா யுளமொளித்த தேசா—பிறிவாகி
யுன்னிற் றனுவா யுறுங்கண் ணிமைநீக்கி
லந்நியமே னுவா யறை. (ங)

உளக்கண் விழித்தார்க் குறுங்கதிரா யுன்னை
விளக்கிச் செகவிருளை வேறு—யொளிப்பையென
மாயுஞ் செகமுளத்து மன்னுமெனக் கண்ணைமறைத்
தாயுமரு ளேதா மறை. (ச)

அம்பகத்தை மூடியரு ளாய்வதுவோ நாலோதிச்
செம்பொருளைக் கேட்டுத் தெளிவதுவோ—நம்பனருட்
கேற்றது பாயமிட்டை யேதாரு முய்யக்கைக்
காற்றுவா யென்றைப் பகர். (ரு)

அணியாய்த் திருநீ றணிவார்கள் கண்ணின்
மணியே யுனைவேண்டி வந்து—பணியத்
தொடும்போது மூர்ச்சை துயரகல நீற்றை
யிடும்போ தகல்வா யிதென். (௬)

நினைக்கார்தந் நெஞ்சத் தமுதாகு முன்னைத்
தனைத்தா னறிவாரே சார்வா—ரெனத்தானோ
ஞானஞ் சுழுமுனையா னல்குமென வாய்நீரைப்
பானம் பணியென் பகர். (௭)

சன்மார்க்க மென்னத் தருமார்க்க மோரியல்பாம்
பன்மார்க்க மென்னப் படாததனு—னன்மார்க்கம்
காயமற வாவி கருதானுங் கண்மூடி
மாயமென் மாணு வரும். (௮)

நேத்திரத்தை யுற்றொரு நேத்திரத்தை நீங்கின்மனோ
மாத்திரமே யன்றியுள மன்னுதா—னீத்துடலை
யாவிப் பயனறியா ரம்பகத்தை மூடியருட்
பாவிப்பா ரல்லரெனப் பார். (௯)

காயமனத் தாற்சிவனைக் காணலா மென்பதனுங்
காய மறையு மறையாதான்—றோயத்
தனுமாய வாவி தனுவா மிறைவர்க்
கினிமாய மில்லையென வெண். (௰)

அறிவாய்த் தனுவை யறிவார் மலத்தைப்
பிறிவா ருளம்போ லறிவாய்ச்—செறிவாந்
தனுவா லறிவா ருளமே தனுவா
யுனுவார் திருவுருவென் றோர். (௰௧)

ஊனு முயிரா யுணர்வா யுரையிறந்த
தேனு முளமறைந்த சிற்பரத்தை—வானு
மொளியா யுருவா மொலியா யுணர்வார்
தெளியார் தமையென்னத் தேர். (௰௨)

தனைத்தானிவ் வாறென்னத் தானறியார் சம்பு
வினைத்தானெவ் வாறறிந்து மேவ—நினைத்தா
ருறுமோ மனமதனி லொண்கனிமை நீக்க
வறுமோ நமையா ளருள (௰௩)

சட்டகத்தை நீக்கச் சதுரறியார் கண்மூடி
நிட்டையெனப் பாவித்து நிற்பதனாற்—கட்டிப்
பதமடைவ தல்லாற் பரசிவத்தோ டத்து
விதமடைவ தின்றாம் விளே. (௰௪)

சிந்திப்பா ரர்ச்சிப்பார் சேர்ந்திமையா லம்பகத்தைப்
பந்தித் திதயத்திற் பாவிப்பார்—பெந்தித்த
சாலோக மாதிப் பயனுக்குச் சற்குருவா
னாலோகி ஞர்க்கறிவே நோக்கு. (௰௫)

புரையே செவிதா ரகமாப் புகுமால்
வரையே யருணூலின் மாண்பவ்—வுரையே
பதிபசுபோய்ப் பாசத்தின் பண்புதேர் வித்துக்
கதிசேர்க்குஞ் சன்மார்க்கக் கற்பு. (௰௬)

அறிவா லுணர்த்தி யறியாமை நீக்கிப்
பெறுமாறே யத்துவிதப் பேறு—மறுமாற்றி
யாவியே யீச னருவினையைக் காட்டாமற்
பாவியென்பார் சற்குருவோ பார். (௰௭)

உன்னைத் தனுவை யுயிர்க்குயிரை யுள்ளத்துப்
பின்னமற நிற்குமலப் பெற்றியையுஞ்—சொன்ன
சுருதிகுரு வாக்குச் சுவானுபவ மொன்றத்
தெரிவிப்பான் தேசிகனத் தேர். (௰௮)

எங்கு மறிவா யெழுந்தசிவா னந்தத்தைத்
தங்குநய னத்தடக்கித் தான்விழிக்கப்—பங்கமுறக்
கற்குநிட்டை யாகுங் கருதியறி வாய்நிறைந்து
நிற்குநிட்டை யல்லவென நில். (௰௯)

அகக்கண் டிறந்தார்க் கறிவல்லா லொன்றும்
புகத்தக்க தில்லையெனும் பொற்பான்—முகக்க
ணிறைத்தார்மற் றேரகத்தி னீடருளாற் கண்ணை
மறைத்தார் செகத்தஞ்சு வார். (௨௰)

அகத்திமிரத் தாலாவி யாகமாய்த் தீய
செகத்துமய லாமூர்ச்சை செய்யா—விகத்தரனைப்
பெற்றார்தங் காயமதும் பேரறிவா மெய்மூர்ச்சை
யற்றார்போய்த் தீவினையென் றோர். (௨௧)

உரையே யகவிருளுக் கொண்கதிரே யாமால்
வரையா ரறிவுடையோர் மாண்பைப்—பரஞானஞ்
சாதிப்பா ருங்கேட்டல் சிந்தனையைச் சார்ந்துமலஞ்
சேதிப்பா ரென்னத் தெளி. (உ௨)

மனுவே திருநீற்றை மன்னுமான் ஞானத்
தனுவே தவிர்க்கத் தகாதே—தனுவே
யருண்மா றிருநீ றணிய வகலு
மருண்மா லெனவே மதி. (உ௩)

வன்னமுற்ற காயத்தை மாற்றியறி வேயென்னத்
தன்னையுற்றார்க் கின்பாகுந் தானுவறப்—பின்னமுற்ற
ஆனீர்மை தானு யுணரும்பொய் மக்கட்கு
வாய்நீ ரமுதாய் வரும். (உ௪)

அருந்துமனம் வாயா லகற்றியறக் கோழை
திருந்தவருள் சேருமெனுஞ் சேயாய்ப்—பொருந்துந்
தனுக்கோழை நீங்காது தாதனறி ஞான
முனக்கேழை யெந்நா ளுறும். (உ௫

செகத்திமிரந் தீர்க்கும்வான் செல்கதிர்போ லாவி
யகத்திமிரந் தீர்க்கு மருணூல்—பகுத்தறியப்
புத்தியில்லார்க் கெல்லாம் பொருளாகுங் கண்ணற்றா
ரத்திகண்டாற் போலென் றறி. (உ௬)

நன்மார்க்க நற்குரவோர் நாட்டுமரு ணூனோக்கிச்
சன்மார்க்க சித்தியெனத் தானுரைத்தேன்—புன்மார்க்க
மற்றார்தந் நெஞ்சத் தமுதாஞ் செகமார்க்கம்
பெற்றார்க் கிதுபேத மாம். (உ௭)

காயமெனக் குள்ளடங்கக் காதலித்த யான்கருணை
நேயநீ யாயடங்கி நிற்பதனுக்—காயதிட்டை
வைத்தாய் சிவஞான வாரியருண் மல்லைநிறை
யத்தா நமச்சிவா யா. (உ௮)

சன்மார்க்க சித்தியெனச் சாற்றுமிரு பானெட்டைப்
புன்மார்க்கஞ் சென்றோர்க்குப் போக்கினு—னன்மார்க்கங்
காட்டா வடுதுறையிற் கண்ணாம் பலவாணன்
றூட்டா மறையெனக்குத் தந்து.

சன்மார்க்க சித்தியார் வெண்பா முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# சிவாச்சிரமத் தெளிவு.

காப்பு.

திருவா வடுதுறையிற் றேவே யடியேற்
கொருவா வினைமா லொருவக்—குருவாய்த்
திரள்வா யறத்தின் சிறந்தவினு வுற்றே
னருள்வாய் நமச்சிவா யா. (௧)

நூல்.

வருகரும பாகர்க்கு மாயமற நோக்குத்
தருமலபா கர்க்குந்தா னென்று—நிருமலமாந்
தீக்கையொரு நான்காஞ் சிறப்பிசர் பாகமிரண்
டாக்குவதெவ் வாறு மறை. (௨)

செய்யு மூலக தருமணிக்குஞ் சேர்சிவமா
யுய்யுஞ் சிவதரும வொண்மணிக்கு—மெய்யுறவே
பாவுஞ் சமயாதிப் பண்பொன்று நற்றரும
மாவதுவென் பேத மறை. (௩)

அநுக்கிரகந் தீக்கைக் கதிகார மீகை
மநுக்கிரகர்க் காமாறும் வைத்தாய்—தனித்துறவோ
டில்லஞ் சரியா மிசைந்தொழி லார்க்காமஞ்
சொல்லுவதென் பேதமதாய்ச் சொல். (௪)

தீக்கைசெபம் பூசை தியானமரு ளாலோத
லாக்கிப் பிறர்க்கு முறைத்திடுத—னேக்கிற்
றுறவில் லறத்துஞ் சொலுமார்க்க மொன்று
மறமிரண்டே னுமா றறை. (௫)

மலமகலத் தீக்கை வருவிப்பாய் நான்கா
யிலமகலு வார்க்குமிலத் தோர்க்கும்—புலமிலனை
விட்டடியிற் றேறிகர்பான் மேவுமென நூலோதப்
பட்டதென்னே யிசா பகர். (௬)

போகி விரத்தர் பொதுவாய்ச் சமயாதி
யாகுமபி டேகாந்த மாதரித்தும்—தேகமா
மந்தியத்தில் யோசனைக ளொன்று மறமிரண்டாய்ப்
புந்தியுற்ற தேதாம் புகல். (எ)

ஓதினிய நூலை யுணர்ந்தும் பிறர்க்குரைத்து
மேதினியிற் றீக்கை விரித்தளித்தும்—நீதினிமை
யுற்று ரறிவோ வுறுஅ துலகதனை
யற்று ரறிவோ வறை. (அ)

வந்தனையா லொன்று மருவுமரன் பாலுற்ற
சிந்தனையாற் பேதமெனச் செப்புவதா—நந்தனையாய்
வையந் துறந்தார்க்கு மற்றதனை யுற்றார்க்குஞ்
செய்யு மறத்தின் றிறம். (சு)

போற்றுஞ் சமயாதி பூணுமபி டேகாந்த
மாற்றுந் தவவேட மாதரித்தும்—பாற்றியிடு
மச்சு முதலா வனைத்துமல பாகமதி
லிச்சைகன்ம பாகமென வெண். (ய)

வஞ்சத்தில் வாஞ்சை மறவாமல் மாசிவத்திற்
கொஞ்சத்தி லாசை கொளுவாரைச்—செஞ்சொ
லுலக தருமணியென் றோதும்பொய் வஞ்சத்
திலகார் சிவதரும ரென். (யக)

பூசையுடன் கல்வி பொருந்து மதிகார
மாசையுடன் றீக்கை யளிப்பதுவன் றோம்—வாசமலர்த்
தாமமே யிட்டுத் தருக்குமட வார்வாழ்க்கைக்
காமமிலத் தோர்க்கெனவே காண். (யஉ)

கொலையிற் களவிற் கொடுங்கொழிலிற் கோப
வலையிலுவப் புள்ளு மருவும்—பலைப்பத்
தாமமே சாத்தித் தருக்குமா றையுற்ற
காமந் துறவோர்க்கே காண். (யங)

ஊக்குஞ் சமயாதி யுற்றவபி டேகாந்த
மாக்குமுண்மை நற்சரியைக் காம்பருவ—நோக்கித்
துறந்தார்க ளுண்மைச் சரியாதி பற்றிச்
சிறந்தா ரருட்பாகத் தோர். (யச)

நண்ணு முபாயச் சரியாதி நான்குமில்லோர்
பண்ணு மனுக்கிரகப் பண்புமிக—வெண்ணித்
துறந்தார்க ளுண்மைச் சரியாதி தொக்கிச்
செறிந்தா ரறிவென்னுந் தேசு. (௰௫)

பாவனையாற் றீக்கை பணிப்பரத்தில் போசித்துத்
தீவினையு மாங்கே சிதைத்ததனாற்—பூவினையைப்
பாற்றுவார் தீக்கைப் பலமடைவார் பண்பிலத்தி
லாற்றுவார் நற்றரும ராம். (௰௬)

சரியைக்கே சாலோகந் தன்னில்யோ சித்தாற்
றெரிய நடந்தவர்க்கே சேர்வாம்—பிரியா
நிலையுலகி விச்சை நிறைந்தோர்க்குத் தீக்கைப்
பலநிலவு நற்றருமம் பார். (௰௭)

பரிபாகத் தாற்றீக்கைப் பண்புற்றார் நீதைத்
தெரிவா ரிலந்துறந்து சேர்வார்—பிரிவா
மிலைத்துச் சரியாதி யேமெய்ச் சரியைப்
பலத்துக் குபகரணம் பார். (௰௮)

கருமாற்றுந் நீக்கையாற் கற்பொன் றெனினும்
வருமா றிரண்டாகு மாறு—திருமா
மனுக்கிரகர்க் காகும் வருமறிவின் மார்க்க
மனுக்கிரக நீத்தோர்க்கே யாம். (௰௯)

மந்திரமொன் றாக மதிக்குஞ் செபத்துக்குத்
தந்திரமே பேதமெனுந் தன்மையாற்—புந்திப்
பலமா மிலத்தோர்க்குப் பண்ணாவர்க்குத் தீய
மலமாய்க்கு மென்றே மதி. (௨௰)

துறவனிவ் வஞ்சத்திற் றோயிலிவ் வஞ்ச
மிறைவனு மாறு விலத்தா—மறவ
னிறவா வரன்பூசை யேத்துகிலும் வஞ்ச
மறவா னதனுன் மதி. (௨௧)

தேசனையே நெஞ்சிற் றியானிக்கி லிவ்வாழ்க்கை
வாசனையு மாங்கே மறைக்குமாற்—காசினியைப்
பற்றார்க் ககில மறுமிற் றியானத்தின்
பற்று மதுமறைக்கும் பார். (௨௨)

உறையு மிலந்துறந்தா ருள்ளஞ் சிவமென்
றறையு மருணூல்க ளாய்ந்துஞ்—சிறையைக்
கழியா ரிலத்தறவர் கற்றதிறஞ் சற்று
மொழியார் துறவோரென் றோர். (௨௩)

இலங்குநூற் கர்த்த மிலைத்தா ரிசைப்பிற்
றலங்கவிலம் பேணிச் சொலுவார்—விலங்க
விலந்துறந்தார் கூசா திசைப்பரிவ் வில்லை
மலந்தகைய வாராத வாறு. (௨௪)

துறந்தார்முன் பாகஞ் சொலிக்குந் துறவை
யிறந்தார்முன் காம மெழுமா—னிறைந்தவிலந்
தொட்டாரை விட்டறிவிற் றேய்ந்தாரைத் தோய்வதுநூற்
பட்டாங்கி னுள்ள படி. (௨௫)

பண்ணு மனுக்கிரகப் பான்மை தனுப்போக
நண்ணுதற்கே யிற்குரவர் நாடியதா— மெண்ணித்
துறந்தகுர வோராவித் தொன்மலத்தை மாற்றச்
சிறந்ததென மாணு தெளி. (௨௬)

பாவனையாற் றீக்கை பணவருகா லன்றில்ல
மாவினையே நெஞ்சின் மருவுமாற்—றீவினையை
மாற்றுவார் சீடன் வரும்பொருளா னீத்தோர்கள்
பாற்றுவார் பாவனையாற் பார். (௨௭)

கொடுவிடங்கண் மாயக் குடியாற் கொத்தி
யிடுவரவர் மாணு விலைத்தார்—கடுகும்
பறவைக் கரசுதனைப் பாவிப்பார் போலுந்
துறவர்க் கரசர் தொழில். (௨௮)

உடல்விடத்தைத் தீர்ப்பா ருதுமுயிர்க் குற்ற
நடைநடப்பிப் பாசோ நவில்வாய்—திடமுகப்
போக்கும் பொருட்குவமை புன்னையிற்று டொன்றுக
வாக்கு முவமைக் கடா. (௨௯)

சத்தியா லாத னருக்கருமத் தாலாத
லத்துவா சுத்தி யடைதலுமா—முத்தி
செறிவிக்கு நூலிற் சிறந்ததைத்தை டத்தா
லறிவித்தல் சத்திய மேயாம். (௩௰)

பிறியாக் கலைகள் பிறிக்குங்கான் மாணா
னறியாத சத்தியமே யாகு—நெறியாக
வாங்கவைவயை யாசா னறிவித் தகற்றுகையா
லோங்கியநற் சத்தியமென் றோர். (௩க)

உற்றநிரு வாண மிருவகையா வோதியதிற்
செற்று ரனுக்கிரகஞ் செய்வதா—மற்றில்ல
நல்லா ரசத்தியமே நண்ணுவதாம் மேலவத்தை
செல்லாத வாதலினற் றோர். (௩உ)

கடுவடக்கு நோக்குக்குக் காட்டுமருந் துற்ற
கொடுவிடத்தைக் கொன்றுமொப் பாமோ—மடமடக்கு
நோக்குக் கிணையாமோ நுண்பொருளா லாகுதியை
யாக்கியது மாணு வறி. (௩௩)

பிறவா வறிவு பிறந்திலத்தை மாற்றித்
துறவா வருளாந் துறவர்க்—கிறைவா
வதிகாரத் தாற்றீக்கை யாக்குவோ மென்னு
மதிகா ரகர்க்கென் வரும். (௩ச)

சித்தத் தறியாமை சேர்ந்திலத் தின்பண்பாய்ச்
சத்தியே யெவ்விடத்துஞ் சாருமா—லொத்தே
யளிப்பா னுடல்பொருளோ டாவியெல்லா மாங்கே
யொளிப்பான் குருவோ வொழி. (௩ரு)

அகத்தகலா வீசன்பா லன்பாகித் தீய
செகத்தகலு வாரே சிவமாய்ப்—புகுத்திடுமா
லார்ப்பா ருடல்பொருளோ டாவியெல்லா மாங்கேறச்
சேர்ப்பா ரவர்குருவாய்த் தேர். (௩சு)

தனக்குப் பலன்கருதான் றக்கவுயிர்க் குற்ற
வினைக்குற்றந் தீர்ப்பான் விரத்தன்—மனைக்குற்றத்
தோங்குவான் றீக்கைக் குறுங்கூலி வாங்கியில்லந்
தாங்குவான் றேசிகனோ தான். (௩எ)

அனுக்கிரகஞ் செய்தங் கவர்பா லணுகி
யினிக்கிரகந் தாங்கென் றிரவார்—தனிக்கதிராய்க்
காய்வார் பிரவஞ்சக் காரகலை நோக்கியரு
ளீவார் துறவோரென் றெண். (௩அ)

பிணிதீர்ப்பார் மக்கள் பிணியுற்றார் கூலி
யெணியோரா மக்கட் கிரங்கி—யணிநோயை
மாற்றுவார் போல மலப்பிணியை மன்னுயிர்க்குப்
பாற்றுவார் தேசிகராய்ப் பார். (௩௯)

தன்னகத் துற்றார் தருமகுரு வாகுமென
வின்ன விலக்கா ரிசைவென்ன—மின்ன
மனித்துயத்தைச் சேர்ந்தங் கறிவறிவிற் சேர்ந்து
செனித்தவரே தேசிகரே சால். (௪0)

திலமளவு தானந் திகழ்மலைபோ லாகிப்
புலம்விளையச் செய்யும் புகழா—விமலகன்ற
தேசிகர்க்கே யாவிதனுச் செல்வமுமொத் தீவாரை
மாசிவமாய் மாறு மதி. (௪௧)

பலவிசிட்டத் தானும் பவமறவே நோக்கு
நிலவிசிட்டத் தானு நிறை வானுங்—கலைவிசிட்டங்
காட்டி யறிவிற் கலப்பானு நீத்தோரை
நாட்டியநற் றேசிகராய் நாடு. (௪௨)

ஆகையினு லார்க்கு மனுக்கிரக சாந்நிவத்தேதா
மேகமா யாவிக் கிசைந்தபரி—பாகமே
நோக்குந் துறவோரை நுண்ணறிவா யுள்ளாந்தி
லாக்குவதே யாவிக் கணி. (௪௩)

விடப்பட் டதறு விடுவிப்பார் கர்மாற்
றொடப்பட் டதனைவிடச் சொல்லார்—தடைப்பட்ட
வில்வாழ்வார் நல்லிகல் றிசைப்பா ரிதனைவிடச்
சொல்வா ரலரே துணி. (௪௪)

உண்ணுன் புலாற்றிதன் றேறுவா னுண்பான்றீ
தெண்ணு னிலந்திதன் றேர்ந்துவான்—டைபண்ணைத்
துறந்தா னிலைந்துறைவான் றேய்ந்தலைந்து சுற்று
மறந்தா னலனே மதி. (௪௫)

சரியாதி நான்கிற் றருங்குரவோர் நான்காய்
வரையா பராபின் வழிநு—முறைசெய்த
முனைக் குரவ ரொருமுவர் மற்றைந்தவர்
ஞானக் குரவரென நாடு. (௪௬)

கரும குருநிலைமை கைவிட்டு ஞான
தரும குரவனடி சாரென்—றொருமித்தே
யெல்லா மொழியு மிசைக்குந் துறவோர்க்கின்
றில்லா ரிணையலவா யெண். (௪௭)

ஆய்ந்துகிரி யாவிதிவீ டாயாக் குரவனைவிட்
டாய்ந்தறிக வாய்ந்தவர்க்கா ளாயென்று—தோய்ந்தநெறி
வல்லான் கருணை மறைஞான மாமுனிநூல்
நல்லா னுரையதனை நாடு. (௪௮)

பிரமவுப தேசம் பெறுதலே பாங்கு
கருமவுப தேசங் கழியென்—றுரமதுற
வுற்ற மறைஞான மாமுனிவ னோதியநூ
னற்றுமவர்க் கன்றோ நலம். (௪௯)

உயர்ந்தோரைச் சேர்ந்தோ னுறுமிலைத்தைத் தாங்கு
நயந்தோரைச் சார நலமோ—கயந்தோர்
மலங்களையத் தோன்றி மருவுகுர வோர்க்கு
மிலங்களைவா னன்றோ விவன்.

அறத்துறந்தா ரிற்கதிக மானுலு மங்கத்
திறத்தகல்வார்க் கொப்பாமோ தேரின்—புறத்துறவோர்
மேலவத்தை செல்லார் மிகுசகளத் தொன்றுவ
ராலவரைக் கீழா யகல். (௫௧)

இல்லறத்தார்க் கெல்லா முறினுமிவ் வில்லைத்தைக்
கொல்லுதற்குண் டாமோ குணநெறிகள்—புல்லறத்தைத்
தீர்ந்தார்க்கு நல்லறிவு சேர்ந்திடினு மேலறிவு
சார்ந்தாய்தற் குண்டோ சதுர். (௫௨)

சகளத் தபிமானஞ் சாலோக மாதி
நிகளத் தழுத்தி மலநீக்கு—மகளத்தை
யுற்றார் நிராமயமாய் நீள்சிவத்தோ டோரறிவா
யற்றார் தமையென் றறி. (௫௩)

காய மறுங்காற் கருதியமெய் யாவிவிட்டுப்
போயோர் தனுவிற் புகுகையா—லாயகலைத்
தந்திராமா யோகிந்துத் தானியத்தா லாகுதியை
மந்திரத்தாற் செய்வான் மகிழ்ந்து. (௫௪)

ஆவி பிறிதுடலை யாவரிக்கு மாசாரியன்
பாவிக்கு மாறு படாததனாற்—பூவிற்
றரும்பொருளா லாகுதியைத் தக்கவாற் காக்க
வருமதனா னற்கதிக்கு மால். (ருரு)

அடைந்ததனுப் பொய்யென் றறிவிக்க வாய்ந்து
மிடைந்ததனு விட்டருளை மேவித்—துடர்ந்த
குருவருளைப் பற்றிக் குறித்தவத்தை யஞ்சில்
வருந்துறவோர்க் கன்றோ வரம். (ருசு)

தத்துவத்தை நீங்க றகுமறிவோர் தேகாந்த
மொத்தவுயிர்க் கந்தியட்டி யோதக்கேள்—முத்தி
யவத்தைக் கழித்தருளோ டாக்கிக் கருணைச்
சிவத்தி லழுத்துவதைத் தேர். (ருஎ)

வரையகில மாதின்ப மாதவரைச் சேரும்
புரையகல வென்னும் புகழ்நூல்—கரையகலக்
கற்றும்பொய் வஞ்சத்தைக் காழுறுவார் றுறைதனை
யுற்று முறுதாரென் றோர். (ரு.அ)

அருளால் சிவதீக்கை யற்று மகில
மருண்மா லகல்வார் மதியார்—பொருளுணர
வறிந்தும் பிறர்க்கே யனுக்கிரகஞ் செய்திற்
செறிந்தா ரறிவலவாய்த் தேர். (ருகூ)

மருணீக்குந் தீக்கை வகைநான்கு முற்றும்
பொருணீக்கு மில்வீற் புணர்வா—ரிருணீக்க
முற்று ரவை பொருந்தானுந் தீக்கையுமற்
றற்று ரறிவென் றறி. (சுo)

நிறைந்தகல்வி தீக்கை நிறைவாலும் பாகந்
சிறந்த தலைகிலைந் சிந்தத்—துறந்ததெறிச்
சீரகத்தார்க் காவி சிறந்ததாந் தீக்கையுற்றும் (சுக)
காரகத்தார்க் காவியிலை காண்.

அநித்தியத்தை நித்தியமென் றெய்வார் மனத்திற்
செனித்தவரென் றுகமங்கள் செப்பத்—தனித்தறிவாய்
நித்தியத்தை நித்தியமென் றெய்வார்க ளீசனைத்துந்
பத்தியென நீத்தோரைப் பார். (சுஉ)

உலக தருமணியோ டொண்கரும பாகங்
குலவுமிற் காமக் குணமு—நிலவியிடும்
புல்லறத்தை மாற்றிப் பொருந்துஞ் சிவதீக்கை
யில்லறத்தார்க் காகுமென வெண். (சுங)

சிவதரும நன்மணியுஞ் சேருமல பாக
மவமறைக்கு மீசற் கவாவும்—பவமா
யிறைமறைக்கு மில்லிற் கிசையாத வீசன்
றுறவறத்துக் கென்றே துணி. (சுச)

தாரகைநே ரிற்குரவர் தண்மதிக்கு நேராகுங்
காரகத்தை நீத்த கனகுரவர்—பாரகத்தி
லார்க்கு மிருடீர்க்கு மாதவனேர் மையலறத்
தீர்க்கு மருட்குருவாந் தேசு. (சுரு)

சாதிக் கதிகந் தருமறையோர் சட்சமய
நீதிக்குட் சைவ நிலையதிக—மாதி
மறைக்கதிக மாகமமே வாண்மதஞ்சே ரில்லாந்
துறைக்கதிக நீத்தோர் துணி. (சுசு)

நிலைத்த வறமிரண்டு நேரொக்கத் தூக்கிற்
பலத்திற் குறையதிகம் பார்க்கி—விலத்தோர்
கடுகி லணுவளவுங் காணுது நீத்தோர்
நெடுமலையும் வானினு நீட்டு. (சுஎ)

அறிவித்தா லொத்தங் கறிவார்பொய் யங்கம்
பிறிவித்தா லக்கலைகள் பேரு—மறிவித்தா
லொன்று மறியா தவர்க்குமுறும் பாவனையாற்
கொன்றிடுவான் நீத்தோன் குறித்து. (சுஅ)

பவுத்தர்முத லாய பலசமய மெல்லாந்
தவத்துக் குரித்தாய்த் தருமா—னவத்தா
மறமிரண்டா மில்லுக்கு மந்தந்த மார்க்கத்
துறவதிக மென்றே துணி. (சுகூ)

பேறிதுவே யாதலினாற் பெற்றவதி காரத்தை
மாறுபட்டார்க் கன்றோ வரும்பிறவி—யாறுபட்ட
செஞ்சடையான் செஞ்சொல்லைச் சேர்த்தே நடத்திடையை
நெஞ்சடைய மாணு நினைந்து. (எ

## பண்டார சாத்திரம்.

### சிறப்புப்பாயிரம்.

சிவாச்சிரமத் தின்றெளிவைச் செய்தெழுப தாகப்
பவாச்சிரம மாற்றிப் பணித்தான் — சிவாச்சிரமந்
தென்னா வடுதுறையிற் றேவாம் பலவாணா
னென்னாகத் தின்பா வெழுந்து.

சிவாச்சிரமத் தெளிவு முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# சித்தாந்தப்பஃறொடை.

---

## காப்பு.

செய்யாப் பணிபலவுஞ் செய்வேன் றிருவுளத்துச்
செய்யும் பணிசிறிதுஞ் செய்தறியே— னுய்யுநெறி
யெத்தால் வருமடியேற் கின்பா வடுதுறைக்கு
ளத்தா நமச்சிவா யா.

## மங்கல வாழ்த்து.

இருவினை யுற்றுக் கீழ்மே விசையுமெவ் வுயிர்க்கு மூன்று
யுருவினை யுற்றுக் கீழ்மே லுறும்வினை தன்பா லன்பாய்
வருவினை யாக்கித் தென்னா வடுதுறைக் கண்ம கிழ்ந்த
திருவினை நமச்சி வாயன் றிருவடிக் கமலம் போற்றி.

## நூல்.

திருவாரு ஞானத் திலகத்தா னீற்றான் (க)
மருவாரு மேனி வளர்த்தா—னொருவாத
கண்டிகை சென்னி களங்காது மார்புகரங்
கொண்டிலங்கு மேனிக் குறியுடையான்—மிண்டிலங்கப்
பேதித்த மும்மலமாம் பெற்றியெனு முப்புரத்தைச்
சேதித்த பொல்லாச் சிறுநகையான்—சாதித்த
காமமெனு மாரன் கனலோ டெரிந்துவிழச்
சேம விழிதிறந்த சித்தத்தான்—பூமிசையிற்
றோற்றமிறப் பென்னுஞ் சொலுங்காலன் மாய்ந்துவிழ
மாற்றுந் திருவடியால் வாட்டினான்—கூற்றமெனு
மாணவமுஞ் சஞ்சிதமு மற்றுவிழ நோக்களித்துப்
பூணுங் கருணைநெறிப் பொற்பினான்—வீணவமா
மாயை மயக்க மடிய மலர்க்கரத்தை
நேயமுடன் சென்னிவைத்த நேயத்தான்—காயமுட
னோங்கு பொருளு முறுமுயிரு மொன்றாக
வாங்குங் கருணை மதியுடையா—னீங்காத

மாசகற்றி யாவி மருவுமரு ளோடடங்க
வாசகமே யிந்த வழக்குடையா—னேசகற்றுந்
தேவகமே யாகவகந் தேவர்க்குந் தேவனெனப்
பாவகமே செய்யுமருட் பண்புடையான்—சீவகத்தாற் (௰)
பாசம் பதியைப் பரவாமற் பல்லுயிர்க்கு
நேசமாய் நிற்கு நிகளத்தைத்—தேசுற்ற
நூலரத்தாற் றேய்த்தவரு ளுட்பத்தான் பொய்யாரு
மாலரத்தை மாயவருள் வைத்தாயிரை—மேலிருத்தித்
சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
யொத்திருக்கச் செய்யுமிக்க யோகத்தான்—முத்திநெறி
வேண்டுவார் வேண்டும் படிக்குவினை மாற்றிநன்கு
நீண்டநெறி யென்மேற் சிறப்பித்து—நீண்டநெறிக்
காடுவா ராடும் படியாடி யாருயிரைக்
கூடுவான் மெய்ஞ்ஞானக் கோலத்தா—னீடும்
புவிமா லகலவருட் பூண்பார் புகழ்தன்
செவிமா னிறைத்தவருட் செல்வன்—பவமாய
வோங்குவா ரூட்டு முறுமனபா னுதியெல்லாம்
வாங்கிச் சுவைத்தநா வண்மையா—னோங்கவர்க
டொந்தித்த வன்பாற் றொடும்பூ விருங்கந்தங்
கெந்தத் தடக்குமருட் கேண்மையான்—சந்திக்க
மக்களெல்லாஞ் சாலோக மன்னுதற்காய் மக்களைப்போற்
றக்கதொழிற் கொண்ட சதுருடையான்—மிக்கவருட்
டொண்டரெல்லாஞ் சாமீபந் தோய்வதற்காய்த் தொண்டனைப்போ
லண்டனைப்பூசிக்கு மருளுடையான்—மிண்டிப் (௨௰
புலனடக்கிச் சாரூபம் புல்குவிப்ப தாகத்
தலைநடக்கு மிக்க தவர்போற்—சொலைநடக்குந்
தேசன் கருணைச் சிறப்புடையா னுவியெல்லா
பாசற்ற சன்மார்க்க மன்னுதற்காய்த்—தேசற்ற
நூலோது வார்போல நூலோதித் தித்தனுவின்
மாலோதி மாற்றும் வகையுடையான்—மேலோதிப்
பார்ப்பான்மெய் யாவிகளைப் பற்றிலையைப் பற்றியபு
சேர்ப்பான் கருணைச் சிறப்புடையா—னேற்பாற்கு
வாக்கா லருளமுத மன்றுவிட்டான் றன்கருணை
நோக்காற் பிறப்பகனை நோவிப்பா—னீக்காம
லைத்தன்மைத் தோற்று மிருக்கக் குணமகற்றி
மெய்த்தன்மைத் தாக்குமருள் வீறுடையான்—பொய்த்தன்மைத்
தேகமா னுறுவார்தந் திந்தனையைப் போக்கியருள்
மாமா லளிக்கு மதியுடையான்—பூமா

ஆறுவார்க்குத் தன்னை யுறுமா றளித்துப்
பெறுமா றிதுவென்னும் பெம்மான்—பொறிமாறிச்
சேர்ப்பாரைத் தன்னடியிற் சேர்த்திடுவான் றீவினையுற்
றூர்ப்பாரை யவ்வாறுற் றூக்குவா—னேற்பாரா
மன்பருக் கன்பாவா னல்லாதார்க் கல்லாதான்
வன்பருக்கு மன்பே வழங்குவா—னென்புருக்கு
மீசன் குருலிங்க சங்கமமே யென்றறியப்
பேசியரு ணூலளித்த பெற்றியா—னாசமிலாத்
தேவர் முதலாகச் சிற்றுயிர்க ளீறாக
மேவியருச் சித்து விளங்குதற்காய்ப்—பூவிதனி
னற்கருணை தானே நயந்துலிங்க மாய்முளைத்து
நிற்குமதி கார நிகழ்த்தியிடச்—சொற்கரும
மாற்றி மவுன வகைநிறுத்தி வையத்திற்
றோற்று முயிர்கட்குத் தோற்றாமல்—வீற்றிருக்குஞ்
சீலமே யார்க்குந் தெரியாதாற் றேவென்னுங்
கோலமே யல்லாத கொள்கையான்—ஞாலமதி
லிங்கமே தேவென் றெணுவிக்கப் பேசுமரு
ளங்கமே யுற்ற வருட்பெருமான்—சங்கமமே
யண்டர்பிரா னென்ப தடக்கியித் தேவுக்கே
தொண்டரெனுந் தொண்டர்தமை யாவரித்துப்—பண்டைமல
மிண்டகற்றி யாருயிரை மேவுதலான் மேவுமருட்
கொண்டலெனு மிக்க குணமுடையா—னெண்டிசைக்கு
முப்பொருளின் றன்மை யுணர்த்தித்தன் மூதறிவாற்
செப்பரிய நேயத்திற் சேர்த்திடலா—லொப்பரிதா
மாசிரியன் றேவென் றறைவா னருணீதி
பேசரிய வாவியுருப் பெற்றியான்—மாசறிய
வந்தோ னுயிர்க்கு வழிபாடு காட்டியிட
னிந்தைபல வென்ன நிகழ்த்திறே—னெந்தைதன்
கண்டக் கறையுமருட் கண்ணுதலு மாற்றிநெறித்
தொண்டர்குழா மென்னத் துலங்கியே—யண்டர்தொழும்
வேதா ரணியத்தின் மெய்கண்ட சந்ததிக்கோர்
ஞாதா வெனப்பெயரு நண்ணியே—யோதா
துணர்ந்தார்க் குலவாக் கிழிவழங்கி யொப்பில்
மணந்தாள் பசுக்குலத்தை மாற்றிப்—புணர்ந்த
திருவா வடுதுறைவாழ் தேசிகனு மென்ன
வொருவாத் தொழிற்பெயரு முற்றே—திருவா
ளாரர்க்கு மேட்டா வரியதிரு நாமப்
பிரம மெய்த்தேசப் பெற்றி—வரமாகு

முப்பொருளின் றன்மை முடிவாக யாவர்க்கு
மெப்பொழுது முள்ள தெனவாக—விப்பொழுது
தானே யுபதேசந் தங்குமென்ப தாய்மொழிவா
ரூனே யறுக்கு முறுமுரணாய்—வானேயு
மாவி யுளத்திருட்கோ ராதவனாய் மெய்த்தவர்கண்
மேவி யிருந்தும் விழுப்பொருளாய்த்—தாவிமிக
வுச்சரிக்குங் கேண்மை யுடைத்தா யுயர்சிவத்தை
வைச்சிருக்கு ஞான வழக்கதாய்—நிச்சயித்துச் (௫
செல்லா தவர்செவியுஞ் செல்லுவதாய்ச்—சீரருளைச்
சொல்லாத வாயுஞ் சொலுமெனலா—லெல்லாரு
நண்போ டுரைத்திடவே நன்னமச்சி வாயவெனப்
பண்போ டுயர்நாமம் பற்றியே—கண்போது
சூட்டுவார் சூட்டித்தந் தொல்வினையி னெல்லையிரு
ளோட்டுவார்க் கெல்லாமெய் யோங்கொளியாய்—நாட்டுமரு
ணின்றோன் சபையி னிகழுங் கருணைநெறி
சென்றோன் சிவாகமத்தின் சீரொலியு—மன்றோதுந்
தேவாரம் பண்ணிற் சிறந்ததிரு வாசகமும்
நாவா லுருகி நவில்வாரு—மோவாமற்
சிந்தை யுருகித் திகைப்பாருஞ் சித்திரையின்
முந்து பருவ முதற்றிருநாள்—வந்தபெருந்
தேரோடு மீசன் றிருவிழாச் சேர்ந்திலங்கச்
சீராருந் தொண்டர் சிறப்புடனே—பாரோடும்
வெள்ளம் பரந்திலங்க மேவுமது போற்கருணை
வெள்ள மெழுந்தருளு மேன்மைகண்டு—கொள்ளுந்
தவமுடையா ரேத்துந் தகைமையினன் மங்கை
நவமுடைய பொன்னடியை நண்ணிச்—சிவனே
சிறியே னறியாமை தீர்த்திடுவா யொன்று
மறியே னெனவணங்கி யார்த்தான்—பொறியகலப் (௯
பார்த்தான் சிரத்தைப் பரிசித்தான் பாவனையாற்
றீர்த்தா னறிவைத் திருப்பினன்—சேர்த்தவனை
வந்தித் திடுவதல்லான் மற்றொருவர் பின்செல்லச்
சிந்தித் திடுவதில்லைச் சியென்பா—டொந்தித்த
மாதாவுன் பாலன்பாய் வந்தா னெனவுரைக்கி
லேதாகு மெச்செனன்த் தாயென்பான்—பேதாய்
மலத்தா லுழந்தாய் மலமகன்றார்க் கெல்லா
மிலைத்தா யருளல்லா லென்பா—ணலக்தாகுந்
தாயும்பொய்ச் சுற்றமுந் தந்தையு மோர்கணத்தி
மாயு முலக வழக்கென்பா—னாயுங்கான்

மாயு மூலக வழக்கெல்லா மீசனரு
ணையமே யொன்று நிலையென்பாள்—காயமாந்
தந்தை யுனக்கிவனே யென்னிற் றகுமுதராத்
தொந்தத் தளவுண்டோ சொல்லுங்கா—லெந்தையடி
வந்திப்ப தாக வரும்வழியிற் றங்கிநின்று
சந்தித்தோ னுங்கவனுந் தந்தையோ—பெந்தித்த
யான்மரிக்கு முன்னு ளவன்மரித்திங் கென்னுதராந்
தானுதிக்கிற் றந்தை தவறன்றோ—வூனுதிக்கு
மாறே யளவில்லை மாறுபட்டுத் தோற்றுமலப்
பேறே பிதாவாய்ப் பெறுமோதான்—மாறெலா (௭௰)
நீக்கியறி வானந்த நேய முறவடியி
லாக்குவான் றந்தையெனக் காமென்பா—ளூக்கு
மகவே யுனக்கிவர்க ளன்னின் மருவிச்
செகமா தரிப்பார் செனிப்பார்—வகையா
மிருவினையா லிவ்வுலகி லேத்தபிரா ரத்த
மருவுதற்காய் வந்தார் மகவோ—வொருவுதற்கு
நாளே வருங்கா னமைக்கேட்டுச் செல்லுவரோ
தாளைப் பிடித்திரென்றாற் றங்குவரோ—வாழப்
பிறந்தாரே யெம்மைவிட்டுப் போர்வீரே யென்று
பறந்தாலு நின்றுபார்ப் பாரோ—நிறைந்த
வுயிருயிரிற் றோற்றி யொடுங்குதலு முண்டோ
செயிருயிரிற் றோற்றுஞ் செயலாற்—பயில்வினைக
ளுள்ளளவு மோடி யொடுங்குவார் தம்மைமிக்க
பிள்ளையென்ப தெவ்வாறு பேசுங்கான்—மெள்ள
வியக்கு மரன்பா லிசையாத வாறு
மயக்குவார் தாமோ மகவா—முயக்கொள்ளு
மீசனே தாயாக வெவ்வுயிரும் பிள்ளையெனப்
பேசுவதே ஞானப் பெருமையென்பா—ளேசமுற்று
சுற்றமே யுற்றா ரெனச்சொல்லிற் றொல்கருமக்
குற்றமே மாயைக் குழாமன்றோ—வுற்றவருட் (௮௰)
கண்ணை மறைத்த கடிய விருட்குலமாய
நண்ணிபருட் டெய்வ நவையென்றும்—பண்டு
மெல்லாம் பழுதென்று மீசனெழிற் பூசையுறச்
செல்லா வறுமையுறச் செய்யுமென்று—மில்லாத
வீம்பேத வாதாள் விழலதெல்லா மென்றுமெய்யிற்
சாம்பவிடஞ் சாதித் தவிறன்றுந்—தீம்பாகு
மக்குமணி யங்கத் தடாதென்று மாடவர்பா
பக்குவத்திற் கூடல் பயனென்று—மக்கடமைப்

பெற்றிடுவ தன்றேமெய்ப் பேறென்றும் போதா
சுற்றமல்லா துண்டோ துணையென்று—முற்றநாஞ்
செத்தாலுஞ் செய்வர் சிறப்பென்றுஞ் செல்வத்தா
லொத்தாசை மக்கட் குறுமென்றுங்—கத்தாவைச்
சேராமற் புத்திசொல்லிச் செய்வித்த தீயரையான்
பாரா திருப்பதுவே பண்பன்றோ—தீராத
மும்மலங்க ளீர்த்தறிவின் மூன்றுருவாம் பெற்றியருந்
தம்மைப்போற் செய்தார் தமரென்பா—ரிம்மைப்
பதியே புனைநோக்கும் பண்புற்றோ னென்னின்
விதியாற் பதியன்றே மேவ—மதியாரு
மாண்பெ ணவியென்ப தாருயிர்க் குண்டோதான்
கோண்கண் டனுவின் குறியன்றோ—வீண்மண்ணிற் (௧௬)
றோற்றுதரு வெத்திறத்த தத்திறத்த தாய்த்தோய்ந்தங்
காற்றுமலப் போத மதாய்நின்றும்—வேற்றுடலை
யின்பமெனக் கண்டிங் கிசைவதெல்லாம் வீணான
துன்பமல்லா துண்டோ சுகமுயிர்க்கு—வன்பாரு
ஞாலமதி னண்ணரி நடக்குமக ளோராண்
கோலமது கொள்ளக் குறித்தொருத்தி—மாலுற்
றணைவதற்கு முன்ன மதன்சுவடு கண்டும்
புணரும் வகைபுணரு வாளோ—வுணரு
மொருத்தி யொருவனுக்கங் குற்றமா லல்லால்
வருத்தின் மறுமால் வருமோ—பொருத்திப்போய்ப்
புல்லுவார் தம்மோடும் புல்லா னரனென்னச்
சொல்லுவார் சொல்லைத் துணிவுற்றுஞ்—செல்லு
மிவனே பதியென்றிங் கில்லாது சொல்லிற்
சிவனையகல் விப்பதன்றோ தேரின்—றவநே
ருறுவா ரரனுக் குறுமடந்தை யாய்த்தந்
திறமான் சிதைத்ததிலை தேரின்—பெறுமானுங்
காண்பால தாகி லனுகான்பூ மானென்ன
வீண்பால தாக விடுத்ததன்றோ—பூண்பாலா
மெய்யா மடந்தை யெனவிரும்பி மோகமாய்ச்
செய்யா நலங்களெல்லாஞ் செய்வித்து—மையறுங் (௭)
காய மொருவருமே காணும லாயத்தி
லேயு நெறியு மியற்றுமன்—மாயமற்ற
வீச னடியார்க ளேவலினுஞ் செல்லாமற்
றேசிகர்க்குஞ் செல்வஞ் செலுத்தாமன்—பாசமலச்
சொல்லும் புராணச் சுவைக ளுரையாமற்
செல்லுமன் பாலன்பு செய்யாமல்—வல்லபடி.

ளாசறனிற் காவன் மனையு ளடக்கிமிக
வாசையுற வெல்லா மமைத்தங்கு—னேசமுறு
மால்காவி மையற் றொழிலனைத்து மன்னிமலத்
ால்காவ விட்டமலத் தூட்டனன்றோ—காலன்பா
லுற்றபோ வியுறுமுடலைக் கையாற்
பற்றுதலுஞ் செய்யாப்பொய்ப் பாவியன்றோ—சொற்றவரு
ளீசனுக்கே யீயா னிசைந்தவபி மானமெல்லா
நீசனுக்கே யீயுநெட் டேனன்றோ—மாசற்ற
தேவென்பான் றன்னையெனத் தேவியென்பான் சீவனு
சாவென்பான் பொல்லாச் சதியனன்றோ—கோவென்னு
மீசன் பதியாகி யெவ்வுயிரும் பெண்ணாகி
நேசமுறு மல்லா னிலையுண்டோ—மாசற்று
மாவியோ டாவி யணைவதுண்டோ பெண்ணாகும்
பாவிபதி யென்னப் பகர்வதோ—வாவியற்ற (௱௰)
மாயமே காய மலமா யறிவழிந்து
தோயும் பிணமாற் றொடென்பா—னேயுநெறி
யாளடிமை யெல்லா மடைந்தார்க ளென்னிலரன்
றாளடிமை யல்லாற் றனியுண்டோ—நாளு
மெனக்கடிமை யென்றிங் கிசைந்தா னீசன்
றனக்கடிமை யின்றாய்த் தனித்து—மனக்கவலை
யுற்றுப் பிறப்பென்ப தெல்லா முறப்பட்டுக்
குற்றநர கத்துங் குடிப்பட்டுச்—சுற்றிநர
னாக்குங் குருலிங்க சங்கமமா யுற்றீச
னீக்கு மயக்கமெலா நீக்கியெனை—நோக்கி
யடிமையெனச் செய்தா னறிந்தறிந்தும் பொல்லாக்
கொடுமைசெய்வ தெல்லாங் குணமோ—கடுமயக்கந்
தள்ளுவா னீசன் றனக்கடிமை யாகினல்லா
லெள்ளுவான் சற்று மிசைவதோ—வுள்ளதா
மெல்லாரு மீசர்க் கடிமை யெனக்கடிமை
செல்லாது சீவன் சிவற்கடிமை—யில்லாத
மூட னடிமை முறையாக்கும் பொல்லாத
வேடர் தருமவ் விதியன்றோ—நாடுஞ்
சிவனடியா னென்றமொழி தேரிற் சிவனுக்
கிவனடியா னென்றெண் றிசைக்கும்—பவநெடிய (௱௨௰)
பாதகத்தார் பொய்க்குப் பயப்படா தோதுமவ்
போதகத்துக் குள்ளாய்ப் புகுதாதே—மேதகத்தா
மொன்றலா வொன்று மானதாகி நின்றவா
றென்றலா வொன்றிலை யிருத—லொன்றலா

வீறே முதலதனின் றலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கென்றும்—பேறே
யுரைக்குஞ் சிவஞான போதத்தை யோரா
திருக்கு மவர்க்கியல்பா மென்பாள்—செருக்கு
முடைமையுனக் கீதென் றுரைக்கி லொருவர்க்
கடிமை யுறினுடைமை யாமோ—திடமாய்ச்
சிவனா முடைமையெனச் செப்பின் சிவனுக்
கிவனடிமை யன்றோ பிசைக்கு—மிவனதிது
வென்னி னிறையிவனின் வேறா மிவனவனுத்
துன்னிவிரண் டாகுமோ சொல்லுங்கால்—மன்னுமுட
லொற்றுமையா யாவி யுடன்படுங்காற் போகவிக
முற்றிடுவ தொன்றா யுறுமன்றோ—பற்றுதற்கு
கில்லாத தாமு மிதனு ளுளதாகிப்
பொல்லா நரகம் புகுவரோ—செல்லாத
வாவி தனுவோ டரும்பொருளு மொன்றாக
மேவிச் சிவார்ப்பணமாய் விட்டதன்றோ—பூவிதனின் (௱௩௭)
யானெனதென் றெண்ணி யிலொரு பேற்பாருந்
தோன்றனது தானுக் கொடுத்தடக்கித்—தான்றனைத
யீந்துபலன் கொள்ளு மியல்போர்க் கினைநன்று
மாய்ந்து தமையற்றோர்க் கவைநன்றோ—பேய்த்தமொழி
யெங்குமுளா னென்றனை யொன்றன் றிரண்டென்னி
லெங்கு முளனன் றெனத்தெளிவு—மங்க
ணவையவ னன்றில்லைப் பொன்னெனிப்போ லீச
னவையுடைமை யாளாநா மங்கென்—நவையகலச்
சொல்லுஞ் சிவஞான போதத்தைச் சூழாமற்
செல்லுவார்க் கேதுமுண்டாய்ச் செப்புவா—ரில்லறத்தி
லேங்குகுலநலத்தி னுண்மையறச் சைவநெறி
தாங்குவது மங்கை தவறென்னிற்—றீங்குடையற்
சாதியுயிர்க் கில்லைத் தருங்கரும பேதத்தா
னீதிகுல நான்காக நின்றனதா—லோதுங்
கருமமொரு நான்காங் கடவுள் வினையும்
வரும்பொதுவே யாக வகலாற்—றருங்கரும
பாவ மெவர்செயினும் பற்றுவார் தீதிய
மேவுதன்ம மார்செயினு மேலுறுவார்—தேவ
னரனே யெனப்பணிவா ராரேனு மெங்கள்
பரனே பசுபாசம் பற்றி—வரினே (௱௩௮)
யிறைமாறு கொண்டுங் கெழுமிறவி யாகித்
துறைமாறு கொண்டு சுழலு—மிறைமா

றெழுகுலங்க ளெல்லா மிறையருளான் மாற்றித்
தொழுகுலமே யன்றிச்சொல் லுண்டோ—விழிகுலமாஞ்
சாதியுயிர்க் குள்ளதெனச் சாற்றுமோ மாமறைக
ளேதகலத் தேவர் திருமொழியு—மோதும்
பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வாச்
செய்தொழில் வேற்றுமையா லென்றும்—பிறப்பகல
வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படுமென்றுஞ்—செய்ததனாற்
றேசிகர்க்குப் புத்திரராய்ச் சேர்ந்தாரை வன்னமெனப்
பேசி னரகமுறும் பெற்றியன்றே—மாசிற்
றிருந்துபெருஞ் சாதிச் செயலானற் சைவத்
திருந்தவர்க ளோதித் திலையாற்—பொருந்துகின்ற
சாதிவியப் பாகத் தருமன்றே வேதமிதை
நீதிமறை யோரே நிகழ்த்துவதா—மோதியதோ
ராசிரம நான்கு மடங்கும் வருணத்தி
னேசமுறு வேத நெறியதனைப்—பூசுரரை
யல்லாதா ரோதி லருநரகத் தாழ்வரென
வெல்லா மறையு மியம்புவதாஞ்—சொல்லார் ௱
மறையோர் முதலாக வாழுமுயி ரெல்லா
மிறையோனும் பத்தி யிசையி—னிறைவாருந்
தேசிகர்பா லுற்பவிக்குந் தீக்கையொரு நான்கதனின்
மாசரிக்கு மாறுவர வுற்றோர்க—ளாசரிப்பா
ராகமங்க ளையைந் தொருமூன்று மல்லாதார்
தாகமுற்றுத் தீண்டிற் றகுநிரயத்—தாழுமெனச்
செப்புஞ் சிவாகமங்க ளெல்லா மிதனாலே
யொப்புயர்பி ரண்டுக் குதாரணந்தா—னிப்பொழுது
வேதநூல் சைவநூ லென்றுரைக்கும் வேறற்ற
வாதிநூ லாதியலா வாதியா—லோதுநூ
லாரணநூல் சைவ மருஞ்சிறப்பு நூலாகுங்
காரணர்க்கு மல்லார்க்குங் காணுங்காற்—பூரணமாம்
வேதா கமத்தின் விதியா லிழிபுயர்பிங்
கேதா முதரத் தெழுவாருஞ்—தீதாகா
ஞானத் துதிப்பாரு நண்ணியிடி னென்றுமோ
வானத்தார் ஞான வரனுமோ—மானத்தா
லாதிமறை யோதி யதன்பயனென் றும்மறியா
வேதியர்சொன் மெய்யென்று மேவாதே—யாதியின்மே
லுற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்தாச்
செற்ற புலையர்பாற் செல்லாதே—நற்றவஞ்சேர் ௱௬௰

வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மில்லாத
மூடருடன் கூடி முயங்காதே—நீட
வழித்துப் பிறப்ப தறியா தரனைப்
பழித்துத் திரிபவர்ப்பா ராதே—விழித்தருளைத்
தந்தாளு மீச னடியாரைச் சாரென்ன
வந்தா ருமாபதியான் வாழ்பதியே—நந்தாநங்
கொற்றங் குடியான் குலவியடி யாரடையச்
சொற்ற திருமொழியைச் சூழாமற்—குற்ற
முறுவர்க்குச் சாதி யுயர்புநன்று முத்தி
பெறுவர்க்குத் தீக்கைப்பே றென்பா—ரிறைவா
மிறவாப் பெருஞ்செல்வ மில்லறத்தி னோங்க
வறமானு தெல்லா மடையத்—திறமாக
நின்றதனை விட்டு நெடிய துறவதனைச்
சென்றதுநீ யெவ்வாறு செப்பென்ன—நின்றுலகி
லெண்ணுங் கறத்தார்க்கோ வேய்ந்தகதி யெவ்வுலகு
நண்ணு தவர்க்கோ நலஞ்சொல்லாய்—கண்ணுமப்
பட்டதெல்லாம் பொய்யே பரமசிவனருளால்
விட்டதெல்லாம் மெய்ஞ்ஞான வெற்றியன்றோ—நட்ட
விலமே பலமா யிசைந்ததெல்லாம் பொல்லா
மலமே யிலமாய் மருவி—நலமே (௭௭௫)
தருமமனை நீத்துத் தருமிலத்தின் மோகம்
பரவுதலா லுண்டோ பலமென்—பரபழியே
இப்பமலைச் செய்தியன்றோ நீவினையா லிடிகச்
செப்பு முலைச் செயல்பற்றிப்—பைய
நடக்கு மயக்கமென நண்ணியதை நீங்காக்
கிடக்குங் கிடையே கெதியாய்த்—தொடுத்தோர்
தொல்லையற வெண்ணுங் குஞ்சூழ்ந்தமற மொன்றினுக்குந்
செல்லுமலை மைந்தின் செயலாமால்—வல்லமைந்
சொற்க நரகமவை தோய்ந்தவையின் சேடத்தா
னிற்கும் பிறவி நிலையினு—னற்றருமம்
பண்ணியபே றன்றோ பகரயன்மா றேவரென
வெண்ணரிய மக்களுக்கு மேற்றமாய்—நண்ணு
மதிகாரம் பெற்ற வதனு லெவரு
மதியான தெல்லா மயங்கிப்—பதியா
மிவனே யெனக்கருதி யீசனன்பு நீக்க
புவனேச னெல்லாம் புறம்பாய்ப்—பவனேசப்
பட்டாவை யெல்லாம் படைப்பயனுஞ் சங்காரந்
கிட்டிமுக லெவ்வுயிர்க்குஞ் செய்துதா—னட்டப்

படுவதின்றாய்ச் சங்காரப் பட்டதெல்லாஞ் சிட்டிப்
படுவதற்கு முத்தியினைப் பற்றித்—தொடுவதற்குத் (௱௮௰).
தோற்ற மொடுக்கஞ் சொலுமிவையு மில்லாத
தேற்றமே தேற்ற மெனநின்று—மாற்றுமல
முள்ளபோ தெல்லா மலமு முளதாக
வெள்ளுமதி காச மியல்பாகக்—கள்ளமலம்
விட்டபோ தெல்லாம் விடவா மிருவினையின்
கட்டகல்வ தாகக் கருதுமுத்தி—தொட்ட
வனுக்கிரகந் தானு யடைய வருட்குத்
தனுக்கிரக மாகத் தருமாற்—செனிக்கு
மிருவினையோ டொன்று மிசையு மலமெல்லா
வருமறமு மாங்கே வருமா—லொருமலமு
மில்லா விடமா மிசைந்தசிவ புண்ணியமற்
றெல்லாந் துறவோ டிசைவன்றோ—சொல்லுமல
மற்றபோ தன்றோ வசனெறியைக் காமித்தங்
கிற்றுறக்க நெஞ்ச மியல்பாகு—நற்றவர்க்கு
மீசன்மேன் மோக மெழுந்தன்றோ வில்லறத்தை
மோசமெனக் காணு முறைபெற்றா—ராசற்ற
வத்தன்மேன் மோக மடைந்தன்றோ வில்லறத்தைக்
கொத்துடனே மாற்றக் குணம்பெற்றார்—சுத்தனரு
ணெஞ்சத்துள் வையாப்பொய் நெஞ்சர்க்கு மில்லறமாம்
வஞ்சத்தை மாற்ற வருவதென்கொல்—கொஞ்சக் (௱௯௰)
கருமமென்ப தொன்றைக் கருதுவார்க் கேதான்
தருமா தருமமெனச் சார்ந்து—வருமதனைச்
சாதித்தார்க் காகுந் தரும மதன்மமதைச்
சேதித்தார்க் காகுஞ் செயலாமால்—வாதித்த
பாவத்தை மாற்றிப் பகாறத்தைச் சார்ந்துபசுத்
தேவத்துக் கன்பு செயற்பாலாய்—மேவித்தம்
மோகத்தா னீத்திலத்தை முற்றியதே யன்றிமல
பாகத்தா லல்ல பகருங்கான்—மாகத்தா
வின்னு ரெனவு மிசைந்திலையாற் றீயமல
முன்னாய் நடத்து முறையன்றோ—மன்னி
யறிவித்தா லெல்லா மறிவன்மெய்த் தேவை
யறிவியா தாலறிவ தாரேற்—செறியுமல
மற்றார்க் கறிவை யளிக்கு மறுதார்க்குக்
குற்றத் தளவே கொடுக்குமால்—நற்றிகத்
தித்திக்கும் பால்பித்தஞ் சேர்ந்தாருக் கூட்டாஞ்
புத்தி யுடைய புனிதனைப்போற்—சத்தியமே.

செல்லாத மூடருக்குத் தெய்வத்தைத் தெய்வமெனச்
சொல்லா தவர்க்குஞ் சொலானீச—னல்ல
துணைவனைத்தோன் றாமலவன் றொத்தனுக்கு மாலா
யணைவளவ னாய்ந்து மறியக்—கணவனை (௨௱)
னென்றாலும் பொய்யென் றிசையா ளினியகுலத்
தொன்றாகு வாளோ வுயர்ந்துமிக—நன்றாகுங்
கத்தனையே நீத்துக் கருதுமவ னேவறருந்
தொத்தனுக்கன் பாகித் துறந்தாரைச்—சுத்தரெனும்
புத்தியென்ப தெவ்வாறு புன்மலத்தை மாற்றாத
சித்தமென்ப தன்றோ திடமாகுந்—தொத்துந்
தருமத்தாற் றேவாய்த் தகுவார்க்காய் நீத்த
கருமத்தார் கருமத் தாரே—யொருமித்து
நின்மலன்மேன் மோக நிகழ்ந்திலத்தை நீத்தாரைப்
புன்மலத்தா ரல்லவெனப் போற்றிடுக—நன்மையுற்ற
வாண்டவனை யாளென்று மானவனைத் தேவென்றும்
பூண்டதனா லுண்டாமோ புண்ணியங்க—ளீண்டவில
நீத்தானை நிந்தித்து நீணியயத் தாளாகச்
சேர்த்ததனா லுண்டோ செயலம்மா—வார்த்தோர்
தேவைப் பசுவாயுஞ் சிற்றுயிரைத் தேவாயும்
பாவித்தாற் கென்ன பயனுண்டாம்—பூவின்
முதலிழந்தார்க் கூதியமு முண்டோமெய்த் தேவாம்
பதமிழந்தார்க் குண்டோ பயன்கொள்—விதமாய்த்
துறந்தா ளனைத்துந் துணைவனையே பற்றி
யிறந்தா ளிதன்மேலு முண்டோ—சிறந்தவனைப் (௨௧௰)
பற்றி யொருத்தி பரிந்துமிக மாலாய்த்தஞ்
சுற்ற மனைத்துந் துறந்தவனுக்—கற்றமை
மேதோ கடவுளிசை வேதோ விசையில்லை
யாதோர் வினைக்கு மளவில்லைப்—பூதவினை
தன்னளவு நிற்கத் தகுமல்லான் மற்றொன்றை
யுன்னி நடக்கு முணர்வுண்டோ—மன்னுலகை
நீத்ததனான் முத்தி நெறியோ வுலகமெல்லாங்
காத்ததனான் முத்திக் கடவுளோ—வார்த்த
வரற்கா பிலமதனை யற்றபேர்க் கல்லா
னாற்கேது முண்டோ நவிற்றி—விரக்குதற்கா
யற்றதெல்லா முத்தி நெறியோதன் னுளன்ற
வுற்றவர்க ளெல்லா முறுதவமோ—குற்றமற்ற
வீசன்மேன் மோக மெழுந்தற்றுக் கன்றிமல
மோசனமு முண்டோ மொழியுங்கால்—பேசும்

மரியயன்றே வாவார்மற் றல்லாத பேருந்
திரிமலத்தோ டொன்றாகச் சேர்ந்து—வருங்கரும
பாகத்தாற் றேவாயும் பாவத்தா லாளாயும்
போகத்தாற் போகப் படுமுயிர்கள்—மோகத்தாற்
கத்தா வகத்தா வகத்தாவே கத்தாவாய்ப்
புத்தி திரிந்தமருட் போதத்தா—லத்த (உஉ0)
னரனே யெனவு மறியாமை நின்ற
துரையெனக்கின் றுள்ளபடி யென்னப்—பரவுமையற்
றந்தைபான் மோகத் தகுதியா லீசனென
மெந்தைபான் மோக மிழப்பன்றோ—சந்ததமுந்
தாயர்பான் மோகத் தகுதியா லீசனென
நேயர்மேன் மோக நிலாதன்றோ—மாயமுற்ற
மாதர்பான் மோக மருவுங்கா லீசனெனும்
வேதர்பான் மோகம் வெறுப்பன்றோ—போதமற்ற
மக்கண்மேன் மோக மருவுமா லீசனெனுஞ்
சொக்கர்பான் மோகந் தொடாதன்றோ—மிக்கதோர்
சுற்றத்தார்மேன் மோகந் தோன்றுமா லீசனென
மற்றவர்மேன் மோக மறுப்பன்றோ—வுற்றதோ
ராடகத்தின் மேன்மோக மாகுமா லீசனென
நாடகத்தார் மோக நவையன்றோ—நீடுமையற்
பொய்த்தேவர் மேன்மோகம் பூணுமாற் போதமுற்ற
மெய்த்தேவி னன்பு வெறுப்பன்றோ—வைத்த
பாரமெல்லா நீத்து பரமசிவத் தொன்றா
யிருப்பன்றோ வாவிக் கியல்பா—மிரிப்பா
முலகே நெடும்பிழையென் றோதி யுலக
மலைத்தே தென்ன வறைவாள்—விலகித்
துடைத்தாற் றனக்குத் துணையென்பாள் செல்வம்
படைத்தார் பஞ்சவாகு மென்பா—ளெடுத்துமுலை
தந்தா ணடக்கத் தகுந்தாரத் தைச்சுமக்கு
நந்தா வுலகை நடையன்றோ—தந்தையென
வந்தோன் பசித்திருக்க மக்களுக்கே யூட்டுமையற்
சிந்தா வுலகின் செயலன்றோ—நந்தாமற்
றொட்டகனைத் தொட்டுத் தொடுநன்றி யத்தனையும்
விட்டுவிடும் பொல்லா விதியன்றோ—கட்டாரை
யோங்கும் பொருளா லொறுத்துப் பகையாக்கி
வாங்கு முலக வழக்கன்றோ—நீங்காம
லொட்டு மகவொருவ ரேனு மொருபணத்தால்
வெட்டும் பகையாய விடுவரன்றோ—கட்டியரு

னீசன் றிரவியங்க ளெல்லா மிலக்காக்க
வாசைகொள்ளும் பொல்லா வவத்தரன்றே—மாசறுக்குந்
தேசிகர்க்கோர் காசுஞ் செலுத்தார்தஞ் செல்வமெல்லாம்
வேசியர்க்கே யீயும் விடரன்றே—நாசமிலாச்
சங்கரர்க்கே யன்பு தரிப்பியார் நீப்பிறப்பா
மங்கையர்க்கே யன்பதனை வைப்பரன்றே—சங்கையற
வுள்ளளவு மக்களுக்கே யீய வொருப்படுவ
ரெள்ளளவு மீசர்க்கொன் றீயாமற்—கள்ளமலந் (உசഠ)
தீர்ப்பார் புறமிருக்கத் தீயமக்க ளோடருந்தி
யார்ப்பார் நரகத் தவரன்றே—நோற்பார்கள்
பெற்றெடுக்க வீசன் பிறந்திருக்கப் பிள்ளையென
வெற்றீடலந் தீண்டும்பொய் வீணரன்றே—நற்றியரன்
பூசைசெயும் போதனைகம் போதுசெலு மில்லதற்கு
மோசமெனும் பொல்லாத மூர்க்கரன்றே—மாசற்ற
மைந்தர்செயுங் குற்ற மறைப்பார் தவரென்னி
னிந்தைசொலும் பொல்லாநெட் டூரன்றே—சிந்தைதனை
வாதைசெயுந் தீய மலமகற்றுஞ் சங்கமத்தைச்
சாதிசொலும் பொல்லாச்சண் டாளரன்றே—நீதிசொலுந்
தேசிகரை யீசனெனச் செப்புதவர்க் கில்லாத
வாசகமே சொல்லும்பொய் வஞ்சரன்றே—நேசமுற
வுள்ளுவா ரல்ல வுறவல்ல தேசிகரை
யெள்ளுவார் தீய விடக்கரன்றே—கொள்ளுநிலை
காணார் சிலரோடுங் கண்டாரைப் போற்றவரை
வீணும் பொல்லா விடரன்றே—பூணுத
மீசற்குப் பூசை யிலாதிருக்க மக்களொடும்
போசனமே செய்யும் புலையரன்றே—பேசு
முலகமுயி ரெல்லா மொருவனிதிங் கென்றால்
விலகி யெனதென்னும் வீணர்—நிலைவதோ (உருഠ)
ரூணுற் பிறிதுயிரைக் கொன்றூனைத் தின்றமல
வீணாய் நரகில் விழுவரன்றே—கோணுறும்
பொல்லாப் புலாலைப் பொசியாரு நல்விருந்தாற்
கொல்வார் நரகக் கொடியரன்றே—பல்பிணிகள்
பெந்தித்தாற் சிற்றுயிரைப் பெலியிடு வித்தூனைத்
தொந்தத்தாற் றின்னயத் தோய்வரன்றே—பந்தமுறு
மாயா வுலகை மதுபானஞ் சங்கையறத்
தோயா தவரே துணையன்றே—சாயாத
சங்கமமே லிங்கந் தருங்குருவோ டொன்றெனத்
தங்கு மவரே தபரென்பார்—பொங்குமருள்

வேடமும் பூசையுமே மெய்யென்றான் பொய்யென்றான்
மாடையும் வாழ்க்கை மனையையுமே—நீடியதோர்
நெஞ்சு விடுதாதி னிகழ்த்துமுப தேசமுறு
வஞ்சகரை நெஞ்சின் மருவெனென்பா—னஞ்சுண்ட
தேவேமெய்த் தேவென்னச் செப்புவதென் மூவருநங்
கோவே யெனமறைகள் கூறவெனின்—மேவுந்
திதிக்கடவுள் சங்காரஞ் செய்கடவு டம்மை
விதிக்கடவு டானே விதித்தா—னதியைப்
பொறுப்பானுஞ் சிட்டிதனைப் பூண்பானு மாலாற்
சிறப்பாவா சிட்டிதிதி யெல்லா—மறுப்பா (உகூ)
னரனேயா மன்றே வவன்மரிப்ப தின்றி
வரமே யளித்து வருவான்—பரமே
யிவனல்லா ரெல்லா மெழுபிறப்பை யேயும்
பவமாம் பசுவாகும் பார்க்கிற்—செவையா
யிலயித்த தன்னிவில யித்ததாம லத்தா
விலயித்த வாறுளதா வேண்டு—மிலயித்த
தத்திதியி லென்னி லழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கென்று—முத்திநிலை
சொற்ற சிவஞான போதத்தைச் சூழாம
லற்றவர்க்கே பொய்க்கடவு ளாமென்பா—ளுற்ற
திருநீறு மஞ்செழுத்துஞ் சேர்கண் டிகையு
முருமாறு கொள்ளுமுறுந் தேவே—கருமாறச்
செய்யுமென நல்லொழுக்கஞ் செய்திடினுஞ் சீவனற்று
நையு முடற்சிறப்பு நண்ணியதா—மெய்யாகு
மஞ்சக் கரத்தார்க்கே யாவியுறு மெய்யழுக்கு
மிஞ்சக் கரக்கும் விதியென்ன—நெஞ்சிரக்கத்
தாசாரஞ் சற்று மிலவெனு மாவியைப்போற்
றேசாரு மீசன் சிறப்புளதாற்—றாசாகு
மாவியற்றே லேதடுத்து மாவதுண்டோ வீசனல்லாற்
பாவிப்ப தெல்லாம் பழுதென்னத்—தேவர் (உஎ)
தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிதென்—றெனக்குவலை
போக்குவ தாய்ச்சொன்ன பொருளுணா துணராப்பொய்
மாக்களுக்கே நிரியம் வைத்ததென்பா—ணீக்கமறும்
பேசரிய வையம் பிரமத்தாய் வஞ்சத்தி
னேச முடையலத்தா னிப்பொருளி—லாசைப்
படுமாற தெவ்வாறும் பட்டு நிரயந்
தொடுமாற தெவ்வாறுந் தொட்டு—விடுமாறுங்

கெல்லாம் விடுத்தங் கிசைவதற்கோர் தேவின்றிப்
பொல்லா நரகம் புகுவதாய் — நில்லாமெய்
யாவி தனைக்கண் டகம்பிரம மென்னுமலப்
பாவிகளைக் கண்ணுறும் பாரேனென்பாள் — மேவுமுயிர்
கொன்றான் றினல்காமங் கோப மதுபான
மென்றுந் தனுவுக் கியல்பாக்கி — மன்றனை
மாடுவான் றன்னை யகற்றியவன் சத்தியடி
கூடுவா னாகக் குறித்துடலிற் — கூடுவான்
கண்டிகையு நீறுங் கருதுமெழுத் தோரைந்து
மண்டிகழும் வாமி மருவியநட் — டொண்டொழுங்கு
மாறுபட்ட பொல்லா மருட்குழா மாவார்க்கும்
வேறுபட்டே னென்ன விளம்புவா — னீறுபட்ட (௨௮௰)
காயமதி லீசனையுங் கண்மணியுங் கட்டியடித்
தோய்ந்தவா வாயத் தொடர்ந்தே சட — மாயமறு
நாதனடிக் காக்கிழுக னன்றுஞ் சிவாலயமு
மோதுசிவ தீர்த்தத் துறவியும் — பேதமென
நீசர் குலமுதலாய் நீங்குமவை தோற்றிட
நாசமுறன் மாதர் நகைவெச்சிற் — றேசனைக்
கூடி நடந்து குலவு முயிர்மடியின்
வாடுமுட லொடிவிங்க மாய்ந்தறிவாய் — நீடியதோர்
வேதா கமத்தின் விதிமாற தாய்வியச்
சூதாவார் நீங்கதலைச் சொல்லுமறை — நீதாகா
தற்றடியா ரோங்குஞ் சிவாலயமு முள்ளத்தாச்
செற்ற புலையர்பாற் செல்லாதே — மற்றவந்தோர்க்
கொப்பரே ராயினுக்கு முறவுடையின் மண்மூசி
முப்பொழுது முழ்கார் முயன்றென்றுஞ் — செப்பும்
புறத்தூய்மை நீரா னமையு மகத்தூய்மை
வாய்மையாற் காணப் படுமென்றுந் — தூய்மொழியின்
போதகத்திற் செல்லாமற் புன்னூல்பா சாட்டுமலப்
பாதகரைக் கண்ணுறப் பாரேனென்பாள் — மேதகத்தா
மீச னுருமுகலை யெண்ணிறந்த தாவியவை
மாசகன்று நிற்கும் வகையறிந்து — பாசமிரு (௨௯௰)
மாயையொடு கன்ம மருவிப் பிறப்பிறப்பாத்
தோயு மவையகலத் தூயவரு — ளாயவுயிர்
நீரொடுநீர் சேர்ந்து நிறைந்ததே போ லீசனுடன்
சேரு மெனுமைக்கச் சிறுமையுடையான் — பாவிக்க
மேவு முயிர்க்கொரு வீடுமலம் பொன்றியபின்றற்
றேயு முடன் மேன்முயற்சித் தொய்யாதென்றும் — காயத்தின்

காவிதனக் கஞ்ஞான மெய்ஞ்ஞான மாகிலதாய்ச்
சீவிப்ப தல்லாற் செயலுண்டோ—மேவியநீ
றொன்றாக லாற்கத்த னுடைமை யின்றதாய்
நின்று ளிவனைநினை யேமெனன்பாள்—குன்று
விருகட் கிடையி லிசைந்ததடை யன்ன
மருவி மலமுயிரை மன்னக்—கருவினை
யெல்லா மிசைந்தங் கிறப்புப் பிறப்போடு
பொல்லா நரகம் புகுந்துமிக—வில்லாத
வின்பமே மேலா யிசைந்திடுநா ளீசன்மலத்
துன்பமே நீக்கத் துடக்கோர்கண்—முன்புற்ற
கேவலமே போலக் கிளருமறி வேதுமற
மேவுதலே முத்தி விதியென்பா—ரேவியறச்
செப்பியதோர் முத்தித் திறநன்றாந் தீதிருளை
யொப்புவதா முத்தி யொழுங்கென்னி—லிப்பொழுது (௱எ)
மாயா தனுவிளக்காய் மற்றுள்ளங் காணுமதைத்
தோயாத கேவலமுஞ் சுத்தமன்றோ—வீயாத
வம்பகத்துக் குற்ற வவலத் தடையகன்றாற்
செம்பொருளைத் தேர்தற் றெளிவன்றோ—நம்புமுயிர்க்
காசற்று லீசனே டாவதுவே முத்தியெனப்
பேசுவதே மெய்ஞ்ஞானப் பெற்றியதாந்—தேசற்ற
வாசாதி யேலணைவ காரணமேன் முத்திநிலை
பேசா தகவும் பிணியன்றோ—மாசுற்றார்
தூங்குதலே போலத் துலங்குங் கரணமற
வோங்குதலே முத்தி யெனவுரைக்கிற்—றாங்கும்
பொறியிலார் முட்டைசினை புன்மரங்கள் கொப்பத்
தறிவிலார் முத்தியடை வாரா—நெறியின்
வருமிந்த முத்திக்கு மன்னுசிவ ஞானக்
குருவும்வர வேண்டாங் குறித்து—வரைவாய்
வருந்துன்ப மல்லான் மருவு சிவஞானம்
பொருந்துவதங் குண்டோ புகலிற்—றிருந்தியதோர்
பாடாண வாதம் பகருவார்க் கேமுத்தி
கூடா தவனொடுங்கூ டேனென்பா—ணீடுசெம்பிற்
றங்குங் களிம்பதறச் சாருங் குளிகையென
மங்கு மலமுயிர்க்கு மாயவருட்—சங்கமுறச் (௱௰)
சுத்தமா மொன்றேனுந் தோய்வற்றுத் தான்போத
முத்தியென முத்தி மொழிந்திடுவா—னித்தியமா
மீசனே டாவி யொழிற்பாச மென்மறைகள்
பேசக் குளிகையிற் பின்களிம்பு—நாசமே

றோயிரு றுணர்வு மொருங்கொப்ப தன்றிச்
செயல்வண் டுருவுமதைச் சேர்ந்து—மயல்புழுவின்
நெஞ்சமத னேடுற்று நின்றமையா னீடுருவ
வஞ்சமே யுற்று மருவிடினுந்—தஞ்சமெனும்
முத்தி தனிலறிவு மூளாமற் சாரூபந்
தொத்து தனுவதனைத் தோய்ந்ததற்பின்—பித்தனையுங்
கூறுகதி நோக்குங் குணமிலையான் முத்தியென்ப
தூறுடைத்தே யீசனரு ளுற்றவர்கள்—வேறுடைத்தா
மெல்லாத் தொழிலு மிரும்பே யறிவுமுறச்
செல்லா வுயிர்செலவே சேருவதா—வில்லாத
வாவிக்கோ ரைந்தொழிலு மாவதெங்ங னுவிதொழின்
மேவும்போ தீசன் விடுவதுண்டோ—பூவிதனிற்
சூரியனுங் கண்க டிலங்கியதே யாவதல்லாற்
பாரி லிருளகற்றும் பண்புண்டோ—வோரி
லலைகடொடு மக்க ளலையல்லான் மற்றே
ருலகிற் புதுமை யுறுமோ—குலவிமிகுத்
தோங்குங் கடலை யுறுங்கடமே யாங்கதனை
வாங்கி நடத்த வழக்குண்டோ—வோங்குமரு (கசo)
ளுற்று ரிடையி னுறுவரெனி னன்முத்தி
யற்றது சாரூபம் பற்றுவதென்—குற்றமிலா
முத்தியெனி லவ்வறிவு முன்னவனும் போறிவிற்
றொத்துதனு மின்றியுருத் தோற்றுவதே—னித்தனருள்
பெற்று ருலகிற் பெருஞ்சீவன் முத்தரென
வுற்று ரெனமுத்தி யோதினரே—சொற்றவுரு
நீங்கினரோ நீங்காரோ வென்னி லிருவகையு
மோங்கினரேன் முத்தி யொழுங்கன்றே—நீங்ககன்ற
மாமாயை யீயவுரு மன்னுமெனி னெல்லினது
போமா றுமிதவிடு போனதன்பின்—றமாறித்
தூய வரிசியெனுஞ் சொற்பெறும தேமுளைத்த
தாகி லுருவதனை யாய்ந்திடலாந்—தோயுமது
சாரூப மென்னிலந்தாய்ச் சார்மலமு முண்டாகு
நேராகு மிவ்விதியை நெஞ்சதனி—னோராப்
பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்பான் றன்னை யடைனென்பா—ணெறியின்பா
லாவி யவிகார மாயிருக்க வாயுவுடன்
மேவி நடத்தி விகாரமதாய்த்—தாவி
யெழுபிறப்புஞ் சார்ந்தங் கிருக்குநா ளீச
னழிவிலாச் சத்தினி பாதத்தா—லொழியமல (கடு

இல்லிக் குடமதனை யேதென்பா னீதகலிற்
சொல்லுமுயிர் கேவலத்திற் றோய்வதுண்டோ—வெல்லா
நிறைந்த விருட்கு நிகழ்விளக்கே போல
வுறைந்த வரனருளே யாகிற்—செறிந்ததோ
ராவிக் குணர்வின் றசேதனமாந் தத்துவங்கண்
மேவியரு ளன்றியொன்றாய் மேவுமோ—தாவு
மருள்கருவி யென்ப கடாதா தவனை
யிருள்விலக்க வேண்டியெடுப் பாரோ—வருளுக்
குவமை விபரீத முற்றதனா லெல்லா
மலமே யறிவறிவ துண்டோ—சிவமே
யவிகார மாகி லருநரகக் காக்கிப்
புவிமேல்கீ ழோடப் புரட்டி—நவமாரு
மின்பமே யீச னெனத்தெளிவித் தெவ்வுலகுந்
துன்பமே யென்னத் துடைப்பித்தே—யன்பருக்கன்
பாமோ வருளோ டழுந்தாத வந்தகர்பாற்
போமோவென் னெஞ்சம் புகுந்தென்பாள்—மாமேவும்
வையமெல்லா மீசன் வடிவென்று மற்றுலகிற்
செய்வதெல்லாஞ் சத்தி சிவமென்றும்—பொய்வாழ்வை
சேதனமே யின்று மறிவோ னுகரிலொன்றும்
பேசரிய வாவியொன்றும் பெற்றியென்றுங்—காசமற்ற
பொற்பணியிற் பேதம் புரையென்றும் பொன்னாக
நிற்பதுவே போத நெறியென்றும்—நற்பொருளைக்
காண்பானுங் காட்டி யிடுவானுங் காதலித்துப்
பூண்பானாய் நிற்கும் பொருடானு—மாண்பெ
ணவியாய் மயலுற் றலைவானு நோயான்
மெலிவானு மீட்கு மருந்தானும்—பலியதனை
யேற்பானு மீவானு மேதமுறு விப்பானு
மார்ப்பானு மின்ப மளிப்பானுந்—தோற்பானும்
வெல்லக் கொடுப்பானு மீசனல்லால் வேறுண்டோ
சொல்லுமுத்தி யீதாஞ் சுகமறியா—ரல்லலுறுங்
காயமோ டாவி கருதுமாற் கிந்துமலந்
தேயுங்காற் றத்துவங்க ளோர்ந்தறிவாய்த்—தோயிற்
றுரியாவ தீதத் தருதோன்றிக் காயம்
பிரியா விடத்ததீதம் பெற்றுத்—திரியாது
நிற்பதுவே முத்தி நெறிநிமித்த காரணனோர்
கற்பனையே யுற்றுக் கழறுவான்—சற்பனையாம்
பாச முயிர்க்குப் பகையாற் பதியதற்காய்
நேசமா யப்பகையை நீக்குதற்காய்—நாசமிலா

வைந்தொழிலு மாருயிர்க்கா யாக்கியறம் பாவமெனுந்
தொந்த நரகசொர்க்கஞ் சூழ்ந்திடுநா—ளெந்தையருட்
டொண்டருக்கே யாளாகித் தொன்மை யிருவினையு
மண்டனுக்கே யன்பா யளித்துமலை—மிண்டகற்றி (௩-௬௰)
யாவி சிவத்தோ டழுந்தியபொன் றல்லாத
பாவகத்தை யொன்றாய்ப் பகர்வோ—சீவிக்குங்
காயமோ டாவி கருதுபல மித்தனையு
நேயமே யென்னை நிகழ்த்துவரோ—வாயுமலப்
பெத்தத்தி லாவிபிர வஞ்சமெல்லாம் போக
நித்தனே யென்ன நிகழ்த்திடுவர்—முத்தியென்ப
தார்க்கோ கருவி யகன்ற வதீதத்தின்
கூர்க்கு மறிவின் குணமுண்டோ—வோர்க்குந்
நிறைந்த பொறியிடத்து நில்லா வதீதஞ்
சிறந்தமுத்தி யெவ்விடமாஞ் செப்பி—லறைந்த
பதிபசு பாசப் பரப்பெல்லாம் பொன்றும்
விதியென்பான் றன்னை விதியென்பார்—பதியா
லுணருமுயிர் கேவலத்தி லோருமுணர் வின்றாய்ப்
புணருமிரு ளீங்காப் புணர்ப்பா—லணையுமான்
றத்துவங்க ளெல்லாந் தருதி யுடலளிக்க
வித்தை யதன்றூடு மேம்பட்டுப்—பெத்தமுடன்
றேயு மிருவினையின் றொக்காய மாதினையாஞ்
சாயும் பிறப்பிறப்பைச் சாருமா—னாயு
மிருவினை யொப்பு மிசைந்தமல பாகந்
தொருவினையாஞ் சத்திபா தத்தை—யருளுயி (சா)
ரீச னருளுருவா யெய்துமுத்தி யாசாய்த்து
பாசமறப் பல்பணிகள் பாரித்து—பாசகுறி
லங்கமோ டெல்லா மகலவக லவதனா
சங்கமே யாகத் தரித்திடுங்—துங்கமாய்த்
தானதனை நோக்கியரு டன்னையுந்தன் றன்னையுமே
லானவன் றன்னையுமே யாய்ந்தமுத்தி—யென்னையினை
யின்னவெனக் காணு விதவாறு பொன்றுகி
யுன்னு முறுபயனு மோருவாய்—மன்னுமு
னிற்கை கதியென்ன நிகழ்த்தினான் சைவனென்பா
னிற்கண் விளக்ககலி லெய்ந்தவிழி—யுற்கண்ணே
யல்லா லழிவதுண்டோ வாவி சகைமுறி
னில்லா வுணர்வுவந் தெய்துமோ—வெல்லா
மிறந்தவிடத் தாவிக் கெழிலறிவு முண்டோ
செறிந்தமுத்தி யெவ்விடமாஞ் செப்பி—லறைந்த

விருவினைக ளொக்கி விசைந்ததுலாக் கோலில்
வருமுடல மெங்ஙன் வருமோ—கருமலத்தாற்
புண்ணியமே ஞேக்குவிக்கும் பாவங்கீழ் நூக்குவதா
நண்ணுநிறை வொப்பாக நண்ணரிதாங்—கண்ணியதோர்
சத்திநி பாதஞ் சதுவிதத்த தானிறையா
யொத்தவென்ப தோரிடத்து மொவ்வாது—சுத்தத் (சகய)
தொருமித்தா லுற்ற வினையிரண்டு மொத்து
வருமத்தாற் றீயமல மாயுங்—கருமத்தா
லுற்ற சரிதை யொருநாள் கினினும்வினை
பெற்றழிவ தல்லாற் பிரிவதுண்டோ—சொற்ற
வருளுருவே தேசிகனென் ருய்ந்ததனை யாயி
னிருளுருவந் தொக்கி யெழுமென்ருய்—மருண்மயலாய்ப்
பூண்பா ருதரம் புகுந்துவளர்ந் தாடுமோ
வீண்பா னடைகற்று மேவுமோ—கோண்பா
லறுக்குமுயிர் தானும்மற் றங்கந் தனதாய்ப்
பொறுக்கு மருண்மேனி பூண்டோன்—செறிக்குஞ்
சரிதாதி சத்திக்குத் தான்கா ரணமா
லொருவா வரனிவையோ வோதிற்—பெருமானுக்
கேற்றபணி தன்னு விசைந்து பணிந்தருளிற்
ரேற்றுதலே யல்லாற் சொலவுண்டோ—வாற்றுந்
தொழிலடியைத் தோயு நிமித்தமதாய்த் தோன்றி
யழிவிலா வாவியுற வாகும்—வழுவிலா
வீசன் பணிகொண் டிருப்பதல்லா லீசனைத்தான்
பேசும் பணியாகப் பேசுவரோ—மாசுற்ற
தத்துவமு முற்ற தகுமலமு மாயவரு
ளொத்திடுவ தென்றுங் குறைக்குமாற்—சித்தமுத
லெல்லா மகன்றவிடத் தேதறிவு கேவலமொன்
றில்லா விடத்தங் கிருங்கருவி—யல்லா
லறியு மறிவுண்டோ வருள்பெறுவ தெங்ஙன்
செறியுமலங் கேவலமோ தேரின்—பிறியு (சஉய)
மிருள்விளக்கா லுற்ற விரவிதனு லொன்று
மொருவுதலு முண்டோ வுலகின்—மருவிமையற்
பெண்டாட்டி பிள்ளை பிதாமாதா மேலன்பு
கொண்டாட்டிக் கேவலமேற் கொண்டதுண்டோ—திண்டாட்டுந்
தத்துவங்க ளெல்லாந் தரிக்குஞ் சகலத்திற்
சித்தத் திருளிற் சிதைவுண்டோ—வொத்தவிருட்
காலமல மாமோ கருவியற ஞானமெனின்
மாலுன் மலமாய வாழ்சகலக்—கோலமலால்

வேறுண்டோ மெய்ஞ்ஞான வெற்றி யுறவரிதே
பேறுபசு ஞானம் பிறங்குசிவங்—கூறிற்
கருமரபு கேவலமாற் காணுமறி வேதா
மொருவுதலு முண்டோ வுணரி—லிருவருமே
யொன்றாய்த்தென் றேதி லுறுசிவமு மோர்மரமோ
வின்றாகும் பெத்தத் தியல்பாகுங்—குன்றா
வுவப்பின் றெனுமா லுறுமுலகம் வேம்பாய்த்
தவப்பயனே யின்பமெனச் சார்ந்து—நவப்பேறு (௪௩வெ)
மீசனே யல்லா மிசைந்ததெல்லாந் துன்பமெனப்
பேசுதலாற் பேரின்பப் பெற்றியன்றோ—மாசின்
வகையறியா ராவி மதியறியார் மக்கட்
டொகைய னுகே னென்னச் சொலுவாள்—வகையாய்ப்
பதியொன் றுலவாப் பசுபலவாம் பாச
விதியைந்த தாக விளம்பு—மதிதங்கு
மீசன் பரமறிவே யெவ்வுயிருந் தானகு
நேச னுயிர்க்குயிராய் நித்தியமாய்ப்—பேசு
மருவுருவு மன்றா யகண்டிதமாய்ப் பொற்பாய்
நிருமலமாய் நிர்க்குணமாய் நேரே—வருமறிவி
லானந்த மாய்ப்பெரிதா யாராயி னுட்பமதாய்த்
தானந்த மானிடத்தே தங்குமவ—னானந்து
மாவியொரு மூவகைத்தா மாணவமே யோர்வகைக்கு
மேவும்வகை யொன்றும் வினையுமுறும்—பூவி
லொருவகைக்கே யைந்து முறுமால்மெய்ஞ் ஞானம்
வரும்வகைக்குப் பேத மறுமேற்—கருவகைக்கு
மாணவமே மூல மறியாமை யாற்பிறவி
காணவைக்கு மொன்றாகக் காட்டுமாற்—றானுவினை
யொன்றா மலமொன் றொழியின்மல மோர்நான்கு
நின்றா மருளோடு நீள்சிவமாங்—குன்றாத
வாவியோ ராவிக் கடிமையல வாவியெலாம்
பாவிக்கு மீசன் பரனென்னத்—தாவிப்
பொருமலத்தை மாய்க்கப் பொருத்தியதோர் நாள்கி
யிருவினைக்கா யெப்பிறப்பு மேய்ந்து—வருமறிவவ்
வீசன்பா லாக விருண்மல மொன்றேகப்
பேசும் வினையொப்புப் பின்பிறக்க—மாசற்ற
சத்திநிபா தத்தாற் றகுமருளோ டொன்றாகு
முத்திநெறி யென்ன மொழியுநூல்—சித்தத்
திருளடைந்த கால மிசைந்தமல நான்கு (௪௪வெ)
மருளடைவ தன்றியுமற் றுண்டோ—தெருளிற்

சரிதாதி நான்குந் தருமெவைக்கு மேலாய்
வராலாற் றவமே வலியா—யராணுகு
மாணவமே யொன்று யளவிறந்த சத்தியதாய்த்
தாணுவினைக் காட்டாத் தகைமையதாய்—பூணு
மனாதியா யாருயிரா யங்கமோ டொற்ற
மனாதியாய் வான்பொருளாய் மற்ற—வினாது
நரகமாய்ச் சொற்க நவில்பிறப்பாய்ப் பொய்யில்
விரகமாய் வீணாய் விமலத்—துரகமாய்ச்
சிற்றுயிரைப் பற்றுஞ் செடமாய்ப்பொய்த் தீவினையை
நற்றுவிக்கும் பொல்லா நலமதா—யுற்றரனை (௪௫௰)
யன்னியமே யாக்கி யடைந்தவுயி ரோடெவையுந்
தன்னியல்பே யாக்குஞ் சதிராகு—மன்னு
மருளடைய வாவியங்க ணுதவனைச் சேர்ந்த
விருளடைந்த தென்ன விலவா—மருளென்னச்
சொல்லுவதிங் கெவ்வாறு தொக்குமுடற் கன்மமல்லா
வில்லையுயிர்ப் பெந்த மெனினன்று—மெல்லவனுந்
தேவன்பொய்த் தீவினையைச் செய்வித் திருநிரயக்
காவ விடுகை கணக்கோதா—னுவி
மொழிந்த வினையதனின் மூழ்கி நரகத்
தழுந்துவதுஞ் செய்யா தறிவா—லெழுந்த
விழியுடையார் வீணே நடந்துவிடப் பாம்பின்
குழியில்விழு வாரோ குறிக்கங்—கழிவிலா
மார்க்க மிருக்க மருவு கருவென்முட்
டாக்க நடக்கத் தருவரோ—நோக்குகின்ற
நாட்டந் தடையதனை நண்ணியந்த நாட்டமறக்
கோட்டமே யுற்ற குணம்போலச்—சேட்டையுறு
மாவி மலத்தடையி லாயந்த வாவியற
மேவிச் சடமாய் விளங்கியே—பூவிதனி
னிச்சை கிரியை யெழின்ஞான மீங்கிவையை
யச்சமற வன்றே யடைந்துபொய்யாங்—கொச்சைநெறிக் (௪௬௰)
காசை மிகுவித் தனனியமா மீசனிச்சை
நேசங் கிரியையெல்லா நீக்கியே—பேசுமல
மோக மனாதி மூன்றத்திலையே லாதியதாந்
தேகத்தோ டொன்றாகச் செல்லுவரோ—வேகு
மலமே வினையின்மா லாக்கத் திரோதஞ்
செலவே தனுவினைச் சேர்த்துப்—புலமே
நடவா வழியை நடத்தித்தன் றனை
கடவா வழிகட்டிக் காத்தும்—விடவான

போகத் தவாவே பொருத்தியரன் சத்தியையு
மேகத் துவமா யிசைத்ததுவே—யாகு
நயனத் தடையார் நடக்கக்கோ லீந்து
பயனைத் தரக்கையாற் பற்றிச்—செயலி
னடத்துவார் போலீச னண்ணிற்றீ தென்னைத்
தொடுத்துவா றெவ்வாறு சொல்லே—லடுத்தமல
மோகங் குருடு மொழியுமுடல் கோலீசன்
போகத் திடைநடத்தப் பூட்டுவா—னாகக்
குருட்டை நடத்துங் கொழுங்கோல ரேனு
மிருட்டுங் குருட்டேவ லேயா—மருட்டுங்
குணவேற் றுமையாற் குருவருட்கு மாறு
ய[illegible] யாளா—யுணர்வா (௪௭௫)
னடப்பார் தமைநடத்தி நன்குதீ தெல்லாங்
கொடுப்பா ரவர்நடத்துங் கோளோ—வெடுப்பாரு
மீசன் றனுவை யிசைத்தாட்டு வானந்த
வாசை யவனளித்த தோகருணைத்—தேசாங்
கடவுள்மல வந்தகர்க்குக் கைகொடுத்தாற் பாவ
நடைபயிற்று வானவனாய் நாட்டுந்—தொடரு
மறியாமை முன்செல்ல வாங்கதற்குப் பின்னை
பிறியாப் பிறப்பிறப்பைப் பெய்து—குறியாகுஞ்
சொற்க நரகமுறத் தோய்வித்துத் தூநெறிக்க
ணற்கண் சிறிதுநடை நண்ணியதேற்—பொற்கை
பிடித்தடியைச் சேரப் பிரியாச் சரிதை
நடத்துங் கருணை நலமாந்—தொடுத்த
குருடுள போதே கொளுங்கோலு முண்டாய்க்
குருடகலக் கோல்வந் ததுபோன்—மருளகல
வந்த மலநான்கு மதிக்கி லனாதிபின்
பொருந்தமுறு மீசன் பொருடர்பினாற்—றந்தவனை
நீக்கிக் கருவி நிரப்ப வினையுமொத்து
நோக்குந் திரோதமலை நோக்குவதா—மூக்கு
மலமே யிருபோது மன்னி யுயிரின்
புலமாய்த் தனுவதனைப் போக்க—நலமாய்க் (௪௮௫)
கருவிமுத னான்குமதன் கைவழித்தாந் தீமை
யொருவின்முதற் றந்தவனே டொன்று—மருவுநெறி
தத்துவமே நீங்கத் தரும்பொருளைக் காணுமற்
றொத்துவதே கேவலத்தின் றொன்மைதாம்—புத்திவினை
நண்ணக் கருவியது நாடி யிடிற்சகல
மெண்ணுமல மெல்லா மிலையாகிக்—கண்ணு

மறிவோ .றிவா யழுந்துவதே சுத்தங்
குறியோடு நிற்குங் குருடர்—செறியுங்
கருவியறி வேதேனுங் காணமற் காண
மருவியது மாங்கே மறைப்பாய்ச்—சருவுங்
குருடோடு நித்திரையைக் கூடுவார் போல
மருளோடு மாவி மருவி—யிருளோடு
மங்கமறப் பூரணமா யாங்கொன்றைக் காணமற்
றங்குவதே கேவலத்தின் றன்மையதாம்—பொங்குங்
கருவியவை கேவலத்தின் கண்ணுறுங்கா லாவி
மருவி யுடலாகி மன்னித்—தெரியும்
விழியிழந்தார் தூங்கி விழித்தவிழி போல
வழிதெரிந்த தின்றும் வழக்காய்ப்—பழிமலத்தின்
மோகத் தடையாய் முழுது மறிவதனை
யாகச் செயலா யழுத்தும்வினை—யூகத்தா (௪௯)
லோர்மூ வகைத்தா யுறுந்தோற்ற நாலதாய்ச்
சார்பிறவி யேழினையுஞ் சார்ந்துபொய்யிற்—சேருஞ்
சுவர்க்க நரகமெனச் சொற்றெவையுந் தோய்ந்து
பவத்தைப் பலகாலும் பற்றிச்—சிவத்திற்
றரியாத வாறே சகலமென்ப தாகுந்
தெரியா மலத்துவமைச் செய்கை—பிரியாச்
செறியுங் களிம்புவமை சேரு மனாதிக்கும்
பிறியிலுற வற்றதையும் பேசு—மறைபடலங்
தூங்கிக் குருடர் துயிலெழுந்துங் கண்ணினுக்கே
யோங்குபொருள் காட்டாத வுண்மைபோ—னீங்குமையற்
கேவலத்தி லன்றிக் கிளர்கருவி யுற்றுமருட்
காவலனைக் காட்டாத காவலன்—மேவு
மிருளுவமை காண்பானு மெய்து மானுந்
தெருளுதலே யில்லாத் திகைப்பு—மருள்பெறுங்கான்
மாறேமுன் னுற்றதனை மன்னுமெல் வீணாய்
வேறே கிடக்கும் வியப்பாலு—மீறு
விடத்துக் குவமையது மீண்டுகுண மற்றுங்
கிடந்துங் கிடவாத கேண்மை—படமகன்ற
நாகமணி காட்டத்தீ நன்குவமை பேதமற
வேகமாய் நிற்கு மியல்பென்ப—தாகுங் (௫௦)
கடலுப் புவமை கலப்பும் வியர்த்தத்
தொடர்பு மனாதியையுஞ் சொல்லுங்—கடனாகு
நெல்லுக் குவமை நிறைந்தமல மைந்தினையுந்
தொல்லையென்ப தாகமறை சொல்லுகையாற்—செல்லு

மறுவைபிணி லாசுவமை யாங்கதனை நீக்கச்
செறியும் வினைமாயைச் சேர்க்கை—குறியாகு
மாசுற்ற வாடி யதுவுவமை யாங்கதனைத்
தேசுற்ற நீறதனாற் றேய்த்ததுபோற்—பேசு
முளக்கண் விளங்க வுறும்புன் முதலாதி
விளக்கு மரனடியை மேவி—யளக்குங்
கலங்கற் குவமை கருதரனா னெஞ்சின்
விலங்கினுறு தென்னை விளம்புந்—துலங்குகின்ற
வாகங்கோ லாக வறைகுவ திங்கீசன்
மோகங்கோ லாய்வினையின் மூளுகையா—லேக
விளங்குவமை கேவலத்தின் விட்டபொரு டன்னை
யளக்குகைக்கு நின்றறிவோ டாமா—வுளக்கண்
மயக்கமுஞ் செய்யுமென மன்னியதஞ் ஞான
மியக்கப் படுமதனா லென்க—வுயக்கொள்ளு
மீச னருளை யியல்பென்ப தாகுமதைப்
பேசியது மச்சொல்லின் பெற்றியதா—நேசக்
கருமமருந் தென்னக் கழுவுவது மீசற்
கொருமைப்பா லாக வுதவி—வருமதற்குத்
தோற்றுந் தனுவே துணையா யறிவுபற்றிப்
போற்றும் பிறவியறப் போக்குகையாற்—றேற்றுகின்ற
செப்புவமை யாவி திகழு மனுதினையு
மொப்புஞ் சிவத்தி லொழிக்கனுமாங்—தப்பாத
கண்ணுக் குவமை கருது மலமறைப்பு
மெண்ணுஞ் சிவத்தி லிசைதனுமாம்—விண்ணிற்
பருதிக் குவமை பகர்மலத்தோ டொத்து
மொருவி யறிவதற்கு பொப்பா—மருவியரு
ளீசற் குவமை யிசைந்த வியாத்தியையுந்
தேசுற் றிடலுமிச்சை சேர்வதுமாம்—பேசும்
பளிங்குவமை பெத்தமுத்திப் பண்புற்றங் காவி
விளங்குதலின் றுகா வியப்பாற்—களங்க
விரும்பா முவமை யிரித்தலையுந் தானாய்
வரும்பா வனையினையு மன்னும்—விரும்புகின்ற
தூசுவமை மாயை தொடர்ந்து மலமென்னு
மாசகற்றச் செய்யும் வகையினா—னாசமிலா
நீருவமை மாசையுற்று நிற்பதற்கு நீங்காம
லீசன்பா லொன்று யிசைவதற்குந்—தேசுற்ற
வாடிக் குவமை யடைந்தமல மெள்ளமெள்ள
நீடு மறிவளித்து நீக்குகையாற்—கூடும்

விளக்குவமை மெய்ஞ்ஞானத் துற்றுமற் றொன்றை
யளக்குதலைச் செய்யா ததனாற்—றளக்காகு
நாக மணியுவமை நண்ணுமலத் தொன்றாயும்
வாகு பிழையாத வண்மையா—லேகமாங்
காட்டத் தெரியுவமை கண்ணுமலத் தொன்றாயும்
வீட்டித் தனுவழித்து மேவுகையாற்—கூட்டு
முடிவுவமை யீசன்பா லொன்றாகி யாவி
கெடுமுறைமை யில்லாத கேண்மை—நடுவா
மாசுவமை யீசனரு ளாய்க்கிளையாற் கன்மந்
தெரிய நடத்தியிடச் சேர்தற்—பிரியா
வுடற்குயிர்போ லென்கை யுறுமுயிரின் செய்தி
நடைநடத்தச் செய்பு நலத்தா—லுடைத்தா
மருக்கர்க் குவமை யடைந்தார் வினையைப்
பெருக்க நுகருமயற் பேறுந்—திருக்கா
மலவிருளைப் போக்கி மதியைத்தன் பாலி
னிலவுதற்கு நிற்கு நெறியு—நலமாங்
குளிகைக் குவமை கொடுமறைப்பை மாற்றித்
தெளிகைக் கிடமாகச் சேர்தல்—விளியா
நெருப்புக் குவமையரு ணீடுயிர்மே னின்றங்
கொருத்தர் மலத்தை யொழித்தல்—பொருத்துகின்ற
காந்தத் துவமை கருதுமுயிர் தன்பாலிற்
சேர்ந்தகலா நீர்க்குந் திறத்தினாற்—போந்த
வுவருக் குவமை யுறுமுயிரை யொன்றாய்க்
கவரப் படுமதனாற் காண்க—தவிராக்
கடலுக் குவமை கருதுமெவைக் கெல்லா
மிடமா யிருக்கையினா லென்கை—யுடனா
மலைகக் குவமை யடைந்தார் தனுவி
னிலவி வினைதனதாய் நிற்கை—நலமாகுந்
தேற்றுக் குவமை திரிமலத்தை நீக்கிநெஞ்சிற்
றேற்றிநிற்கு மின்பச் சுவையாமாற்—சாற்றுகின்ற
கண்டுதேன் பானெய் கரும்பு கனியுவமை
விண்டகலா வன்பை விளக்குகையாற்—கண்டபொரு
ளொப்பைப் பலவா யுரைத்த வொருவகைக்குச்
செப்பியது மற்றொன்றைச் சேராமன்—முப்பொருட்கு
மேற்ற விடத்தி லிசைப்பதற்காய் வெவ்வேறாய்த்
தோற்றுதலை யெல்லாந் தொகுத்துவகை—கூற்றை
வெளிதாய்ப் பிறித்தறிந்தங் கெண்ணிப் பொருளைத்
தெளிய விளக்குதற்காந் தேரின்—விளைவாகுந்

கேவலத்தி ஞேடுங் கிளர்சகலத் துள்ளுமுடன்
காவலாய் நிற்குமலக் கட்டகலத்—தேவன்
சரிதாதி நான்குந் தருஞ்சுத்த மூன்றே
யொருவாப் பதமுத்தி யொன்றே—யருளோடு
பத்தவத்தை யாகப் பகருவதா நான்கினுக்கு
முத்தியெனும் பேரே முடிவாகுஞ்—சத்திநி
பாதஞ் சதுவிதமாம் பற்றுமல பாகமந்த
வீதமா மற்ற வினையுமந்தப்—பேதமதா
யொக்கக் கிரியை யுயர்ஞான மிச்சையுறத்
தக்கதே யாகத் தகுமரன்பாற்—றொக்கி
யெழுந்து மலமனைத்து மில்லாமை நோக்கி
யழுந்துவதைச் செய்யு மரனு—மொழிந்த
மலமொன் றுளதாக மாயைமுத லொன்கு
நலமொன் றிலதாக நண்ணிப்—பலமொன் றுங்
காட்டாத காலத்துக் கண்ணடி மாசதறத்
தீட்டாப் பொடியிலொளி சேர்ந்ததென—வீட்டா
விருஞ்செல்வம் வேண்டி யிருப்பாரு மீசன்
றருஞ்செல்வ மென்னத் தழுவப்—பெருஞ்செல்வ
மோகத்தா லூட்ட முனியின்மல சத்தியற்றுப்
போகத்தான் மெல்லவன்பு பூண்பதனாற்—றாகத்தாற் (௫௫௰)
சாலோகத் திச்சை தருமாற் சரிதைபற்றிப்
பூலோகத் திச்சை புறம்பாக்கி—மேலோகச்
சாமீபத் திச்சை தருமாற் றகும்பூசை
பூமேற் பொருத்திப் பொருளனைத்துந்—தேமீதி
லேற்றச் செயுமா விசைந்தவரன் சாரூபந்
தோற்றவதன் மேலன்பு தோன்றுவதா—லாற்றுகின்ற
நெஞ்சி லரனை நிறுத்திமல சத்தியெல்லா
மஞ்சியதன் பாலி லடங்கமுன்னாள்—வஞ்சமெனு
மன்னியத்தி லிச்சை யடையவறி யாமையறத்
துன்னியது மாங்கே துடர்ந்துடனாந்—தன்னியல்பாஞ்
சன்மார்க்கத் திச்சை தருமாற் றகுமுடலின்
முன்மார்க்கத் திச்சை முறையகலத்—துன்மார்க்கத்
துற்ற பகலி லுறும்படல நீங்கத்தா
னற்றும் பொருள்காணு நண்ணரிதான்—மற்றவராற்
செப்பி யிடத்தெளிந்த சீரென்னத் தேசிகரான்
முப்பொருளை நோக்கு முறைமையதா—லெப்பொழுதுந்
தொந்தித்த காயந் தொகுந்தா னெனத்திரிவாய்ப்
பெந்தித்த தாகமெனப் பேசியிடச்—சிந்தித்துக்

காய மிரட்டுறவே கண்டவையி லையமுற்றங்
காயக் குணமென்னு மைந்தோடும்—போயகலத் (௫௬
தக்கதே யென்னத் தரும்விகற்பக் காட்சியறத்
தொக்கதனை மாயத் துடைத்தங்ங—னிற்குமது
காயசுத்தி யாகும்வன்னங் கான்ற பளிங்கொளியைத்
தோயுங் கதிரொளித்த தோற்றம்போ—லேயுநெறி
யாவி யகத்துணையை யாதரிப்ப தாகமறை
கூறு மறிவின் குறியன்ன—மேவியதோ
ரங்கத் துயிர்பிரம மாகு மெனத்திரிவாய்ச்
சங்கமுறு மைய மெனத்தரித்துப்—பொங்குமரு
ளாசற்ற காட்சி யதனாலவ் வாறடங்கத்
தேசுற்ற வாவித் திகழுருவா—மாசற்ற
வாவிதனக் கின்ப மரனல்லா லங்கமறின்
மேவும்வினை யுண்டோ விளம்பென்னக்—கூவுந்
திரிவோ டறுமையஞ் சேராம லாவி
வருமேற்றன் னின்ப மருவி—யொருவா
வருளேயாற் கின்ப மல்லாதார் சேரி
னிருள்சே ரநரகத் தைசவர்—தெருள்சேர்ந்த
சித்தத்தார் பேதமெனச் செப்புவா ரொன்றென்னப்
பித்தத்தார் சொல்லும் பிழையென்னி—லொத்தந்த
கார முறுங்கண் கதிரொளி யுற்றல்லாற்
சேருமொளி யில்லாத செய்கையும்போற்—சாரு (௫௰௮)
முவல முறுங்கதிரை யொன்றினல்லால் வன்னந்
தவிர்தலிலாத் தன்மையும்போற் றங்கு—மவலத்
தடையகலு மெய்ஞ்ஞானச் சம்புவுறின் காயத்
தொடையகலு மாவியதைத் தோய்ந்து—புடையகல
நின்றாற் கடிமையென நிற்பதுவே நீர்மையெனக்
குன்றா வருணூலுங் கூறியது—பொன்றாத
பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறென்றும்—வைப்பாஞ்
சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதமுறி னென்று—நிலையாந்
தெரிசனமா மீதுயிர்க்குச் சேட்டை யிலதேற்
பரிசனக்கா லீசன் பகுதி—வருமதனு

எல்லாந் தொழிலு மிரும்பே யறிவுறச்
செல்லா வுயிர்செலவே சேருவதா—மில்லா
வொருவர்க்கே யீபு முறுவார்கட் கெல்லாந்
தருமத்தை யீசர் தரத்தா—முரமற்றோர் (ருஅ)
தீயி லுறுமிரும்பு தீயலான் மற்றொன்றை
யையமறத் தீயாக்க லாகுமோ—வைய
வலகைகொண் டார்ந்த வலகையலான் மற்றோ
ருலகிற் புதுமை யுறுமோ—நலமா
மறிவருளிற் சேர்ந்தங் கடங்குவதே சுத்தி
செறியுமுயிர் நேயத்திற் சேர்ந்து—பிறிவின்றி
நிற்பதுவே முத்தி நெறியென்ன நீள்சிவமாங்
கற்பனையிற் கேடே தருமுத்தி—யற்புதனை
யொட்டுதற்கொன் றின்றென்னி லுற்றசிவ முத்தியினைத்
தொட்டவரு மின்றாய்ச் சொலவேண்டு—நட்டமற
நித்தியமே யென்ன நிகழ்த்தியதும் பொய்யாகுஞ்
சத்தியா னற்றுந் தருஞ்செயல்க—ளித்தனையும்
மாய வறிவளித்து மன்னியது நாமாகு
நேயமே யல்லா னினைவுண்டோ—வேயுநெறி
யொன்று மிரண்டு மிலதா யொருங்கொத்துத்
துன்றி யனனியமாய்த் தோன்றியே—நின்றிடுத
லாவிக்கி லாப மதுவன்றி யொன்றதனைப்
பாவிப்ப தெல்லாம் பழுதென்ன—வோவியம்போற்
காய மொருபொருளுங் காணுமற் கண்ணடைக்க
நேய மமுதா நிறையுமெனி—லாயக்
கருவித் துயர்மரங்கள் கண்ணிலா ரெல்லாம்
விரவிச் சிவமாக வேண்டு—மருவி (ருகூ)
யொடுக்கி லிவனு முயர்சிவமே வந்தங்
கடக்கிலொரு சற்று மகலா—முடக்குடலின்
வந்துபோ மாகில் வருமாற்கோர் மேனியொன்று
சிந்தையுறக் கண்டு தெளிவாகும்—பந்தமறச்
சேதித்துத் தம்பாலிற் சேர்த்தவடி நம்மைவிட்டுப்
பேதித்த தெவ்வாறு பேசுங்கால்— வாதித்த
வாகத் தயலா யறிவுவெளிப் பட்டருளோ
டேகத் துவமா யிசையினல்லான்—மாகத்தாய்
பாதத் தடையுமருட் பண்புண்டோ பல்லுயிர்க
ளோதத் துறின்மாயை யெவ்வினையும்—போதத்
தடங்குவது போல வரன்பாலி லாவி
யொடுங்கத் தனுவினையு மொன்றாய்த்—தொடங்கிப்

பெறுவதெல்லா மப்பொருளின் பேறெமற் றொன்றை
யுறுவதுவு மூலமென்றோ வுரைக்கிற் — றறுகுடலந்
தோயு முயிர்கதிர்முன் றோற்றும் விளக்கென்ன
மாய வரினருளை மன்னுவதா — மேயுநெறி
கேட்டலுடன் சிந்தித்தல் கேள்வி யதைத்தெளிந்து
வாட்டமற நிட்டையென மன்னுவதா — நாட்டுகின்ற (௬௰)
பாசவறி வாலும் பசுவறிவு தன்னாலு
மீச னடியை யிமையுறாத் — தேசுற்ற
பேரறிவைச் சிற்றறிவு பெற்றதனா லச்சிவத்தோ
டோரறிவே நிட்டை யொழுங்காகுஞ் — சேரிட்டை
தோற்றித் திலையெற் சொலுமரபை மற்றொருகா
லேற்றி யிடவகையை யெய்துவதாம் — போற்றுமிதைப்
பாவகமேற் றொனசத்தாம் பாவனா தீதெனிற்
பாவகமா மன்றென்னிற் பாழதுவாம் — பாவகத்தைப்
பாவித்த றானென்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழென்னத் — தேவகத்தாய்ச்
சித்தந் தெளியச் சிவஞான போதத்தின்
முத்தி யளிக்கு முறையறியத் — தொத்துமல
நட்டமெனி னித்தியமோ நண்ணாது நட்டமற
வொட்டிமெனின் மெய்ஞ்ஞானத் தொன்றுவாங் — கெட்டதுகேள்
ஞானமல நித்தியமே நள்ளிருடா னாதவன்மு
னூனமற நின்றுங் கொளிக்கென்ன — வீனமுறச்
செய்யா திருக்குமதன் செய்கையதாந் தீவினைவந்
தெய்தா திருக்கை யியம்பென்னின் — மெய்யனைத்துந்
தொந்தித்த சஞ்சிதமே தொக்குமரு ளைக்காற்றீச்
சந்தித்த வித்துத் தகைமையென — வந்தமுற (௬௰௧)
வத்துவா வாறு மகல வகையறிவாய்
நித்தன்பா லொன்றாகி நிற்குமாற் — றத்துவங்க
ளீசன்பா லாக விசையு மிருவினையு
மாசற் றருள்வினையாய் மன்னுவதாந் — தேசற்ற
வாகா மியமே யடையுமறி யாமையுற்ற
தேகா மியத்தி லிசையாவா — மோகாந்த
காரமே யில்லைக் கதிர்முனிருள் போன்மலத்தின்
பாரமே தீர்க்குமருட் பண்பாகும் — போராக்
கருணையிடங் கொண்ட கருணை கருவா
மரண மறுக்கு மருந்தங் — கரணைகுந்
தன்னையே நோக்குவிக்குஞ் சம்பு தனிமலத்தை
யன்னியமே யாக்கு மரமாகுந் — துன்னுகின்ற

வாணவத்தோ டுற்றநெஞ்ச மாணவமாய்த் தீவினையைப்
பூணுதற்கே யிச்சை புகுமென்னத்—தாணுவினைத்
தொந்தித்த வாவி தொகுமதுவாய் லிங்கத்தை
வந்திக்கு ஞான வரனேயாங்—நந்துமுட
னின்று றுயிரை நிறுத்திப் பிறித்தறியக்
குன்றுப் பருதிக் குலவிளக்காம்—பொன்றுத
செம்பிற் களிம்பென்னச் சேர்ந்தமல மாற்றுமரு
ணம்புங் குளிகையென நண்ணுவதாஞ்—சம்புவெனத் (௯௨௰)
தோன்று முயிரருளாய்த் தோயு முடல்வினையு
மேன்றசிவ போகமென வெண்ணுவதா—மான்றவருட்
சீவன்முத்தி யீதிந்தத் தேகமறும் போதுற்ற
வாவிபர முத்தி யடையுமெனிற்—றேவன்
சரிதாதி மூன்றினுக்குந் தக்கபத மிங்கே
மருவாதே மேலுலக மன்னி—லொருவா
மறுமையவைக் குண்டாம் வருஞான பாதத்
துறுமறிவு மிங்கே யுறலாற்—பெறுமுத்தி
யீசனே யாகு மிவ்வையல்லா தில்லையருட்
டேசனே யெங்குஞ் செறிவாகு—மாசிலா
வங்க மறும்போ தடையு மறுமையென்கை
பங்கமென மெய்ந்நூல் பகருவதாஞ்—சங்கரன்பாற்
றோற்றுதற்கி ரைந்தவத்தை சொல்லி யுளமதனை
மாற்றிச் சிவமாக மன்னியிடச்—சாற்றியநூல்
வந்தித் தறியாத மக்கட் குபதேசஞ்
சந்தித் திடுவதில்லைச் சாற்றுங்காற்—பெந்திக்கப்
பட்டமல மாயை பகருமிருங் கன்மமொன்றாய்த்
தொட்ட விடம்பொதுவாய்ச் சொல்லுவதாம்—விட்டிவைவை
யன்னியமே யாக வகன்ற நெறியதனைத்
தன்னியல்பே யாகத் தருமன்றோ—துன்னுமருட் (௯௩௰)
சீவிக்குங் காயஞ் சிவனலவே லிங்கத்தைப்
பாவிப்ப தேதாம் பரனென்னத்—தாவிப்பி
லீசனே யென்ன வியம்புவார் முன்போலப்
பேசுமுறை யில்லாத பெற்றியன்றோ—வாசற்ற
வுள்ளமோ டங்க முறும்பொருளு மீசன்பாற்
றள்ளிச் சிவமாக்குந் தன்மையன்றோ—வெள்ளுமலம்
விண்டகலா தார்க்கே விளங்கு முருவருளைக்
கண்டகலா தார்க்கரனே காண்பதுவாம்—பண்டே
யிருகண் குருட ரிசைந்த பொருளை
மருவி யறிய வசமோ—வுருவிற்

றியார்க்குக் காமச் சிறப்புரைத்தா லந்த
நெறியாகு வாரோ நினைந்து—பொறியார்ந்
தொளியிருளாய் நிற்கு முறுமேமன் கட்கே
தெளிய மருந்திடினுந் தீரா—வெளியமலம்
பாகப்பட் டாற்குண்மை பன்னில் விபரீத
மாகப் படுவதலா லாவதுண்டோ—போகப்
படுமலமொன் றேகப் பகருயிரோ டெல்லாந்
தொடுமமலன் றனைத் தொடுமால்—விடுமமல
வாவிக்குக் காய மிலையிங்க ணவியுற்று
மேவிய காயம் விடுமென்னக்—கூவியதும் (௯௮)
பொய்யாகுஞ் சித்தாந்தம் பூண்ட தவருரைக்கச்
செய்யா தறிவிலார் செப்பியதா—மையா
தவஞான நெஞ்சத் தகற்றிப்போய் யங்கப்
பவஞான மெல்லாம் பறித்துத்—தவஞான
நந          ான போதத்தி னல்வழியே
யெந்தை மரபி லெழுந்தருளி—வந்தெனக்குச்
சித்தாந்த நெஞ்சிற் றெளிவித்த தேசிகன்றாள்
முத்தாந்த மென்ன மொழிந்துடனுங்—கத்தா
வுளக்கணிறைந் தெற்கா யுறுபொறியுந் தற்கே
விளக்கும் பொருளினையும் வேண்டி—யளக்குந்
தனையா னுறுவதற்குத் தந்தென்னை யானே
நினையாத வாறு நிறுத்தித்—தினையளவு
நீங்காத காத லிரப்பி மறந்தொருகால்
வாங்கா வறிவினையும் வைத்துண்மை—பாங்காகு
மாவிக் கமுதா யருங்கருணைத் தேனாகித்
தாவிக்குஞ் சர்க்கரையாய்த் தண்டபிராய்ப்—பூவிற்
குயர்ந்தமணம் போல வொழியாம னின்ற
நயந்த கருணை நலம்போற்றி—பியைந்த
குருவடிவைப் போற்றிக் குலாவியமற் றொன்று
மருவறியே னென்னமதித் தாள். (௯௯)

## தனிச்செய்யுள்கள்.

ஆகத் தறிவை யகற்றியவ் வாவியினு
ளேகத் தனுவை யுறவைத்துத்—
தறிவாக்கி மங்கையரு ளாளுண்மற் றொன்றைப்
பிறிவார்க்குந் தேசிகனைப் பெற்று. (௧)

காயத் தூறுதவருட் கண்ணி யடிபிணையைத்
தோயத் தொடர்ந்தாண்ட தூதெவரு—மாயத்தான்
றய்யாப்புன் சொல்லாற் றெடுத்தே புனைந்தானென்
னையா நமச்சிவா யா. (௨)

சித்தாந்த மென்னத் தெரித்த பஃறொடையிற்
சித்தாந்த முன்னூற்றெண் பத்தஞ்சாய்—முத்தாந்தஞ்
சொன்னான் றிருவா வடுதுறையைச் சூழ்ந்தோர்க்கு
மன்னாகு மம்பலவா ணன். (௩)

சித்தாந்தப்பஃறொடை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## தக்ஷிணாமூர்த்திதேசிகர் அருளிச்செய்த

# உபதேசப்பஃறொடை.

---

தேனார் கமலந் திருந்தியபூ வாயிரங்கொண்
டானாத வன்பா லருச்சிக்கு—மோனனி
லாங்கதனிற் றெய்வீக மாமெயான் றகன்றிடவே
யேங்கி யுயிர்த்தங் கிரங்கியே—யோங்கியதோர்
பத்தி விசேடப் பரிவாற் பயமீதிற்
சித்ர கமலவிழிச் சிருவமை—யொத்துணர்ந்
தற்சனைக்குத் தாழ்வுபெறு தம்மா விசைந்தகனை
நச்சு விழியை நயந்திட்டு—மெச்சுவித்தன்
றழியது பெற்றேறு மாமுலைக மத்தனையுந்
தாழ்வறவே செய்யுந் தலைமையது—தாழ்வுவரக்
கண்டு கலங்கிக் கருணைபெறத் தன்னுதலிற்
பண்டுதியா னித்துப் படைப்பதனை—பண்டார்தொழுப்
பெற்றேனுங் கீழ்மேற் பெரும்பன்றி யன்னமெனு
மற்றோ ருருவ மருவியே—யிற்றைவரை
காணா துழலவவர் கண்ணாகலா துண்ணின்றோன்
றோணா துலகோ டிபிரணத்தும்—வீணாகா
தெள்ளுக்கு வெண்ணெயென வெங்கு நிறைந்தகலா
தெள்ளப் படாவியல்பா மின்பநிலைக்—கொள்கைதரக்
கள்ளமலக் கட்டகலக் காதலுடன் வல்வினைக
ளுள்ளி யருந்தி யுவர்ப்புறவே—கொள்ளுந்
தனுவாதி நான்குந் தருவதிலை யாகி
யனுமா ருயிர்க ளொருகாற்—றனுமருடான்
றீரா தெனவே திருவுளங்கொண் டங்கிறைவு
போரம னின்று பிரியாத—வாருயிர்க்கா
யைந்தொழில்யாஞ் செய்துமென வன்றே நியமித்துத்
தந்தனு லைந்தொழிலுந் தானகலா—வெந்தையென
நின்றோ றெடுக்க நிகழ்த்திபிடுங் கேவலத்தி
னின்று மனுபவத்தீர் வுன்னவே—குன்றுத

தன்னருளோ ரைந்தாய்த் தயங்குதல்கண் டாங்கதனை
மன்னுருவ மாக மருவியே—பின்னுமுறாங்
காரணங்கண் மேவிக் கருதரிய வெவ்வுயிரு
மோரகலா தெய்தத் தனுவாதி—சீருடனே
தோற்றுவித்துத் துய்ப்பித் தொடுக்கியிக ழாதுமறைத்
தேற்றவினை யொப்பு மிருண்மலத்தின்—மேற்றிகழும்
பாகமுஞ் சத்திநி பாதமும்பார்த் தற்றளவின்
மோக முடனே யனுக்ரகித்துச்—சோகமுறுந்
துன்பப் பிறவி துடைத்துத் தொலையாப்பே
ரின்பத் திருத்தியிடு மெங்கோமா—னின்பமெனுந்
தன்னை யொருக்காற் றடுமா றியுநினையா
வென்னைப் பிறப்பறுக்க வெண்ணியே—துன்பவினை
யேனும சாதிக் குணக்கிரியை தானகலத்
தானும சாதிக் குணக்கிரியை—யூனமறக்
கொள்ள நினைந்து குலவுதமிழ்ச் சம்பந்த
ருள்ள மகிழ வுகந்துமுனங்—கொள்ளென்
றுலவாக் கிழியருள வோங்குந் தனது
தலமா யிலகுபுகழ் தாங்கு—நலமிகவு
மீட்டுந் திருவா வடுதுறையி லெவ்வுலகு
நாட்டம் பெறவருளா னல்லுருவங்—காட்டியே
சொல்லு மளவிற் சுகப்பே றுதவவருட்
புல்லுந் திருவெழுத்துப் பொற்புடனே—பல்லோரு
நண்போ டுரைத்திடவே நன்னமச்சி வாயனெனப்
பண்போ டுயர்நாமம் பற்றியே—புண்பதனோ
டானகுண நான்கு மடைந்தகலா வாருயிர்போற்
றானுமொன்று போனடிக்கத் தாங்கியே—ஞானகுரு
தேசிகனு மென்று தெளிய வியற்றியிருட்
பாச மறுக்கும் பரஞ்சோதி—நேசமுட
னீன்றமுட்டைக் கெய்து மிரும்பருவங் கண்டுகடற்
றோன்றிக் கமடங் குடக்குரம்பை—யின்றுருவாய்த்
தன்னை யடையத் தழைத்தருளாற் கூவுதல்போ
லென்னைப் பருவ மிசைவதுபார்த்—தெந்நலமு
மோங்கும் பதியி னுயர்ந்ததவத் தோர்பணிய
வீங்குகிரு பைமேரு வீற்றிருந்து—பாங்கறியா
நீசனெனப் பாச நிகள்மறத் தன்னுமம்
பேசவருட் டேுட் பெருக்கியே—யோசைபெறுங்
காந்தச் செயலாய்க் கடுகும் பசாசமது
சேர்ந்ததுபோ லென்றன் செயலனைத்து—மோய்ந்துமிகுந்

தன்றன் பதமே சரணமென நாயேனு
மொன்றும் படிகண் டுளமகிழ்ந்தே—யொன்றாகா
தெஞ்சும் பிறப்பு மிருண்மலமு மெண்ணரிய
சஞ்சிதமு நாட்டமெழத் தான்விழித்து—வஞ்சவினைக்
கீடான மாயை யெழிலான நால்வகையுங்
கோடா மயக்குங் குடிலமது—பாடாகத்
தன்னொளியை யோங்கத் தனதுதிருக் கைத்தலத்தைத்
தன்னைநினை யென்சிரத்திற் றானமைத்துப்—பன்னரிய
மிக்க வுயிர்த்தொகையு மேம்பட்ட வெப்பொருளு
மொக்கவுட னாயுமல்லா தோங்குநிலை—யெக்கணனு
நீங்காத தன்னை நிகழ்த்திபிட வேகிர்பைபின்
றாங்காது தள்ளத் தலைப்பட்டுத்—தீங்ககலாப்
பாவி செவிவழியாய்ப் பாதகனென் னுட்புகுத
மேவியுப தேசம் விளம்பியே—தேவான (௪௬)
தன்னையா னென்று தருக்கினல்லாற் றீயவிரு
ளென்னை யணுகா திராதென்று—முன்னியெனைத்
தானாகப் பாவித்துத் தானின்ற யானெனவே
மானமுறக் கண்டருளான் மன்னியிட—ஞானமுதற்
றீரவருள் யோகந் திண்ண முறவியற்றிப்
பார மதுவாய்ப் பரந்துவருஞ்—சீரான
வாறத்து வாவகல வான தொழிலருளான்
மாறற் றிடவே மதித்தியற்றி—வேறற்ற
தானேயா னாகித் தழைக்கதென் னதுந்தானாய்த்
தானே தலைநின்ற தம்பிரா—னீனமறப்
பெத்தத்து முத்தியினும் பேரா திலக்கணங்க
ணித்தத் துவமாய் நிகழ்த்தாமிரு—முத்தமமாய்
நாட்டுகின்ற முப்பொருட்கு நாசமுறா தேயுணர்த்த
வீட்டுகின்ற சற்கா ரியமென்று—நீட்டுமதால்
ஞான கமநூா னயந்துனக்கு நாமனைத்து
மீனைய மில்லா தெடுத்துரைத்து—மானதனி
லையமுற்ற தெல்லா மகலவினை வென்றருளி
மெய்யனரு ளாலுருவை மேவியே—செய்யவுலை
குண்டாக்கி யாக்கி யுடைத்திருளோ டேயடங்கக்
கண்டிடுவ தென்றுபதி காணுங்கால்—கண்ட (௫௰)
வருவ முருவ மருவுருவ மற்றும்
மருவுங் குணங்குறியா மற்ற—தொருவியே
நிற்பதுவா யெவ்வுயிர்க்கு நீங்கா வறிவாகிச்
சொற்பொருளா லுன்னரிய சோதியா—யற்பகலு

மில்லா வெளியா யிருட்பகையா யின்பமதாய்ப்
புல்லறிவாற் சுட்டாப் புனிதமதாய்—வல்லதொரு
தானே யெவர்க்குந் தனையுணர்த்துந் தத்துவமாய்
ஞான முதல்சிவமாய் நாட்டுமென—யானென
வின்பனே முன்புருவா யாக்கி யழிப்பனென்றாய்
பின்புருவ மில்லையெனப் பேசினு—யென்பதனு
லெய்துந் துடக்கோ டியலா விகாரமது
வெய்துமென நன்று வினுவென்று—பைதலே
காலமது வொன்றாகிக் காரியமூன் றாயுமதற்
கேலும் விகார மிலாததுபோற்—சீலஞ்
சிதையான் கனவுகண்டோன் செய்யநன வாக
நினையான் கனவுதனை நீங்க—கனவதுவுந்
தான்றுடக்கங் காகாத் தகுதியது போவினியக்
கோன்றுடக்கத் தேயிருக்குங் கொள்கையென—வூன்றிநின்ற
வைய மொழிகென் றகற்றியபின் னையனே
செய்ய வுயிர்த்தொகையா யல்லவாய்—மையுயிர்கட்		(கூ0)
கேற்ற தனுவி லிசைவித் திருங்கன்மந்
தீற்றிப் பிறந்து மிறந்துமவா—வூற்றமுறு
மாணையது காட்டி யகலா னவையென்ன
வீனகற்று ஞான விமலனே—வீணென
வற்பவத்தி னீங்கா துறிலுனக்கு முண்டெனுந்திச்
சொற்பெறுமென் றேதநன்றே சொற்றவினு—விற்பனனே
நிற்கின்ற வானகத்தி னிற்குஞ் சராசரங்க
ணிற்பழிந்து பின்னுமுண்டாய் நீங்குகின்ற—கற்பனையிற்
றோயாத வான்போற் றுணையான நல்லுணர்வுந்
தோயாத வுண்மை துணிகென்று—மாயமறக்
காட்டியபின் னன்றே கருது முயிரறிவு
நாட்டும் பிறவி நவையென்றுந்—தீட்டுகின்ற
வீடின்ப மென்றும் வினைப்பயத்தாற் றீநிரயங்
கூடுங்கொ லென்றுங் குலவுமுயிர்—வீடடைய
வுண்டென்றும் பேரா துயிர்க்குயிராய் நிற்குமிறை
யுண்டென்றுந் தோற்ற துறப்பிணித்துக்—கொண்டுநிற்குந்
தன்னையுங் காட்டாத் தலைமைபெற நின்றனந்தந்
தன்னுடைய சத்தியதாய்த் தானென்றாய்—மன்னுகின்ற
தாணவமா மாங்கதனை யாருயிர்க்கா யேயிரங்கிப்
பேணி நடத்த திரோதமாங்—காணியா		(எ0)
யாணிகொண்டு நிற்குமல மற்பமகற் றதுதொழிற்
பூணவுறன் மாயை பொசிப்பதற்குக்—காணலுற

நன்றுநீ தென்றவினை காட்டுகின்ற நான்கானு
மொன்றி வருமவத்தை யோர்மூன்று—மின்றதனை
யோதியிடிற் கேவலமொன் றுற்ற சகலமொன்று
சோதிவிடு கின்றசுத்த மொன்றென்ன—நாதனே
யென்னைப் பிறியா திருளிருக்க வென்னறிவா
யுன்னைப் பிறிவறநீ யோதுதலா—லன்னதுனக்
குண்டா மெனநன் றுயர்ந்த விஞாநீயுங்
கண்டோ தினையென்று கண்ணருளாற்—கண்டறியுங்
காட்சியற்ற நாட்டங் கதிரோ னகத்துழலக்
காட்சி யொழித்த கரும்படலக்—கோட்பாடு
செங்கதிரோற் கில்லா திருள்விழியிற் சென்றதுபோ
லங்கரனுக் கின்றி யுயிர்க்காகு—மிங்கறியென்
றோதிய பின்ன ருடலிந் தியங்கரண
மேதக் கலாதியுயி ரென்பதனிற்—றீதறவே
பேதமற நின்றுகண்டு பற்றி யறிந்துழன்றிங்
கேதமுற வெல்லா மியற்றியே—போதவருங்
காணாது காண்கின்ற காட்சிவிட வைந்தவத்தை
நாணுமலெய்து முயிரெனக்கண்—காணியே (௮௰)
திற்கு மிவையறிவன் றென்பதெவ னின்றன்ன
நிற்குந் துயிலிற் றுரிசினிமை—வற்கமுறி
லைஞ்சி விரும்பாத லானுமைந்தும் வேறறியப்
பொஞ்சுதலி ஞானும் புகும்விடய—மெஞ்சா
தெழுந்துபற்றிச் சிந்தித்து நிச்சயித்துட் கொள்ள
வழங்குமத ஞானுமவை மன்னி—விளங்கவே
யுச்சாயத் தோடறிந்தங் கிச்சித் திதாகிதத்திற்
பட்ச முடனுவர்ப்புப் பற்றியே—பிச்சதாய்த்
தானமுந்த லானுந் தயங்கு முயிரியங்க
லான துயிலி னறிவற்று—வினத்தி
ஞானுஞ் சடமனைத்துந் தன்னறிவா லான்மாவே
யூனமென நீங்கு முணர்வென்னக்—கோனை
யறிவொன் றறிவா லறிவிக்கொன்ற தென்னுங்
குறியென்னை யென்னவிறைக் கொண்ட—நெறிநன்று
பானு மதிவிளக்குப் பண்புடைய கண்படிக
மானவதன் சோதி யதுவன்றி—யானதுபோ
னின்றவுயிர்க் கன்றி திகழ்ந்து மிருபொருட்குங்
குன்றுத ஞானமதற் குள்ளதென—நன்றோதி
யென்னைத் தெருட்டியபின் னின்னருளாற் கீழ்மேலர்
யுன்னுஞ்சாக் ராதி யுடற்கனுறு—மன்னதனை (௯௰)

யாக்கும் பொருள்கள் சடமென் றறிந்தருளா
னீக்கம் பெறவந்து நீங்குமென—வாட்கொண்ட
வையா விரண்டவத்தை யீங்ககன்ற தாங்கொன்று
பொய்யோ வெனவிளங்க வுன்றன்னைச்—செய்வதுதான்
றந்தருளு மென்னத் தலைவனே யோதுமருள்
வந்த திலதின் றிருளற்றும்—நந்தாது
நிற்கின்ற யானே நிறைந்த பிரமமெனக்
கற்கொண்ட நெஞ்சர் கரையவே—சொற்க
ணமையா விருள்கொண் டகன்றிடுநீ யெங்ங
னமையாளு மப்பொருளோ தென்ன—விமையாதோர்
கண்டறியாக் கண்ணே கருதரிய பொய்யனைத்துங்
கண்டறிந்தே னென்னறிவால் யானதனாற்—பண்டைப்
பொருளென்ன வுன்னறிவு பொய்யொன்றென் றாக
மருளென்றி யாமுணர்த்த வந்தின்—றிருளற்ற
வேதுவத னாலு மிறைவ ரறிவனைப்போ
லோதி யுணரா வதனாலும்—பேதித்த
தீப்பிணிக்கின் றஞ்சுந் திறத்தாலுந் தீவினைமுன்
வாய்ப்ப தறியா வழக்காலுங்—கோப்புடைய
வப்பொருணீ யன்றிங் கருளா லுனக்குளதா
மெப்பொருளுந் தானே யறிந்தியற்று—மெய்ப்பொருளைத் (ரா)
தேறென் றுறுத்தித் திருந்த வுணக்கண்ட
வாறெங்ங னேதெனவே வாய்மலரக்—கூறரிய
வுன்னருளைக் கொண்டே யுணர்ந்தே னெனதறிவா
லென்னை யெனவென் றியம்புதலு—மன்னவனீ
காணு வருளதனாற் கண்டதெங்ஙன் கண்டிடினும்
வீணுங் கருவிகள்போன் மேவிடா—நாலுகின்ற
பொய்யறிவுஞ் சுட்டறிவாற் பொய்யகன்ற போதனுனைச்
செய்யவரி தென்னவையா செப்புகென—வுய்யுந்
தவத்தா யுனதறிவைத் தானறிந்த தென்றிங்
கெவற்றாலு மின்றி யியல்பா—யுவப்புடனே
கண்டது போலுமின்னுங் கட்டுரைப்ப தொன்றுனக்கிங்
குண்டதுகே ணன்றிங் குகந்திருவர்—மண்டுபெருங்
காதலினாற் கூடிக் கலந்தழிவ வானவின்பம்
போதமதாற் சுட்டிப்பொருளாக—வோத
வரியதாய்த் தாமுணர்தற் போலுமுனைச் சுட்டா
துரிமை யுடனே யுகந்து—பரிவுடனே
தானறிந்து கொண்டனைநீ தானருளாய் நின்றென்று
ஞான முதலாய் நடிக்கின்ற—கோனருளிச்

செய்துபின்னு முன்றன் செயலறநீ தானுனையே
யையமறக் காணு முணர்வதனைச்—செய்தல்சிவ (௱௧௰)
ஞானமென நன்னு நவைகண் டறியாத
ஆனமுடை யேனை யுகந்துருவந் — தானுன
வென்னரசே யென்னை யெனதறிவாற் சுட்டாமன்
மன்னருளா லியானும் மதியாம—னன்னிலைநீ
தந்ததுவு மற்புதமே தானெனக்கு மெய்ஞ்ஞானந்
தந்ததுணர் விங்ஙனெனச் சாற்றிய திற—சிந்தைமிக
வையுற்ற தென்று மறிவுக் கறிவென்ற
மெய்யற்ற தென்னவினு மிக்கதே—பொய்யா
முலகு முயிர்ப்பொருளு முற்றகலா தொன்று
யிலகு பதியுமிக லாம—லலகில்
பிறப்பிறப்பும் போரா நிரயப் பிணியு
மறப்பு நினைப்புமென மன்னுந்—திறத்தனவா
மித்தனையுங் காட்டா விருளு முனக்குணர்த்த
மெய்த்து வினையொப்பு மேவவே—துய்ப்பதனுக்
கான வறிவருள வன்று திரோதமதாய்த்
தானின்று நன்றுந் தனிச்சரிதை— யூனமற
வோங்குகிரி யாயோக முற்றியற்றி முற்றியபின்
ஆங்கு மவர்விழித்த தோற்றம்போ—னீங்காத
தீய விருளுந் திரண்டகரு வித்தொகையா
மாயையொடு கன்மமின்று மாளவே—தூயகதிர்த் (௱௨௰)
தோற்றம்போன் ஞானமுநீ தானெனத்தா னேயொளியாந்
தேற்ற மிதனைத் தெளிகென்ன — வாற்றரிய
நல்ல வருளா னயந்துபிற விப்பகையைக்
கொல்லவந்தோ வென்னுருவங் கொண்டதெனச்—சொல்லிழப்
போற்றும் பொழுதிற் புரிந்தருளி னீயடங்கத்
தோற்றும் பொருணீ துணியென்ன—வாற்றும
லந்தோ விதற்குமுத லாம்பொருளுண் டோவென்ன
நந்தாப் பொருளின்றி நல்லொளிதான்—வந்த
திலதுலகி லென்று வழக்குரைத்து நாட்டி
நலமுடைய நாதனரு டன்னு—னிலவுகின்ற
வெல்லா மறிந்திறைவர்க் கெத்தொழிலுஞ் செய்கின்ற
சொல்லார்ந்த ஞானமின்று சோர்வறவே—புல்லவின்று
பெற்றதனு லிங்குப் பிறந்துழனார் வேதென்ன
மற்றதனல் யாது மதித்தெனவுங்—குற்றமறச்
செப்திடுவ தின்றெனக்குச் சேர்ந்ததெனச் செப்புதலு
மெய்யறிவா யுன்னை விளக்கியதும் — துய்ய

நனுப்போலக் கண்டணைந்த நல்ல வருளாங்
கனுப்பொருள்போ லின்றாய்க் கழியும்—வினைச்சொற்ற
மிண்டறிவா லென்ன மிகுகுறைக ளுண்டாகி
லண்டர்பெரு மானை யருளென்ன—வுண்டாய (௱௩௰)
வுன்னுணர்வு சிற்றுணர்வின் குற்றதுவோ பேருணர்வா
மன்னதனாற் குற்றமென வையனே—மன்னிவருஞ்
சிற்றுணர்வு பேருணர்வைச் சேர்ந்தா லதுவன்றி
மற்றுளதோ வென்ன மதியுளா—யுற்றிடனு
மொன்றுவ தில்லையென வுண்மையனே சொற்றதனுக்
கொன்று முவமை யுரையென்ன—நன்றான
சீரார் கதிரொளியிற் சென்றடங்குங் கண்ணொளிதா
னேரா மொளியா யிருந்ததோ—பாரென்ன
நின்ற வொளியன்றி நிருபிக்கிற் கண்ணொளியே
தின்றெனவே நன்றென் றிரங்கியே—பொன்றுத
செய்ய கதிருஞ் சிறந்தபொரு ளுங்கதிர்சேர்
துய்யவிழிக் கோகதிர்க்கோ தோன்றிடுவ—தையமறச்
சொல்லென் றிடலும் விழிக்கார்ந்தா னற்றவமே
புல்லும் பிறவி பொடிப்பரென—வல்லோர்கள்
சொற்ற பனுவற் றுணிவென் னெனவிறுதி
பற்றிய தன்று பரமாகி—மற்றுலகங்
காணு மறிவற்ற கருத்தென் றறியெனவே
பூண வுரைக்கப் புனிதனே—தானுவைப்போற்
கண்டவையுஞ் செய்யாக் கருத்தறிய வாமுவமை
திண்டிறலோய் செப்பென்னச் செய்யவிழி—பண்டிலரை (௱௪௰)
நாட்டமுற்ற நல்லவரை நண்புடனென் றாயிடினு
நாட்டமதற் குண்டாக நாட்டுமோ—வாட்டமறச்
செய்யுங் கரமிலரைச் செய்யுங் கரமுடைய
வெய்ய பசாசுபற்றின் மேம்பட்ட—கையாற்
றொழில்செய்யக் கூடுமோ தூயமறை யற்றதன்பா
யழிகின்றார் தன்பொருவற் காகப்—பழிவின்றிச்
செய்வரோ வீங்கிவைபோற் சேர வறிந்தியற்று
முய்யுமறி வோமென் றுணர்த்திட—மெய்யனே
நன்முத்தி யீதோ நவிலென்ன வன்பதைப்பை
வன்மத் துடன்வாங்கி வைத்தவிது—கன்மமற்ற
சுத்தியிது வாகுஞ் சுகப்பேறு முத்தியென
வித்தகனே யென்கேட தன்றியே—சுத்த
வதீதத்தி லுண்டாஞ் சுகமென்னிற் றீய
வதீதத்து முண்டாக வேண்டும்—விதியென்ன

வன்றைந் தொழிலி னொடுக்கமிலாப் பாற்றலென
நன்றங் கமல னவிற்றனெறி — யின்றிக்குத்
தூய்தாய்த் தூயின்றோர் தூயிலெழுந்த பின்னுறக்க
மோதா விதமென் றுரைத்திடனுஞ் — சூதன்றி
யுள்ளதுபோ லின்பா மினிய சுகமுழுதுங்
கொள்ளுதல்போ லுன்பதைப்புங் கூறிய — தெள்ளறிவா (௨௫௰)
நீயுமற நின்றழுந்து நேர்மைகண்டு கொள்ளென்ன
நேய முதலே நினையாதேன் — மாயமெலாம்
பற்றிப் பறித்த பரனே பதைப்பொடியா
னுற்றடங்கல் யானறியா தொங்கிடின் — முற்று
முவமையுணர்த் தென்ன வுயர்ந்தவின்பா மேனே
சிவமறைந்த நாட்பதைத்த செய்கை — யவமதுதா
னீயறியா யாமுணர்க்கக் கண்டதுபோ லிங்கிவையு
நீயறியா தாமிவையும் யாமுணர்த்த — வாயதெனச்
செப்புதலு மென்னுயிரே செய்யவிழி யேமணியே
யொப்புடனே யானிகழா தொங்கிநின்ற — வற்புதத்துக்
கின்றுவமை தாவென்ன வின்னே வினையதுநன்
றென்று மகிழ்ந்துகிரு பைக்கடறு — னொன்றுக
யானே பரமென் றயரா துரைத்தநிலை
தானே யுவமையெனத் தந்ததற்பின் — ஞானக்
கடலமுதே யானழியா தென்னை யிழந்த
திடமருள வந்தவருட் டேரா — வுடல்விருத்தி
யார்ந்திடுவ தெங்ஙனெனத் தானல்லை யானவர்தாஞ்
சோர்ந்துண்டல் போலுடற்காந் துப்புமெனப் — போந்துனையா
னீங்கா வுவமைதந்த நித்தியஞா னக்கதிரே
தூங்கா வொளியே துரிசற்றிங் — கோங்கிமிகும் (௨௬௰)
பூங்கரும்பி னுள்ளிருந்து போதுவரக் கண்டினிமை
யாங்கனியே யென்ன வருளாளன் — பாங்குடனே
நீயாகி நிற்கின்ற நின்மலபோ தன்னேய
மேயா மெனவென் னிறைவனே — நேயமுற
வாம்பரம முத்தி யறியு முருவழிந்து
போம்பொழுதிற் றானே புகுமென்றுந் — தீம்பா
மிருள்சற் றகலாத தாற்சிவன் முத்தி
மருவியதிங் கென்ன மதித்தும் — வருமிதனி
லையப்பா டெய்த லகல வருளென்ன
மையுற்ற கண்ட மறைந்தோளா — துய்யமுன்னோர்
சொற்ற சிவாகமத்திற் சோர்வறநே யத்தழுந்தப்
பற்ற வுரைத்ததுவும் பற்றுமுரு — வற்றவர்தா

மந்தரத்தி னின்றன் றறியவோ கட்டுரைத்தார்
சிந்தை கலங்கியோ செப்பினர் — பந்தமறார்
சொல்லும் படிற்றுரைக்குச் சுத்திசெய லாயிடுமோ
வெல்லிருளாய்த் தோன்றுமிருங் கூகைதனக் — கெல்லென்று
காட்டியிட லாயிடுமோ காட்டவரி தாமதுபோற்
றீட்டுமரு ளற்றவர்க்குத் தேற்றரிதா — மாட்டமிகச்
சீவிக்கும் போத மருளாற் செயலறவே
யாவிக்குச் சுத்தி யெனவறிந்து — நாவதனாற் (௱எ௰)
சீவகந்த ராவதனாற் சேர்ந்ததுயிர் முத்தியெனும்
பாவ வலியைமிகப் பார்த்திரங்க — லாவதனா
னாளைப் புதுமணமா நாளரும்பை யின்றெமக்கிவ்
வேளைக் கிருங்கந்த மேவிடெனக் — கோளறவே
நன்னீர் சொரிந்திடினு நாடி வெருண்டுகையாற்
பன்னிப் படினு படுத்திடினுந் — துன்னுமணங்
காட்டும் பருவமுற்றுக் காதலுறுங் கந்தமதுங்
காட்ட மலராக் கணக்கேபோ — லொட்டுமலம்
விட்டகலோ மென்பவரை வேண்டியரு ளையமுமை
யெட்டனையு நீங்கா வியல்பதனை — யுட்டெளிவீ
ரென்று லவரா விசைந்தறிய லாகாவா
மொன்றுனு மென்றே யுரைத்ததற்பி — னின்றொருங்கு
நேயத்திற் சீவன் செயலறுதல் சீவன்முத்தி
யாயுற் றறையுநன்னூ லாங்கதனை — மேயமுத்தி
யானவைக்கு மேலாத லாற்பரம முத்தியெனக்
கூவப் படுமிரண்டாய்க் கூறியிடா — வாமென்
றயர்வகற்றிப் பின்ன ரருளாற் பொருளா
யுயர்வவர்தந் நேர்மை யுணரென் — றயலான
யாவு மறிந்தகன்ற தானவறி வோடுதமை
யாவ னுடன்கண் டருளுணர்ந்தே — தாமவ் (௱அ௰)
வருளி லடங்க வகலாத நேயப்
பொருளதனு னிற்கின்ற பொற்பு — மருளறியுந்
தம்மறிவாற் சுட்டாமற் றாமுந் தமதறிவு
மம்ம விழவா திழந்துணர்வார் — செம்மை
மனவாக்குக் காயத்தின் மன்னுமறி வெல்லா
மனவாக்குக் காயத்தான் மன்னு — தனுபவமாய்
நிற்கின்ற நேய முதலே யறிவெதனை
நற்கண் ணுதன்மறைத்தோ னன்குரைப்பக் — கற்கண்டின்
றிக்கசுவை தானும் விளங்கு மொழிதந்தாய்
தக்கமல மாயத் தருக்கிடுநாட் — டொக்க

வறிவு மலமோ வறிவதனை நன்றுந்
குறியொடுநீ கொண்டவிது வென்று—மறிவான
பொய்யறிவு முன்னறிவு பொற்போ யழுந்திருப்ப
மையறிவாய் நின்று வழங்கிடுநாட்—டைய
வுறுவதெல்லா மாயமன்றி யுண்டோ வதுபோற்
பெறுவதெல்லாம் பேரருளின் பேறென்—றறிவாளன்
றேற்றியபின் னஞ்செழுத்திற் றேறும் பொருளதுமுன்
னூற்றமுறக் கண்டொன் றொருவியே—போற்று
மருள்கண் டதுவழியா யப்பொருளாய் நிற்பி
னிருள்விண் டகலுநெறி யீதுந்—தெருளின் (௱௯௰)
றருளா கமத்தி னடைவென் றருள
வருளாளா வன்பர்க் கமுதே—யிருளற்ற
முத்தே முதுவயிரக் குன்றேயெம் மாணிக்க
வித்தே வெளியில் விளைகின்ற—பத்திப்
பவளமே பாதி மரகதமே முத்தர்
கவளமே காதற் கனியே—தவளமா
நீற்றொளியே நீக நிலையேபார் நீர்தீயோ
டாற்றரிய காற்றே யகல்விசும்பே—கூற்ற
மடியக் குறியில்வரும் வள்ளலே தாளைத்
தடியப் புகுந்த தவமே—யடிமைக்
கவாவகலா தோங்கு மரசே பருவந்
தவாது மலரிற் றயங்கு—முரிய
மதுமணம்போ லென்னை மருவும் பருவ
மெதுவென்றென் னுள்ளத் திருந்து—பதமெனத்
தானே யறிந்ததுபோற் றொழியா தெவ்விடத்தும்
யானாக வின்று வெளிநின்ற—ஞானகுரு
தேசிகனே யுன்னைநினைந் தென்னைமறந் துள்ளுருகு
மாசைமிகத் தந்தாண் டருள். (௱௯௯)

வெண்பா.

அருளா லுனைத்துதிக்கு மன்பரைப்போற் றீய
விருளா லுயர்ந்தேனு மின்றிங்—கருளான
சுத்தாவுன் சொல்லாற் றொடுத்ததொடை நீபுனைந்தா
ளத்தா நமச்சிவா யா.

உபதேசப்பஃறொடை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பேரூர் வேலப்பதேசிகசுவாமிகள் அருளிச்செய்த

# பஞ்சாக்கரப்பஃறொடை.

கலிவெண்பா.

பொன்னாட ரிந்திரனும் பூமகனு மாதவனு
மெந்நாடு மெந்நாளு மேநாடித்—துன்னுத
வேத முடிவின் விளங்கு மொளியுயிரின்
போத முடிவிற் பொருந்துமொளி—நாத
முதலாக நின்று முகிழ்த்த வுலகின்
விதமான வெல்லாம் விரித்துந்—திரமாக
ஆர்பே ருருவமிவை யொன்றுமில னென்றுனுங்
காரார் மலையின் கழைமுத்த—மோரு
நாக மணியகிலி னன்குறடு சந்தமஞ்ஞைத்
தோகை முதல்கொண்டு சுவேதநதி—வேகமா
வந்து வணங்கு மதில்சூழ் பெருந்துறையே
யந்தநாள் வந்திருந்த வாட்சியான்—பந்தமக
லூரென்று நாடி யுலவாத வின்பமருட்
சீரொன்று வேலப்ப தேவனெனப்—பேர்கொண்
டறியாமை யானீங்கி யன்புருவ மாகப்
பிறியாதே நிற்கும் பெரிய—வறிவே
யுருவா யமர்ந்திருந்த வுண்மை யுளத்துண்
மருவா வகையான் மகிழ்ந்து—பொருள்வேட்கை
யுள்ளத்தில் வைத்தே யுகந்தவர்போல் யான்வணங்குங்
கள்ளத்தை மெய்வணக்க மாக்கண்டு—வள்ளலவ
னுதலினு லென்னை யருட்கடைக்கண் வைத்தருளித்
தீதகனு முண்மைச் செயல்கேளென்—றோதுகின்ற
பெத்தமுத்தி யாகப் பிறங்குமுயிர்க் கஞ்செழுத்து
மொத்த சிவாய நமவோதிற்—சுத்தப்
பரிதியொளி கண்விளக்குப் பாங்கிலிருள் போல
மருவுசிவஞ் சத்தியுயிர் மாயை—விரவுமல

மாகு மிருளி னலர்விழிபோ லாணவத்தி
னேகமாய் வல்வினையி னீட்டத்தான் — மோகமாய்
நின்ற நிலைமகார நீடுமிருள் விளக்கிற்
சென்ற விழிக்கொருவர் சேர்த்துதல்போ — லொன்ற
வருநகாரம் வந்த வழிமருவி மூன்று
மிருவினையின் போகவித மெல்லா — முருவுடனின்
றாருயிர்க டாமருந்த வைந்துமுத லீறிடையாய்ச்
சேரும் வகைபலவாய்ச் சேர்ந்தவைக — ளோருஞ்
சகலநிலை யாமிவைக டாம்பெத்த நீயிவ்
வகலமுறை தேறு யகல்வாய் — புகலுமிதில்
வந்தபெரும் புண்ணியத்தால் வாய்த்தமல பாகத்தாற்
றந்தசத்தி சேரவினை தாமொப்ப — விந்த
வவதரத்தி லண்ண லருளுருவாய்த் தோன்றிப்
பவமகற்று நன்னெறிபா ரித்தே — யவமிகுத்த (௨௰)
காயத்தைக் காட்டியதிற் காணாமை காட்டியபின்
மாயத்தை நீக்கும் வகையினாற் — றீய
விருள்விளக்கா தித்த னெழிற்கிரணத் துள்ளே
மருள்விளக்கா வாற்கன்று மாளத் — தெருள்விழிபோ
லாமா நமக்க ளருள்சிவத்தான் மாறவுயிர்
தாமா முறைமூன்றுஞ் சாக்கிரமா — நாமே
யறிவாமோ கண்ணருக்க னொளியை விட்டுப்
பிறியா நிலைதேறப் பேசிச் — செறியருளைக்
கண்டடிமை யாகக் கருதி முறைமாறித்
தொண்டுபடுஞ் சொப்பனத்தைச் சொல்லியே — கொண்ட
வொளியகனாற் கண்ணுணரு முண்மைபோல் யானு
மளியதனால் யாவு மறியத் — தெளிவா
மருள்கருவி யாமென் றகந்தையுற முன்ன
மருண்மருவத் தானடுவே யாகு — மிருள்சுழுத்தி
யென்றொளியின் செய்கையின்றி யெங்கேனுங் கட்செயரு
னொன்றுமே தேறிநீ யுன்னென்ன — வன்றேதான்
பேரறிவா யாதாரம் பேச நிறைபொருளோ
டோரறிவாய்த் தானொழித லொண்டுரியம் — பாரொன்
றொளிகுண மேயல்லா லொண்பொருளொன் றன்று
தெளிபரிதி சேர்விழிபோற் சேர்ந்தே — யொளியென்ன (௩௰)
நில்லென்றா னானந்த நேயநிலை யாக்கியென்னை
யில்லென்றே யின்புருவி லேகமாய்ச் — செல்லத்
துரியாதீ தப்பெருமை சொல்லாமற் சொல்லிப்
பிரியாத வைக்கியத்தைப் பெற்றிற் — சரியாய்த்

தெசகா ரியமேழாய்ச் சேரு முவமை
வசமாங் கரும்பின் வகைகே—ணிசமான
சுத்தவத்தை யாங்கரும்பிற் றொல்கணுவைந் தாகுமுறை
முத்தி வருசாக் கிரமுதலாம்—பத்து
முழுங்கா ரியமவற்றின் மூன்றடக்கிப் பங்கேழ்
வழங்க முறைமை வகுக்கி—லொழுங்கான
தத்துவ ரூபமுடன் றற்காட்சி சுத்தியுயி
ரொத்த வுருவ முயர்காட்சி—சுத்தி
யிலாபமிவை யேழி விலங்குமுயிர்க் காட்சி
நிலாவு சிவரூப நேராங்—குலாவுசுத்தி
தன்னிற் றரிசனமுஞ் சார்யோக மாமிரண்டு
மன்னு மிவையேழும் வருமுறையிற்—றுன்னுகின்ற
சாக்கிரத்தி னான்கு தகுஞ்சொப் பனமொன்று
நீக்குஞ் சுழுத்தி நிறைதுரியத்—தாக்கியிடு
மொன்று மதீதத்தே யுற்றிடுமொன் றாகுமெனத்
தன்றாளின் பூசை யனுட்டான—நன்றான
சுத்தநெறி யாமெனவே சொல்லியே மெய்கண்டான்
வைத்தநெறி நூலும் வகுத்துரைத்துப்—பத்தர்
குருலிங்க முண்மையெனக் கூறிநீ டின்பந்
தருமன்பை யென்சொல்வேன் றான். (௬௨)

பஞ்சாக்கரப்பஃறொடை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# சித்தாந்தசிகாமணி.

---

சாதிக்க தெல்லாக் கலைகளுஞ் சற்குருவைப்
பேதித்தா லெல்லாம் பிழையாகும் — வேதத்
தறம்புரிந்த தக்கனுக்கன் றக்கினிவந் துற்ற
திறம்புரிந்த வாறுந் தெளி. (க)

வஞ்சமே செய்வாய் மருளுங் குருவோடு
நெஞ்சமே நீகதியி னிற்பதெந்நாட் — கொஞ்சி
யுருகித் தமரோ டுறைவாய்நன் முத்திக்
கருகமென்ப தெவ்வா றறை. (உ)

நாமெங்கே முத்தி நடையெங்கே நன்னெஞ்சே
நீமங்கை யின்பே நினைகுமர — காமன்கை
யம்புற்ற புண்மெய்யி லாறியபோ தன்றோதன்
செம்பொற்றா ளீவான் சிவன். (௩)

சலக்குழியின் மிக்க சகதியில்லை யக்கச்
சலக்குழியை யின்பமெனச் சார்ந்து — மலக்குழியைக்
காமித்தார் தங்களுக்குக் காட்டாம லன்றிவைச்
சேமித்தா னன்றோ சிவன். (௪)

ஒளியானு முற்றவிருண் மாதருமே யொத்துத்
தெளியநடஞ் செய்வதனைத் தேறி — யொளிநடத்தைக்
கண்டோர் காணார் கருத்தி யிருணடத்தைக்
கண்டோர் காணார் கதி.

தானுவினோ டொத்துச் சரியாய் நடம்புரியும்
வானுதலார் கூத்து மறைப்பல்ல — வானவத்தை
யொட்டியபேர்க் கெல்லா மொளிப்பா னானதனைத்
தெட்டியபேர்க் காமாத் தெரிவு. (௬)

கூட்டித் தனுவைக் குறித்துயிர்
வீட்டுவிக்கச் செய்யு மியல்பாமா — ஒட்டிமல
மில்லையென்ப தாகு மிசைந்த கருணையை
மல்லவென்ப தாமா மறிந்து. (எ)

தோற்ற மிறப்புந் தொழிலீசன் றன்செயலென்
மாற்றுதற்கு வேறொருத்தர் மன்னுவதாற் — சாற்று
மாவு கடத்தவிட மாங்கதனை மட்டக
வருமவர்போ லாமா மதி. (அ)

மலமே பிறப்பிறப்பை மன்னுவிக்கு மீசன்
நலமே யவையகற்றி நன்னுமா — மலமருக்கன்
சன்னிதியி னில்லாத் தருவிருள்போற் றக்கவான்
சன்னிதியி னில்லாது தான். (கூ)

பேதித்து நெஞ்சம் பிரியாம னின்றீசன்
சாதித் திடக்கருளி தந்ததா — லாதித்தன்
காட்டுவதே போலவர்க்குங் காட்டுவதே யல்லாற்போய்
வீட்டுவிக்கச் செய்யானென் றெண். (௰)

வாதித்த தேது மலமாமா லாங்கதனைச்
சேதித்த வீசன் றிறமாகு — மாதித்தன்
போலவர்க்குங் காட்டிப் பொருத்துவதே யல்லாற்போய்
மாலவர்க்கும் வையான் மறந்து. (௰க)

அன்னியத்திற் றன்னினைவை யாக்குவார் தங்களுக்கு
மன்னியரன் பானினைவை வைப்பார்க்குந் — தன்னுந்
தனுவினையை யீயத் தருவதல்லான் மோக
நினைவினையுற் றீயா னினைந்து. (௰உ)

காட்டுங் கதிரவனக் கண்ணதனுக் கில்லமு
வீட்டும் பொருண்மே லிசையுமால் — கூட்டு
மரனெவர்க்கு மில்லைமற் றூற்சகமே நோக்கி
வருமதனை நெஞ்சே மதி. (௰௩)

சத்த மசத்தமெனச் சொல்லியதோ ராங்கவைக்கு
மத்தன் பிரேரகமே யாகுமாற் — பித்தருக்கங்
கன்னியத்தை நோக்கி யறிவிப்பான் மற்றவர்க்குத்
ஈய நோக்குவிப்பான் றான். (௰௪)

மனமே தெனவேண்டா மற்றுயிர்மே னின்ற
புலமே லெழுந்திரிடும் பொய்யா — நிலமே
லிருந்தவத்தைச் செய்யாதே யேதேனு மீசன்
றருந்தவத்தை நெஞ்சே தரி. (௨௩)

அறியாமை யென்று மகன்றிடுமா லாவி
பிறியாம னிற்குமந்தப் பேறு — குறியாந்
தனுவோ டிசையினும்பின் றக்கவிரா தானே
நினைவோ டிசையினுமா னேர். (௨௪)

ஆசைப் படுவாரை யாசைப் படுத்துவிக்கும்
பேசு முலகியல்பின் பெற்றியான் — மாசுமல
முற்றாரைப் பற்றி யுறுவதல்லா லொவ்வாம
லற்றார்மேற் செல்லா தறி. (௨௫)

பித்தமுற்றார் தங்களுக்குப் பித்தகல நன்மருந்தை
மத்தகத்திற் றேய்த்து மதிப்பதல்லாற் — புத்திசொல்லி
மாற்றியபே றுண்டோ மலந்தவர்க ளாவியின்மேற்
றேற்றுவதே யில்லைத் துணி. (௨௬)

பிடித்தார் தமைப்பிடிக்கும் பேராச் சடமும்
விடுத்தார் தமைவிடுக்கும் வேறு — படுத்தமலந்
தொட்டபேர் தம்மைத் தொடுவதல்லாற் றொல்லுயிரைக்
கட்டிப் பிடிப்பதில்லைக் காண். (௨௭)

சத்திநி பாதஞ் சதுர்விதமாம் ரூபமல
முத்தியினு நிற்கு முறையென்னிற் — சுத்தமன்
பாலே யெழுமவன்றன் பண்பா லறியாமை
மாலே யகலுமென மன். (௨௮)

மாசற்றார் நெஞ்சின் பதும மலரின்மேற்
பாசத்தார்க் கின்றாம் பதியென்னி — லீசன்
சரியாதி நான்கிற் றகுமலமே கேடாய்
வருமா விலையாய் மதி. (௨௯)

தீக்கைக் கொதுங்கிச் சிதைந்தமலந் தன்வசமே
யாக்குதலைச் செய்ய வறியாவா — நோக்கி
மலமே யுளதென்று மன்னுவதே யல்லாற்
பெலமேது மில்லையெனப் பேசு. (௩௰)

இருவினையு மொத்தா லிசைந்தவராற் கன்பு
மருவுதலா லுண்டா மலமா — லிருவினுக்கங்
கொத்த பிரார்த்தமராற் கூட்டுதலாற் றீயவினை
தொத்துதலே யில்லையெனச் சொல். (௯௧)

சேதித்த சேடஞ் செயற்படுத லங்கத்தை
வாதித்த நோய்மாறி வந்ததுவா — மாதித்தன்
முன்னிருள்போற் றீயமல முற்றுஞ் சரியாதி
தன்னிலையி னிற்பார்க்குத் தான். (௯௨)

ஒத்த மலத்தோ டுறுவாரைத் தீயநெறிப்
பெத்தரென்ப தாகப் பெறுவதாஞ் — சித்த
மலத்தை வெறுத்து வருமானை நோக்கு
நலத்தாரை முத்தரென நாடு. (௯௩)

மலமுற்றா ரேனு மனனுமரன் பாத
நிலையுற்றா லம்மலமு நீங்கும் — புலமுற்றும்
பேதித்த மும்மலத்தின் பெற்றியறப் பெற்றியறச்
சாதித்தார்க் கில்லைமலந் தான். (௯௪)

சரியைக் கனுக்கிரக சத்திகா லாக
வரிசைத் தவத்தோடும் வைத்துத் — தெரிசிக்க
வீசனே யாகு மெனுமுறைமை யெவ்வுயிர்க்கு
நேசமே யாகு நிறைந்து. (௯௫)

மலநாலத் தொன்றாக மாறும்பின் னீசன்
குலநாலத் தொன்றேறக் கூறும் — பலமா
மிருவினையு மொப்பா மிசைந்ததனுப் போகந்
தருமாற்கே யாகத் தகும். (௯௬)

நின்ற மலமதனை நீண்டவரன் பாலன்பாற்
கொன்றிடுவ தென்றுங் குணமாமாற் — றொன்றுஞ்
சரியாதி நான்கிற் றருமரனே தானாய்
வரலா விலையா மலம். (௯௭)

சரியாதி நான்குந் தருமலத்தை வென்று
வரவரவே சுத்தமெனு மாண்பாம் — புரையறவே
யொன்றாகி நிற்பா ருருசிவமே யொத்தவர்பாற்
சென்றார்க்குந் தீர்க்குமலத் தீ. (௯௮)

பித்தமுற்றார் துய்க்கலந்தப் பித்தமாற் போக
சுத்தமுற்றார் துய்த்தனுமச் சுத்தமன்றோ—வொத்த
தொழிலனைத்து மாங்கவையே சொல்லியதோ ரீச
னொழிலனைத்துந் தானுமென் றறன். (சஎ)

பச்சிலையைத் தின்னும் பசார்பழுவைச் செங்குளவி
நச்சியிட வப்பழுப்போய் நண்ணியதா—லிச்சித்துத்
தோற்றாமிலே புண்ணைத் துணியாது தொல்பிறவி
மாற்றியபேர்க் கிவ்வாறாய் மன். (சஅ)

வினையற்ற லங்கம் விடுவா டனுவாக்
கனுவற்ற வவ்வினையைச் சார்வா—தினைவற்
றாறுய்த் திரிவார்க்கங் காங்கரமே போகத்
தராமாற் கருணையுருத் தான். (சகூ)

ஊக்கிய காமமுயர்சிவமா லூற்றதனுத்
தாக்குஞ் செயலே தரும்வாக்கா—னீக்குமல
வேதனையே மாற்றி விடுமால் பெருங்கருணை
நாதனவன் றானே நமக்கு. (ருய)

ஊக்கிய காமமுறுபிலமா மூற்றதனுக்
தாக்குஞ் செயலே தருமதற்கா—லாக்குமவன்
போதமே நோக்கிப் பிறியுமாற் றீயமலப்
போதமென நெஞ்சே புகல். (ருக)

இருளி லெழுமொளிமற் றங்கே யிருளும்
வருமொளிமேற் செல்லுதற்கு வாரா—வருளு
மலமே லெழுமலமு மாற்றியருண் மேமே
செலநினைவ தில்லையெனத் தேர். (ருஉ)

மலமகல மாயா தனுவகலுங் கன்ம
நிலையகலப் பூரணமாய் நிற்கு—மலைவறவே
போக்குதலைச் செய்வான்றன் பொன்னடியே யின்றவர்மே
லாக்குதலைச் செய்யா னரன். (ருங)

மலமுற்றார் துய்ப்பர் மலமே மனுவா
நிலையுற்ற ருண்பர்மனு நீதி—யலைவற்ற
ஞானத்தார் துய்ப்பர் நயந்தவரு ளாற்றனுவா
மானந்தா லொட்டியதோர் வாறு. (ருச)

பெத்தருக்கே யாகும் பிரமாத்தம் போகு
முத்தருக்கே யின்பம் மொழியுங்கால் — சித்த
மறியாமை மாற்றி யடங்குமான் முத்தி
பிறியாத நான்கும் பெறும். (௫௫)

முத்தருக்கே யாகு மொழியுமருள் மந்திரமே
சித்தமான் பாலே செலுமதுவே — பொத்த
தனுவுமது வாகத் தருமெய்ப் போக
மனுவே யதுவாமவ் வாறு. (௫௬)

மந்திரத்தை யுற்று வருந்தனுவை நீத்தோர்கள்
பந்தியா ருகப் பதுமமாய் — வந்தனு
வாங்கவினை யாமா லகற்கிசைந்த போகமெலாம்
நீங்கா மலமுந்து நேர். (௫௭)

இருவினை யொப்பி லிசைந்துயிர் மாறி
வருமாற் றனுவினையவ் வாறு — மிருவினையுந்
சித்தமுற்ற வாறே நிகழ்ப்பார லோர்பழுத்தாய்ப்
பெத்தமென்ப தல்லினைப் பேசு. (௫௮)

ஒத்த பதத்தை யுறுவிக்குந் தாபரமாந்
சித்தமலஞ் சங்கமமே நீக்குமா — லத்தினன்று
மாவியே நோக்கி யணையுமா றற்றவை
மேவியே நிற்பன் விரைந்து. (௫௯)

ஈசனே யெல்லா வுயிர்க்குயிராய் நிற்பானு
மீசனைப் பூசைக் கிசைவானு — மீசனைச்
சாலோக மாதிப் பயனளித்து நிற்பானு
மாலோக லிங்கமென மன். (௬௰)

மனவாக்குக் காய மருவா வரனே
மனவாக்குக் காய மருவி — நினைவார்க்கு
மூவுருவே யாகி முதன்மைசிவ லிங்கமா
மேவுருவங் காண்கைக் கிசைந்து. (௬௧)

மந்திரமே யுற்று வருங்கருணை நன்மனைத்
தந்திரமே யுற்றிருக்குந் தன்மையாற் — சிந்தித்து
வந்தார் தமக்கே வரங்கொடுத்து நிற்குமே
நந்தாக் கருணை நலம். (௬௨)

அறமுறையார்க் கில்லைப்பொய் யாயிழைமேல் போக
மறமுறையார்க் கில்லையற மாண்பு—துறவுறையு
முத்தர்க்கே யில்லை பொழியுமுட லற்சிவமாஞ்
சித்தர்க்கே யாவியில்லைத் தேர். (எகூ)

ஊனுண்பார்க் கில்லை யுயிரிரக்க மென்பூசை
தானில்லார்க் கில்லைத் தருக்கறிவோர்—கோனடியை
வந்திப்பார்க் கில்லை வருநிரய மாங்கவனைச்
சிந்திப்பார்க் கில்லைமலத் தீ. (அ0)

சாதியுற்றார்க் கில்லை தருஞ்சமயஞ் சங்கமமா
நீதியுற்றார்க் கில்லை நிகழ்சாதி—பேதமற்ற
வங்கத்தார் தங்களுக்கங் காவியில்லை யாவியுறாஞ்
சங்கத்தார்க் கில்லையுடற் றான். (அக)

மனங்கவர்ந்தார்க் கில்லை வருந்துறவு மாயாச்
சினங்கவர்ந்தார்க் கில்லை தெளிவே—யனங்கனம்பிற்
புண்ணுற்றார்க் கில்லை புனிதம் பொருந்துமரன்
கண்ணுற்றார்க் கில்லைபதன் காண். (அஉ)

பொய்யுற்றார்க் கில்லை புகழுடம்பு போகத்தின்
மையுற்றார்க் கில்லை கருதுமற—மெய்யுற்றுக்
காமித்தார்க் கில்லையுயிர் காட்டாமன் மேலன்பைச்
சேமித்தார்க் கில்லைச் சிவன். (அ௩)

ஆசையுற்றார்க் கில்லை யருட்செல்வ மாங்கரன்பா
னேசமுற்றார்க் கில்லை கொடியமறம்—பாசற்று
நெஞ்சினார்க் கில்லை நிகழ்குறைவு நிந்தைவிட
வஞ்சினார்க் கில்லை யரன். (அச)

திருவினை யுற்றார்க்குத் தீதில்லை செங்க
ணொருவனையுற் றார்க்குயர் வில்லைக்—குருவவனை
யையுற்றார்க் கில்லை யருணடைமை யாங்கவன்றன்
மெய்யுற்றார்க் கில்லை வினை. (அரு)

கற்றவர்க்கே யில்லை கரிசறுத்தல் கற்றநெறி
யுற்றவர்க்கே யில்லை யுறுங்கரிசு—மற்றுடலைச்
சேதித்தார்க் கில்லைத் திரிமலமெய்த் தேசோவொடு
சாதித்தார்க் கில்லையுயிர் தான். (அசு)

சீவனுற்றார்க் கில்லை சிவமச் சிவமென்னுந்
தேவனுற்றார்க் கில்லையந்தச் சீவனென்கை—யாவதனு
லங்காங்கி யாக வடையு முயர்பிழிவா
மங்காதே வைக்கும் வரம். (அஎ)

வானுற்றார்க் கில்லை வருங்கருணை மன்னுதவக்
கோனுற்றார்க் கில்லை கொடுங்கோபம்—வேனுற்ற
நெஞ்சினார்க் கில்லை நிகழ்மரபு தீதைவிட
வஞ்சினார்க் கில்லை யறம். (அஅ)

மரத்தி னுருவமைக்க மாறு மரத்தைக்
கருத்தி லமைக்கவுருக் காணுத்—திருத்துமரன்
காணுங்கா லாவியினைக் காணுமெய் யாவியினைக்
காணுங்காற் காணு தரன். (அகூ)

சித்திரமு நற்சுவருஞ் சேருங்கா லொன்றாநற்
சித்திரமே காட்டாதிச் சேர்சுவரைப்—புத்திதனைத்
தேற்று மரனே செலுமுயிரைக் காட்டாமற்
றேற்றியவா றென்னத் துணி. (கூ0)

இரும்பினைப்பொன் னுக்கு மியைந்த குளிகை
திரும்பியிரும் பாக்குதலைச் செய்யா—விரும்புமலம்
போக்குவதே யல்லாற்பின் போனதனை யாருயிர்மே
லாக்குதலைச் செய்யா னரன். (கூக)

சித்தாந்தசிகாமணி முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# உபாய நிட்டை வெண்பா.

கற்றுடலற் றேயுயிரைக் கண்டருள்கொண் டேயரனைப்
பெற்றனமெய் யம்பலவா ணன்பெருமை—யுற்றநலப்
பண்பா வடிதுறைச்சீர் பன்னு முபாயநிட்டை
வெண்பா வுரையை விரும்பி.

---

தொந்தித்த காயந் தொலைவதற்கு முன்னுயிரைச்
சிந்தித்தார்க் கன்றோ திடமாகுஞ்—சந்தித்த
தோலோ டெலும்போ டொருத்ததனை நானென்
றாலோசித் தார்க்கறிவே யாம். (௧)

அங்கத்தை நோக்கி யடுத்ததசை தோலெலும்பாம்
பங்கத்தைத் தீதென்னப் பார்ப்பாரேற்—சங்கத்தை
யறாரே பூரணமா யானவரன் றாளணைப்
பெற்றாரே யில்லைப் பிறப்பு. (௨)

கண்ணொன்று மூக்கொன்றுங் காதொன்று நின்றதனு
வெண்ணொன்றி நின்றங் கிசையாவாங்—கண்ணொன்றி
நோக்குவதே யாவியென நுண்ணறிவா லெவ்விடத்து
மாக்குவதே யாவிக் கணி. (௩)

கண்ணே யொருபொருளைக் காணிற் கலந்தொன்றா
யெண்ணுவான் றன்னை யிழந்ததுவாங்—கண்ணினாற்
பூணா மொருவனையே பூணி னவனாகக்
காணும் பொறியாகுங் கண். (௪)

ஊனு முயிரு மொருங்கொப்ப நிற்பினு
மூனுயிரை நோக்கா வொழுங்கன்றோ—வூனைக்
குறித்தறிவை நோக்கிக் குறியா வறிவாற்
பறித்தெறிவ தன்றோ பயன். (௫)

உயிரு முடலு மொருங்கொப்ப நின்றுங்
குயிருடலை நோக்கி யுறுமா—லுயிர்தான்
பிடிக்குங்கா லொன்றாய்ப் பிடிக்கும்பின் போந்து
விடுக்குங்கால் வேறாய் விடும். (௬)

அறிவாற் பிறிவு மறியாமை யாலுஞ்
செறிவாந் தனுக்கெதிக்கத் தேரின்—பிறவான்
மனமிடைய வாக்கை மனுவாங் கருவி
தனுமிடைய வாவி தரும். (௭)

தன்னைத்தா னென்னுந் றகுமுடலைத் தானென்பான்
பின்னற்றாற் செத்த பிணமென்பான்—முன்னத்தாற்
சேட்டிக்கு மாவி செயற்படுவ தங்கமென
நாட்டுகையா லாவியென நாடு. (௮)

மருவுந் தனுவதனை மற்றுயிர்மேல் வைத்த
தெரியும் பொருளைத் தெரியத்—தெரியாத
தனுவனைத்து நோக்கித் தருமுயிரே தானே
வினையனைத்து நிற்கும் விரைந்து. (௯)

கருவி யனைத்தினையுங் காணுங் கருவிக்
கொருவ னிலனெனவு மோரார்—மருவுங்
கருவியே தானாய்க் கலந்தொன்றாய் நிற்கு
மருவுமுயிர்க் குற்றதோர் மாண்பு. (௰)

புலமனைத்து நின்று பொருந்தியுமற் றன்னைத்
திலமளவுங் காணத் தெரியா—மலமனமே
யங்கமே பொய்யா யகன்றபோ தாவிதன்
சங்கமே யாகத் தரும். (௰௧)

ஓட்டி யறிவை யுறுமுடலைப் பேதமென
வாட்டியபேர்க் காவி வளமாரு—மூட்டிக்கை
வித்தாரஞ் செய்து வெறும்பிணத்தைத் தானாக
வைத்தார்க் குயிரேன் வரும். (௰௨)

மனவாக்குக் காயத்தை மன்னியபின் னல்லாற்
றனியே யறியத் தகாதான்—மனவாக்குக்
காயத்துக் கெட்டாக் கருதியதோர் பூரணமா
மாயமே யாவியென மன். (௰௩)

உறையுந் தனுவி லுறையு முயிர்க்
கிறைவை யறிந்தொருகா லில்லா—வறையுமுடற்
சேட்டையல்லான் மற்றுயிரின் சேவகமே யில்லையெனக்
காட்டுகையா லாவியிலக் காண். (௰௪)

சீவிக்குங் காயஞ் செடமாமாற் சிவத்தை
யாவிக்கு நன்கா யமைப்பதல்லாற்—சீவிக்குங்
காயமே தானாய்க் கருதியவா றல்லாமற்போய்
மாயமே யென்ன மதி. (௰௫)

ஆவியென வேறொப்பாய் யாக்கையே தானாக
மேவியதே யன்றோ விளம்புங்கா—லோவியம்போ
னீக்கித் தனுவை நிகழறிவைப் பூரணமா
யாக்குவதே யாவிக் கொழுங்கு. (௰௬)

ஒன்றித் தனுவை யுடமைதனைப் பேதமெனக்
கொன்றுயிரை வாங்கல் குணமாகு—நன்றிதனைக்
குற்றார் தமக்கே யுறம்புத்தி யொவ்வாமை
லுற்றார் தமக்கேதப் பாம். (௰௭)

சோதித்த காயத் துடக்கற்றுற் றொல்லைமைந்
சேதித்த தாகுமனச் செப்புறால்—பேதித்த
வாவியே தானு யடையு மனமடியு
மேவியே நிற்கும் விரைந்து. (௰௮)

அளந்துடலை நோக்கி யறிவின்வாட் பூட்டிப்
பிளந்ததனை யாங்கே பிரித்து—வளர்ந்ததனைச்
அட்டா சிரமமாய்த் தோன்றுத லின்பமதா
யெட்டாத பூரணமென் றெண். (௰௯)

அறியு மறிவே யறிவறிய நிற்கும்
பொறியும் பொருளும் பொருந்தச்—செறியுமரன்
காட்டியவா றென்னக் கருதி யறிவதனை
யீட்டியவா றன்றோ வியல்பு. (௨௰)

வாக்குமனக் காய மருவா வறிவுபோய்
யாக்கையின்பா லுற்றங் ககப்பட்டா—னீக்கித்
தெரிசித்துத் தன்னைத் திகழ்பரத்தோ டொன்றாய்ப்
பரிசித்த லன்றோ பயன். (௨௧

அறிவாற் பலகாலு மாராய்ந்து பார்த்துப்
பிறிவாற் றனுவைப் பிரித்துக்—குறியா
மறிவோ டறிவா யடங்குவதே முத்தி
நெறியாகு மென்ன நினை. (௨௨)

சேமப் படுத்திமலந் சிற்றுயிரைத் தன்னெறியிற்
காமப் படுத்தியொன் றுங் காட்டாதாற்—றீமை
வினையுந் தனுவினுக்கு வேறு யறிவோ
டளையுமே லாமாம் வீடு. (௨௩)

தன்னைத்தா னென்றுந் தருமுடலைத் தானென்னச்
சொன்னத்தாற் றீதனைத்துந் தோற்றியதாற்—றன்னை
யறியுமா றெவ்வா றகன்றவுடற் றன்னைப்
பிறியுமா றேமாற் பெறும். (௨௪)

அகமோ புறமோ வகம்புறமோ வாவி
செகமோ தனுவினுக்குத் தேறி—னிகமே
பிறியாத் தனுவைப் பிறித்தறிவை நோக்கி
லறிவா யகம்புறமே யாம். (௨௫)

அகமேற் றனுவோ டழியு மகத்தின்
புறமேற் பொறிவழியிற் சேரா—வுறுமாறே
டத்துவித மாமா லரனிறைவோ டொன்றாக
வொத்ததுவாய் நிற்குமென வோர். (௨௬)

யானென்ற காய மெனவிதன்றால் யானென்றுந்
தானிற்கச் செய்யத் தகுமன்றே—வூனின்று
பற்றறவே விட்டறிவாய்ப் பார்க்கினிரா காரமா
யுற்றதுவே யாகுமென வோர். (௨௭)

எங்கு மிருக்கு மிசைந்ததனு வோடிசைந்து
தங்கி யறியத் தருவதா—மங்குமுடற்
சேதித்தா ரன்றே திருவருளோ டத்துவிதஞ்
சாதித்தா ரென்னத் தகும். (௨௮)

பேதித்துக் காயத்தை பின்னமற வெவ்விடத்துஞ்
சாதித்தான் முத்தித் தகைமையாஞ்—சேதித்த
வங்கத்தாற் செய்ததவ மத்தனையு முத்திபதச்
சங்கத்தா லாகத் தகும். (௨௯)

பொறியனைத்து மொன்றைப் புணராமற் றாவி
யறிவனைத்து நோக்கி யணையும்—பொறியனைத்து
மற்றார்க்கே யத்துவித மாகுமா றற்றவத்தைப்
பெற்றார்க்கே முத்திபதப் பேறு. (௧௦)

சாக்கிரத்தே தாஞ்சாக்கிரத்தை தானவர் தம்முடம்பை
நீக்கியே யன்றே நிலையுங்காற்—றாக்குஞ்
சரியாதி மூன்றிற் றரும்பதத்தி னிற்போர்ப்
பிரியா வுடல்பிரியாப் பேர். (௧௧)

பெத்தருக்கே காயமெனப் பேசிச் சமயநெறி
முத்தருக்கே யின்றாய் மொழியுமாற்—சத்தியமே
மந்திரமே தேகமெனப் பன்னியது மாவிக்குப்
பெந்தமே யாமாற் பிறை. (௧௨)

அத்துவா வாதி யமைந்ததான் மந்திரத்தைச்
சித்தத் தயலாய்த் தெளிந்ததா—முத்தர்
திருமலமே தானாய்த் திகழ்நிலமே யாமா
லொருமலமு மில்லையெனு மோர். (௧௩)

காயமுரி யென்னக் கருதுங்காற் பேதமாந்
தோயுங்கா லொன்றாகத் தோற்றுமாற்—காய
நடையொருகா லாகி நடையொருகா லாகத்
தடையெடுத்து நிற்கத் தரும். (௧௪)

ஊனைப்பத் திரித்தங் குழலுமொரு கான்மனுவே
தானைத் திரியத் தருமொருகாற்—கோனையு
நேயமே தானாக நிற்குமொரு காலுயிரின்
காயமே யுற்ற கடன். (௧௫)

ஆகந் திரியாமெய் யாவியல்லா லங்கத்துப்
போகந் திரியாப் பொறியல்லான்—போகநிலை
யாவியே சென்றப் படையுமே லெய்விடத்துந்
தாவியவை யாகத் தரும். (௧௬)

ஆவி தனுவை யடையுங்கா லாவியற
மேவித் தனுவாய் விளங்குமா—லாவியினை
யாக்கையே சென்றங் கடையுமே லாக்கையறத்
தாக்குமது வாகத் தரும். (௧௭)

பூணூந் தனுவே பொறிக்கிடமாம் பொய்ப்பிதெனக்
காணுமவர்க் கவ்வாறே காண்பனுவாம்—வீணூந்
தனதாகி நிற்குந் தகுதியோர் தங்கண்
மனதாகி நிற்கு மதி. (க.அ)

மலமடைய மாயா தனுவிலையு மந்த
மலமிடையக் காய மனுவா—நல முடைய
வாக்கைபறக் காய மருட்டனுவா மோர்தனுவிற்
ருக்கியமெய்ப் பாவகத்தாற் ருன். (க.கூ)

ஆகமற்ற தாலடைவ தாருமா ணுமல
பாகமுற்ருன் மந்திரத்தின் பண்பாருந்—தேக
மனுவாற் றுறந்தறிவின் மன்னுமான் ஞானத்
தனுவாகு மென்னத் தகும். (உ0)

ஆவி தியானத் தடங்காவா மாங்காரனைத்
தாவி மனமுஞ் சருவாவா—மேவு
முடலகலத் தோற்று முயிரா லுயிரின்
கடனகலத் தோற்றுமான் காண். (உக)

அங்கத்தார்க் காரு மரிய தியானமலப்
பங்கத்தை மாற்றுதற்குப் பாங்காருந்—தங்கக்
கருமி தொழிலோடிங் காண்பான்மெய்ந் ஞானத்
தருமியுறு ஞானநூற் ருன். (உஉ)

கருமி தியானங் கருதியதாம் ஞானத்
தருமிநூ லோதுந் தருக்குந்—தெரியுங்காற்
சாலோக மாதிப் பதநோக்குஞ் சற்குருவா
லாலோது வார்க்கறிவே நோக்கு. (உ௩)

நாட்டமற்ரு ணங்கவன்போ ணட்டமற்ருர்க் கேமதியைக்
காட்டியது முண்டோவக் கண்ணுடையா—ணட்டமற
வந்தார்க்குக் காட்ட வழக்குண்டோ ஞானத்தை
நந்தா தவர்க்குரைக்க நன்று. (உ௪)

நாட்ட மிருவருக்கு நண்ணுமென வெண்மதியைக்
காட்டாமற் ருனே கருதுமா—ணட்டம்
பிரிந்தான்மெய்த் தோற்றத்துப் பின்னொருகாற் பெற்றுத்
தெரிந்தான் றெரிவே துரை. (உரு)

சீவிக்குங் காயஞ் சிவனலவே யென்னுமலப்
பாவிகட்கின் னூலைப் பகரற்க—மேவு
முயிரே செயலற் றொடுங்கும்போ தீசன்
செயலென்பார்க் கேயுரைக்கச் செய். (௬௬)

### நூற்சிறப்பு.

உபாயநிட்டை வெண்பா வுரைத்தானுற் பத்தா
றுபாயநிட்டை வாராம லார்க்கு—முபாயநிட்டை
வெண்பாவா லாவடு தண்டுறையை வெஃகினர்க்கு
கண்பாகு மம்பலவா ணன்.

உபாய நிட்டை வெண்பா முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



பித்தனித் தம்பிர வஞ்சமென் றோடிப் பிணியொடுக்கி
யத்தனித் தன்னைன் றறிவதற் கோவென் னகத்தினுள்ளே
சத்திநி பாத முதித்ததந் தோதனுச் செய்கைபற்றுச்
சித்தமும் பித்துறு தற்கோசொல் தில்லைச் சிதம்பரனே. (௧௫)

மாயநட் போரையு மாயா மலமென்னும் மாதரையும்
வீயவிட் டோடி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
தாயுடன் சென்றுபின் றந்தையைக் கூடிப்புன் றுயைமறந்
தேயு மதேநிட்டை யென்று னெழிற்கச்சி யேகம்பனே. (௧௬)

என்னிச்சை யுன்னே டுறுமிச்சை யுன்னிச்சை யேமலத்தின்
றன்னிச்சை யுன்னிச்சை யென்னிச்சை யாகத் தருவதுண்டே
லன்னிச்சை நீயற் றருளிச்சை யாக வடையுமந்த
மன்னிச்சை யேநிட்டை யென்றான் சிவாயநம் மன்னவனே. (௧௭)

நீணாட் டியானித் திடினு முடலுயிர் நீத்தசற்றுங்
காணார்கண் மூடிப் பயனென்கொ லோகலை யாலருளைக்
கோணா தூணர்த்துங் குருவே யறிவைக் கொடுப்பனின்ப
நாணா திதுநிட்டை யென்றான் சிவாய நமகுருவே. (௧௮)

உருவே தியானித் துறுவர்கண் மூடி யுறுமுடலின்
கருவே தியானித்துக் காண்பதுண் டோகலை யாலுணர்த்துங்
குருவே யறிவைத் தருவ னிமையினைக் கூடலின்றித்
தெரிவே தெரிநிட்டை யென்றான் சிவாயமெய்த் தேசிகனே. (௧௯)

ஓவிய மேதனு வற்றோ ருயிர்க்கு முவமையின்றாற்
பாவிய மேதனு வாமான்மெய்ஞ் ஞானம் பகர்ந்தநன்னூ
லாவியை மிக்க சிவத்தோ டழுத்துமவ் வாறதுறத்
தாவிய தேநிட்டை யென்றான் சிவாயமெய்ச் சற்குருவே. (௨௦)

பிறிவே பிறித்துப் பிறியா வறிவெனும் பெற்றிதந்த
செறிவேகண் மூடித் தியானித்த லோசொல்லு சேர்ந்தநன்னூ
லறிவே யறிவை யறிவித்து நற்சிவ மாக்குமின்ப
நிறைவே தருநிட்டை யென்றான் சிவாய நெடுந்தகையே. (௨௧)

உறவே யறிவறி வேயுடம் பாகு முடம்புஞ்சுட்டி
யறவே யுயிரினு மாவியு மாமரு ளோடுறையு
நிறைவே தியானித்து நிற்பது வோசொல்லு நீயிதனை
மறவே லதுநிட்டை யென்றான் சிவாயநம் மன்னவனே. (௨௨)

முகத்தே யிருக்கண் மறைக்கமெய்ஞ் ஞான முனாக்குங்கண்கள்
பகுத்தே கடைக்க வருண்பாயு மென்பது பாவமெய்ந்நாற்
செகத்தே பிரித்தங் கறிவறி வாக்கிச் சிவத்தைநல்கு
மகத்தே விடுநிட்டை யென்றான் சிவாய வருட்குருவே. (௨௩)

பொன்னேர் கனிநிறம் பூணும் பொறியொன்று பூண்டுசுவை
தன்னே ரறிவொன்று தானென் றுவமை தகாசிவத்தி
னன்னே ரறியு மறிவொன்று தம்மு ணயப்புமொன்றாய்ச்
சொன்னே ரிடனிட்டை யென்றான் சிவாயமெய்த் தூயவனே. (௨௪)

அறிவே யறியி லறிவனு போக மறிவுவரு
ஞறவே யறியி னுறவனு போக முயர்சிவத்தி
னிறைவே யறியி னிறையனு போக நிலைமையொன்றாய்ச்
செறிவே யிதுநிட்டை யென்றான் சிவாயமெய்த் தேசிகனே. (௨௫)

சொலவே யறிவு விளங்குமெய்ஞ் ஞானமுஞ் சொலவுசொல்லித்
திலவே பகுத்தறி வின்றா யிருந்த படியிருக்கும்
வலைபே றுரையை மருவமெய்ஞ் ஞான மருவுந்துன்ப
மலவே யிதுநிட்டை யென்றான் சிவாய வருட்குருவே. (௨௬)

ஆவியைக் காயத் தடக்கியஞ் ஞானத் தழுத்திமல
மேவிய தாலதை மாற்றிமெய்ஞ் ஞான மருவவங்க
மோவியன் கைவழி யோவியம் போலவொன் றாகியுற்றுக்
காவிய தேநிட்டை யென்றான் சிவாயமெய்ச் சற்குருவே. (௨௭)

சொக்கிட் டமனை புக்குட் டிருடிய துட்டர்வந்து
இக்குற்ற மன்னரைக் கேட்பது போற்சிவ நிந்தைசெய்து
மிக்குக் குருலிங்க சங்கம நிந்தித்து வீடிச்சிக்கு
மெக்குப் பெருத்தவர்க் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே. (௨௮)

---

நிட்டை விளக்க நிகழ்த்துபா னெட்டையுந்
சட்ட மறுப்பதற்காய்ச் சாற்றினான்—சிட்டன்
திருவா வடுதுறையான் சென்றடைந்தார்க் கெல்லா
மருளாகு மம்பலவா ணன்.

நிட்டை விளக்கம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# உபதேச வெண்பா.

---

உரைத்த கருணை யுபதேசந் தன்னை
விரித்தொரு பாவில் விளக்கக் — கருத்துமை
யொத்தாலை நீயே யுணர்ந்தா வடிதுறையென்
னத்தா நமச்சிவா யா. (௧)

முத்திக்கு மூல மொழியுங் குருக்கிறுடை
பத்திக்கு மூலம் பகருமன்பு — புத்திக்கு
மூல மரனைவர்க்கு மூலமே யென்றறிவிற்
சாலமதிப் பாரே தவர். (௨)

புற்றரவே யாடும் புகழ்மந் திரத்தார்முன்
மற்றரவுக் காட மதியுண்டோ — சற்குருவை
யொட்டு நடக்கு முயர்தவர்க்கு மொவ்வாமல்
விட்டுநடப் பார்க்கும் விதி. (௩)

நீரவு மந்திரத்தி னில்லாது நீதியல்லாப்
பாரமருக் குண்டோ பயமுறுஞ் — சீரருளைச்
சிந்தித்தார்க் கன்றோ சிவஞான சற்குருவை
வந்தித்தார்க் கன்றோ வரும். (௪)

அரியைப் பதியென் றறிவிப்பார் தம்மைப்
பிரிவித்தார்க் கன்றோ நற்பேறும் — பெரியவரன்
பாதத்தின் மோகப் படிவாமை நீத்தரியைப்
போதித்தார்க் கேதியப் போக்கு. (௫)

தேமருவு காமச் செயலிரண்டாஞ் செல்புத்தி
காமமையே நீக்கக் கருதுமுத்தி — காமமையே
யுற்றார் தமக்கே யுறுமுத்தி நீத்ததனைப்
பெற்றார்க்கு முண்டோபெயர்ப் பேறு. (௬)

ஆகால பாகமே யானு மாகத்தின்
மோகமான் பாலாக முற்றுமாற்—றேக
மொருவடிவே யானு முற்றவிகற் பத்தாற்
றிருவேட மீசனெனத் தேறு. (௭)

அங்கமே பொல்லா வவத்தமா மாவிபோய்
யங்கமே யல்ல வறிவாகு — மங்கத்தை
மாற்றினார்க் கன்றோ மதியாகு மையமுற்றுத்
தேற்றினார்க் குண்டோ செயல். (௮)

பற்றற்ற கண்ணே பசுவிளங்கு மெருளைப்
பற்றுதலா லந்தப் பசுவுமதாம் — குற்றமற்ற
முத்திக்கு முண்டோ மொழியு முடல்விகற்பம்
புத்திக்கே வாய்க்கும் பொருள். (௯)

எனதென்று மில்லத்தை யானென்றுங் காய
மனதொன்றித் தன்றோ மலத்தா—னினைவொன்றி
யங்க மெனதா யடைக்கபோ தன்றோமெய்
தங்குமரு ளாகத் தரும். (௰)

யானென்ற காய மெனதென்ற போதாலந்
தானகன்ற தன்றோ தரிக்குங்கா—லூனகன்ற
வாவியே நேய மடையு மலாதார்க்குப்
பாவிப்ப தன்றோ பயன். (௰௧)

காயமே தானாய்க் கருதும்போ தாவிமல
மாயமே யல்லாது மற்றுண்டோ—காயந்
தனதாகும் போது தகுமுயிரு மொன்றாய்
நினைவாகு மன்றோ நிறைந்து. (௰௨)

யானென்றுங் காய மெனதென்றும் பேதித்து
மூனென்றி நிற்கு முயிரன்றோ—தானொன்றி
னில்லாத போது நிறைவாக நன்னியல்பா
மில்லார் பொதுவியல்பென் றெண். (௰௩)

சாயத்தை யேற்ற தரும்பளிங்கு போலங்க
மாயத்தை யேற்ற மதியன்றோ—காயத்தை
நீத்தபோ தன்றோ நிறைவா நிகழ்சிவத்தை
யார்த்தபோ தன்றோ வவர். (௰௪)

சீவிக்குங் காயஞ் செயலற்ற போதன்றே
வாவிக்குத் தன்னியல்பே யாகுமாற்—றேவினையே
யொட்டியவர்க் கீதா முறுநிட்டை யொவ்வாமற்
றெட்டியவர்க் குண்டோ சிவம். (௧௫)

அகளத்தை மற்ற வகளத்தா மல்லாற்
சகளத்தார் சாரத் தகுமோ—வகள
நிராமயமே யாமா னிராமயற்கே யல்லாற்
பராவமுத மாகப் படா. (௧௬)

உடற்பகுதி மற்ற வுயிர்ப்பகுதிப் பேதந்
திடப்பட்டார் முத்தித் திறத்தார்—விடப்பட்ட
வங்கத்தை யோட்டி யறிவார் பதமுத்திச்
சங்கத்தா ரென்னத் தகும். (௧௭)

வாதித்த காயத்தை மாற்றும லாசிரியர்
போதித்த தெல்லாம் பொதுவியல்பாம்—பேதித்த
வங்கத்தை மாற்று மனுக்கிரக ஞானத்தின்
சங்கத்தா லுற்ற சதுர். (௧௮)

இயல்பு பொதுவா யிசையும்போ தாவி
யயலே மயலா யடையு—மியல்புநிலை
தன்னையே நோக்கிற் றடுத்தமல மத்தனையு
மன்னியமே யாக்கப் படும். (௧௯)

கேட்டலொரு நான்குங் கிடைக்கபேர்க் கேகருணை
வீட்டை யடைதல் விதேருமா—மாட்டாதார்
வீட்டை மருவ வெறுநிட்டை செய்வதங்கச்
சேட்டையென்ப தன்றோ திடம். (௨௰)

சரியை கிரியையெனத் தங்கு மிரண்டு
ஞரியதொரு யோக மொடுங்குந்—தெரிய
வருமவர்க்கே யெல்லா மதியா மதனைப்
பிரிவார்க்கு முண்டேமெய்ப் பேறு. (௨௧)

சமயம் விசேடமெனத் தங்கியதே தீக்கை
யமையுந் தொழிலோ டமையு—மிமையுமேடர்
அற்றிருப்ப தெங்ஙு னுறுந்தொழிலோ டொன்றாகப்
பற்றிநிற்ப தெங்ஙன் பகர். (௨௨)

சத்திநி பாதஞ் சதுவிதமா மாங்கதனை
யொத்த சரியாதி யொருநான்கா—முத்திநலத்
துற்றதொழி னான்கா முறுமுத்தி யோர்நான்காய்ப்
பெற்றதன்றோ தீக்கையின்மெய்ப் பேறு. (உ௩)

சமய விசேடந் தகுஞான மென்னா
வுமையொரு பாக ருரைத்த—தமையவிருந்
தெட்டுதற்கோ வீசற் கிசைந்ததொழி லோடிசைந்தங்
கொட்டுதற்கோ வொன்றை யுரை. (உ௪).

சாதித்த யோகஞ் சமய விசேடமதிற்
போதித் தடங்கப் பொருந்தியதாம்—பேதித்த
தீக்கையென்ப தின்றாந் தியானமே யோகமதா
லேற்குமெய்வி டத்துமென வெண். (உ௫)

யூகித் திதனை யுணராதா ரன்றோமெய்
யோகத்தை வேறே யுணர்வதுமெய்—யோகம்
பிரித்தறிவ தன்று பிரியாத் தொழிலிற்
றரித்தறிவ தாகத் தகும். (உ௬)

பேதித்த காயம் பிரியாம னிட்டையெனச்
சாதிப்ப தெல்லாந் தவறன்றோ—வாதித்த
காயமற்றா லாவி கருதுமரன் போற்கருணை
நேயமுற்ற தன்றோ நிலை. (உ௭)

நீதித் தரும நிறுத்துஞ் சிவாகமத்தைச்
சாதித் தாலன்றோ தகுநிட்டை—வாதித்த
வங்கத்தோ டாவி யரனெறியு மாயாத
சங்கமோ நிட்டைச் சதுர். (உ௮)

சொல்லுஞ் சிவாகமத்தின் சூழனைத்தும் பாராமல்
வெல்லும் புலனைந்தும் வெல்லாமற்—செல்லுநெறி
தன்னை வினையைத் தலைவனையுங் காணாமன்
மன்னுதலே நிட்டை வளம். (உ௯)

அறியும் பகுதி யறிவறியத் தானே
பிறியும் பகுதி பிறியும்—நெறியாகுஞ்
சன்மார்க்கத் தார்க்கே தகுஞான நூலோத
ஸன்மார்க்கத் தாகு நலம். (௩௰)

பாதகத்தைச் செற்ற பணிபலவுஞ் செய்துமலந்
சேதித்தார்க் கன்றோ திடமாகும் — நீதி
நடையே நடந்தானை நண்ணியென்று நீங்காத்
தடையே சமாதிச் சதுர். (௩௧)

தீக்கைதனைக் குற்ற செயல்பலவுஞ் செய்துமல
நீக்குதலே யன்றோ நிலையாகும் — பாக்கியமாம்
பூசையின்மேன் மோகப் புணர்ப்பல்லான் மற்றுமோ
ராசையின்மே லுண்டோ வரன். (௩௨)

பூசை தியானம் பொருந்துந் தொழிலனைத்து
நேசிந்தார்க் கன்றோ நிலையாகுந் — தேசுற்ற
வத்து விதத்தோ டடைவதெல்லா நன்மேனி
புத்தியின்மே லுற்ற பொருள். (௩௩)

கற்பிப்ப தெல்லாங் கருணைவடி வல்லாது
கற்பிப்ப தல்ல கருணைநல — மற்புதமாப்
போக்குவ தும்போக்கிப் போகாப் பொருளறிவி
லாக்குவதே நிட்டைக் கழகு. (௩௪)

சுருதிகுரு வாக்குச் சுவா னுபவ மொன்ற
மருவுவதே ஞானவழக் காகுஞ் — சுருதி
யடையாம னிட்டை யடைவதெல்லா முத்தித்
தடையாகு மென்னத் தகும். (௩௫)

அளவையொரு மூன்று மறிபொருளுங் காணி
யுளவறிவார்க் கேதளவை யோது — மளவறியு
மக்கங் கருத லடையாநல் லாகமத்தின்
யுக்கமுமின் றேமற் பழுது. (௩௬)

முந்தியதோர் செய்புண் முதனினைப்பா ரெல்லார்க்குஞ்
சந்தயமே யில்லைத் தகுநிட்டை — யிந்நூல்
வந்தித்தார்க் கன்றோ மருவுஞ் சமாதியதைச்
சந்தியார்க் கேதாகுந் தான். (௩௭)

வாக்குமனக் காய மருவா வறிவுமைய
லாக்கையுற்று நிற்பார்க் ககப்படுமோ — நீக்கமிலாக்
காயமறும் போது கருதுமரன் போலாகி
நேயமுறு மன்றே நிறைந்து. (௩௮)

பூகாது போகமெனு மோரிரண்டா மும்மலங்கள்
பாகப் படாதார்க்கும் பட்டார்க்கு—மாகமுறப்
பட்டார்க் குபாயம் பகர்நூலோ கித்தல்
விட்டார்க் கநுபோகம் வீடு. (௩௯)

முத்தியென மற்றொன்றைப் பற்றி முயல்வதெல்லாம்
புத்தியற்ற தன்றோ புகலுங்கால்—சித்தமுற்றுந்
தேயாத துன்பத் தழுவிக்குந் தேகத்தைத்
தோயா தவரே சுகர். (௪௰)

சன்மார்க்க மென்னத் தகுஞானே போதியதன்
புன்மார்க்க மெல்லாம் புறம்பாக்கி—நன்மார்க்கஞ்
சார்ந்தறிவைச் சார்ந்து தகும்பூ ரணமாகத்
தோய்ந்தவரே யன்றோ சுகர். (௪௧)

ஆகமுற்றார்க் கெல்லாம்பொய் யங்கமுற்ற மங்கையர்கள்
போகமுற்ற தல்லாற் பொருளுண்டோ—மோகந்
தணிந்தானை நோக்கித் தரும்பூசை செய்யத்
துணிந்தவரே யன்றோ சுகர். (௪௨)

செந்நெறியா னின்றுரையைச் சேர்த்தே னறிவுடைமை
நெஞ்சடைவ தாக நினைந்தருளாஞ்—செஞ்சடைசேர்
மெய்யா வுபதேச வெண்பாவே நீயாமென
ஐயா நமச்சிவா யா. (௪௩)

---

உபதேச வெண்பாநாற் பத்துமூன் றுய்யு
முபதேச மாக வுரைத்தா—னுபதேசம்
பண்ணு வடுதுறையிற் பண்ணாம் பலவாணன்
கண்ணு ரமுதாய்க் கலந்து.

இன்னம் பெறுமே யெமக்கிவ் விருசெவியு
மன்னம் பெறுமம் பலவாணன்—பொன்னு
வடுதுறைமேற் செய்த வுபதேச வெண்பாத்
தொடுதுறையைக் கேட்கையினாற் றாழ்ந்து.

உபதேச வெண்பா முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# அதிசயமாலை.

கட்டளைக்கலித்துறை.

புவிகழ லாடியும் பாம்புன்னைப் போற்றியும் போதமில்லா
யெவிகழ லாடியு மீயுன்னை யேத்திய மெண்ணுகிலாக்
குவிகழ லாடிய கண்டன்கண் டாயெனைக் காகருணை
யெழுவிகழ லாடிய கூத்தா திருத்தி யுயர்ந்தவனே. (க)

பொய்யேன் மலவலி பூண்டிட டுடைய போதனன்பு
செய்யேனின் பாதத்துக் கன்புசெய் வார்க்கென்றன் சித்தம்பற்றி
மெய்யே விதிக்கின்ற வன்பர்க்குத் துன்பம் விளைக்குந்துட்டத்
தியேற்கு நீவெளிப் பட்டதென் னேசொல் சிதம்பரனே. (உ)

செய்யேற்கு நின்பதச் சேரற்கு நின்னன்பர் சேர்ந்தவர்பான்
மெய்யேற்கு முள்ளத் துணர்வுடை யோர்கள் விருப்பதில்லா
மையேற்கும் வஞ்சத்தில் வாழ்கின்ற வாழ்வை மதித்துடனுந்
தியேற்கு நீவெளிப் பட்டதென் னேசொல் சிதம்பரனே. (௩)

பரிசித்த காயத்தை நீங்காத நெஞ்சன் படிற்றையென்றுந்
தெரிசித்த நோக்கன்சிற் றேவலை மேற்கொண்ட சித்தனிந்நாள்
வரிசைத் தவத்தின ரோடுநின் பாதம் வணங்கநெஞ்சி
லுரிசித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௪)

நெருக்கிய தீமலத் தாவியுள் ளாக நெடியநெஞ்சைச்
சுருக்கிய காம மதனொடு முக்கிய துட்டனந்தோ
தருக்கிய வின்பத் தவரோடு நின்பதஞ் சாரநெஞ்சை
யுருக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௫)

தாங்கிய நின்னருள் ளன்பா லிருக்கத் தமோமயமாய்த்
தூங்கிய தென்னெஞ்சு நின்றுள் வெறுத்திந்தத் துஞ்சலற
வாங்கியத் தானி லடக்கித் தவரொடும் வாழ்கநெஞ்சத்
தோங்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௬)

உருகிய தீமலத் தாவியுள் ளாயுற்ற காயமுமாய்ச்
சொருகிய காமத்துந் தானுட னாயுஞ் சுழலுமின்னாட்
பருகிய வின்பத் தவரொடு நின்பதம் பற்றநெஞ்ச
முருகிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே (௭)

துன்றிய தீமலந் தன்வண்ண மாகத் துலங்கியுள்ளங்
குன்றிய தாகும் விடையங்க டோறுங் குலையமலம்
வென்றிய பாதத் தவரொடு நின்பதம் வேண்டநெஞ்ச
மொன்றிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௮)

நிதித்ததெவ் வாறதெவ் வாறதென் னாவியுன் றேசதின்றாய்
விதித்ததெவ் வாறதெவ் வாறு விரும்பி விரிந்துமையல்
மதித்ததெவ் வாறதெவ் வாறது வாகு மதியதன்பா
லுதித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௯)

அற்றதென் னாவி தனுவாய் மனமதற் காயிழையாய்
நற்றவ வாக்குப் பொருளா யடியினை நண்ணுகில்லாத்
தெற்றினை மாற்றித் தவரொடுஞ் சேர்த்தென்றன் சிற்றறிவி
னுற்றதெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰)

ஆட்டிய தீமலத் தாகவத் தீமல மாகமெனக்
காட்டிய தாமெனைத் தீவினை யாவையுங் காதலிக்கப்
பூட்டிய காமதைப் போக்கி யுளத்துப் பொருந்தவரு
ளூட்டிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௧)

அன்னிய வஞ்சத்தை நெஞ்சத் தடக்கி யகத்துளின்பாய்த்
துன்னிய சற்குரு லிங்கந் தவரையுந் தொல்லிருளாய்ப்
பன்னிய தீமலந் தாளா லடக்கிப் பரிந்துனைநா
னுன்னிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௨)

கருப்பட்ட காலத்திற் புத்தியொத் தாயதற் காயமெத்தி
வரப்பட்ட காலத்திற் றந்தையொத் தாயது மன்னியங்கந்
திரப்பட்ட காலத்தின் மங்கையொத் தாயதென் சித்தநின்பா
லொருப்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௩)

தெள்ளிய நீகுரு யானுட னீமங்கை செய்தொழிலுங்
கொள்ளிய வுள்ளத் துறுதிய மாதரை யுள்குவித்து
வெள்ளுங் குருவினை யானுனை நோக்கி யிசைந்தடியை
யுள்ளிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௰௪)

பாக்கிய மாவது நின்று நினைக்கன்பு பற்றியங்கார்
போக்கிய தாமரைப் போக்காமல் யாரெனைப் போற்றியன்பங்
சாக்கிய தியானமே புகுந்தங்க வன்புனக்கா
ளாக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௧௫)

கருப்பட்ட காலத்தி னாவிபோய்த் தேறிய காயமதா
யுருப்பட்டு மங்கைதன் கொங்கையிற் பட்டுமிக் கோர்ந்தறியும்
பொருப்பட்டுப் பாலைக் குழப்பட்டு நிற்கின்ற போதநின்பா
லொருப்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௧௬)

அழித்தது நின்பதக் கன்பைப்பொற் பாதக் குடியவரைப்
பழித்தது பாவப் பயனைதும் பற்றிப் பரித்துபொய்யில்
விழித்ததென் னெஞ்ச மடியாரை வேண்டி விரும்பமல
மொழித்ததென் வாறுகொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௧௭)

காட்டிய வாறதெவ் வாறதெவ் வாறு கருத்துமன
மாட்டிய வாறதெவ் வாறதெவ் வாறிது மாடுமருட்
கூட்டிய வாறதெவ் வாறதெவ் வாறிதுங் கூடமல
மோட்டிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௧௮)

விதிக்கின்ற நன்கினை யெல்லாம் விடுத்து விலக்கைநன்றாய்
மதிக்கின்ற மாந்தர்க்கு நெஞ்சமுன் னீந்த மலத்தனருட்
பதிக்கின்ற வுள்ளத் தவரொடு நின்பதம் பற்றநெஞ்சி
லுதிக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௧௯)

உடுக்கின்ற தூசுக்கு முண்கின்ற வாறுக்கு மோங்குமுடை
மடுக்கின்ற மங்கைக்கு நெஞ்சமுன் னீந்த வலையினுக்குக்
கொடுக்கின்ற வாறினுக் கொள்ளா வென்னைநின் குளிர்பதத்தி
லொடுக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௨௰)

விழிக்கின்ற நாட்டத்தை யுள்ளமை கைற்றி வெருட்டித்தன்னே
யழிக்கின்ற மாதை யுளத்திக்க யமைத்தென் னறிவையறப்
பழிக்கின்ற தீமையுள் ளேக்கா லிரித்துன் பதத்திலென்னை
யொழிக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௨௧)

சிதைத்ததுன் பாதப் பணியினை வெம்பெனத் தின்கரும்பா
யிதைத்ததென் னங்கப் பணியையெந் நாளு மியற்றநெஞ்சை
வதைத்ததின் வாணவம் யானீய தாக மதித்ததனை
யுதைத்ததென் வாறுகொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (௨௨)

அரக்கினை யொத்தனெ தன்னாவினின் பாத மழலையொத்து
நெருக்கிய நீநிற்க யான்மலத் தோடு நிறைந்துபொய்யிற்
செருக்கிய காமத் துடனுகச் சித்தத்தைச் சேரவத்தோ
டொருக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (உ௩)

புளித்தது நின்பதத் தன்புபொய் யாகத் திளமையின்பாய்க்
களித்தது மாதர் கழைத்தொ ளினைக்கல்லுக் கண்டதென
வளித்ததென் னுள்ளத் தவலத்தை மாற்றி யடியருட
னொளித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (உ௪)

மரிப்பித் தவனலை வான்று யெனக்கு மரிப்பதனை
யரிப்பித் தவனீ மலமேற் குருடா யகமகிழத்
தெரிப்பித்த வாறற் றளிப்பையத் தீதைத் திருக்கரத்தா
லுரிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (உ௫)

துயிற்கின்ற போதும் விழிக்கின்ற போதுந் துலங்கிநெஞ்சைச்
செயிர்க்கு ளடக்கிய தில்லமன் றேவுளஞ் சேர்ந்ததெல்லாங்
கயக்கும் படிசெய்து நின்று னினைக்குங் கருணைதந்தா
யுயிர்க்கின்ப நீயல்ல தில்லைகண் டாய்தில்லை யுத்தமனே. (உ௬)

துதிப்பேனின் பாதத் தவர்போற் றுலங்கித் துதித்தவர்போன்
மதிப்பே னலேனெஞ்சின் மாயங்கண் மாய மதித்தவன்பை
பதிப்பே னலேன்மிக்க வன்பரைப் பற்றிப் பணிந்தடியி
லுதிப்பேனெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வுத்தமனே. (உ௭)

அணைக்கின்ற தாக மருளே புகுத்தி யகத்திருளைத்
துணிக்கின்ற தாகவவ் வாறதில் லாமற் றுடர்ந்திருளாற்
பிணிக்கின்ற மாதரிற் பித்துமுற் றுக்குமென் பேதைநெஞ்சை
யிணைக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடு மிறையவனே. (உ௮)

பசித்ததிவ் வங்கத்துட் பார்த்ததென் னாவி பசியடங்கப்
பொசித்ததிவ் வங்கமிவ் வங்கத்தை யானெனப் பூண்டுபொய்யில்
வசித்ததென் புந்தி யறமாற்றி நின்னருண் மன்னவிந்நா
ளிசித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (உ௯)

பூட்டிய தாகம் பொசிப்பேபொய்ப் போகமென் போதமறக்
காட்டிய தாமலங் காயமு நீயறக் காட்டுகையா
லாட்டிய தாகு மலமேயென் னாவி யருளையிந்நா
ளீட்டிய வாறென்கொல் தில்லையு ளாடு மிறையவனே. (௩௰)

மூத்தவ னீயலத் தீமலம் போனு முளைத்துமுந்தி
யார்த்தது காய்த்தும் போகத்து மாக வடக்குகையா
னீத்தன னுன்னைத் தவரொடு நின்பத நீக்கமற
விர்த்ததெவ் வாறுகொல் தில்லையு ளாடு மிறையவனே. (௯௧)

பார்த்ததெத் தன்மையத் தன்மையைப் பார்க்கப் பரிந்தருளைச்
சேர்த்ததெத் தன்மையத் தன்மையை நோக்கித் திரிமலத்தை
நீத்ததெத் தன்மையென் னோடுடல் போகமு நின்கையுற
வேற்றதெத் தன்மைசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௯௨)

கருப்பித்துக் காய மதனொடு மோடிக் கருதுமைய
னிரப்பித்துப் பித்துநின் பாதத்தை நோக்கு நெடியவென்னை
மரிப்பித்த பித்தநின் பாதத் தவரொடு மன்னவத்தீ
யெரிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடு மிறையவனே. (௯௩)

தலையிற்ற நான்முகன் றன்பாற் கடலிற் றயங்குமிக்க
வலையுற்ற மாலு மறியாத் திருப்பத மாகமுற்றுங்
கலையுற்ற நெஞ்சனப் பாதத்து ளாடக் கருதியிந்நா
ளிலைபித்த வாறென்கொல் தில்லையு ளாடு மிறையவனே. (௯௪)

பாய்ந்தது நின்ற னடியென்ற னாவியுட் பற்றின்றித்
தோய்ந்தது தீய மலத்தொடுந் தொல்லைத் துகளதற
நீந்திய வுள்ளத் தவரொடு நின்கழ னிற்கவுன்னை
யீந்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௯௫)

பிடித்ததெவ் வாறதவ் வாறு மலமுளம் பின்னமற
நடித்ததெவ் வாறதவ் வாறு நடுங்க நடிக்குமருட்
படித்ததெவ் வாறுந் தடிக்குந் தவரொடுஞ் சாரமைய
விடித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௯௬)

சாந்திய மெய்யுநின் பாதத்தை நோக்குந் தரித்தவென்பாற்
போந்திய தாகிலைப் பொய்யே திரட்டிப் பொருந்துமென்னை
மாந்திய தாகநின் பாதத் தவரொடு மன்னவென்னை
யேந்திய வாறென்கொல் தில்லையு ளாடு மிறையவனே. (௯௭)

எழுத்து விதிக்கை விதியே யளிக்குமென் னீசவம்மா
வழித்துப் பிறப்பிப்பை மாலய னோரையம் மக்கணிற்க
குழுத்தவ ரோடுநின் பாதத்தை நோக்கிக் குறுகவென்னை
யிழுத்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடு மிறையவனே. (௯௮)

ஆழ்த்தியச் சொல்லிய சங்கப் பயோதர வாரிருளா
ழாழ்த்திய நோக்குமென் ஞெக்கை யடைத்தன ருற்றவன்பாய்
வாழ்த்திய வாய்சுகப் பந்தா லடைத்தனர் மாமருளைத்
தாழ்த்திய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௩௯)

பெருக்கிய வன்மைநின் பாதத் தகற்றுமயன் பேரறிவைச
சுருக்கிய மாதர் முலைமீ தழுத்திய துட்டனிந்நாட்
கருக்கிய தீயினைக் காரா லடர்த்துனைக் காதலித்துத்
தருக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪0)

சொலிற்பித்து மாதர் துணைத்தோ ளினையவர் துங்கபங்கம்
புலிற்பித்துப் போக்கு வரவொடும் பூட்டிப் பொருந்தத்தன்பால்
வலிப்பித்த பித்த னெனைத்தான் பிடித்து மருவநின்பாற்
சலிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௧)

மங்குமிவ் வங்க மதிவா னுலகத்தை மன்னுமங்கை
கொங்கையி லின்பங் குறித்தில மாகிற் குறித்ததந்தோ
பொங்கிய தீய நரகே புகச்செயும் பொய்யனின்றுட்
டங்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௨)

நடையட்டள் தாய்மனந் தந்தையட் டான்மங்கை நாட்டநின்பாற்
றொடையட்டள் மக்கள் காமே துடைத்தனர் சுற்றமெம்வாய்க்
கொடையட் டனரிவ ரெல்லாங் குலையக் குறித்தடியேன்
றடைப்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௩)

விதிபட்ட துன்கை யுகிரின்முற் சூலத்தின் விண்டுவங்கம்
பதிபட்ட காமன் விழிபட்ட பாடு படுத்தலின்றே
மதிபட்ட நீயென் னுளத்தே யிருக்க மதிமலத்திற்
சதிபட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௪)

கவிர்பட்ட செப்புப் பயோதரக் கண்ணென்கண் கன்மனம்போ
யவிர்பட்ட வாய்கணிற் கால்க ளமைத்தங் களவதில்லாக்
குவிபட்ட தீப்பவம் யான்வெறுத் துன்னைக் குறுகமங்கை
தவிர்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௫)

ஆவிய தல்லவஞ் ஞானமெஞ் ஞான்று மறிவதெனக்
கூவிய தாமறை யானற வானந்தங் கூட்டியநீ
மேவியெந் நாளும் விடாதுடற் சிற்றின்பம் வெஃகியதைத்
தாவிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௬)

வரிப்பித்து மக்கள் மனையொடு செல்வம் வார்தொழிய
விரப்பித்துப் பித்தையென் னெஞ்சிலெந் நாளு நெடியவன்மைப்
பரப்பித்தி லேனையும் பாதத்தை நோக்கிப் பணியநின்பாற்
றரிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௭)

நாவித்துப் பாவ நவிற்றி னவையுறு நாடியொன் றும்
பாவித்த துள்ள மிதத்தோ டகிதப் பயித்தியமே
மேவித்துத் தீவினை வேருக்கி யுன்னை விரும்பவென்பாற்
றூவித்த வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௮)

புழுவிய தாயும் புகுந்தன ளென்றன் பொன்னடியை
வழுவிய தாவின்ன மன்னநின் பாதத்தை மன்னவின்றி
நழுவிய தாமென்னை நன்மா மலரடி நண்ணவிந்நாட்
டழுவிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௯)

நெறித்தனள் மங்கைதன் னெற்றிப் புருவத்தை நீசிவத்தைக்
குறித்தனை யென்னைப் பற்கடித் தாண்மங்கை கூழைகையாற்
பறித்தன டாயரிப் பாசப் பகைகள் பதைக்கக்கண்ணாற்
றறித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௫௰)

இடைபட்ட மாதர் தனக்கிரி மீதி லெடுத்துக்கண்ணா
லுடைபட் டிடவுருட் டிப்பின்னு மேலு முயர்த்தித்தன்பப்
படைபட்ட யானுன்றன் பாதத் தவமொடும் பற்றிநின்பாற்
றடைபட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௫௧)

முளைத்ததென் னுளி மலைத்தோ டடங்கி முழுதுமடக்காய்க்
கிளைத்தது வாருங் காரணங்க ளாகக் கெழுமிப்பொய்யை
விளைத்தது வாகுமிக் கோடொடுங் கூடி விரும்பநின்பால்
வளைத்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௨)

தொழுத்திய கல்லைச் சுகமுனை நோக்கித் துதிக்குமங்கைக்
குழுத்திய துன்னைக் குறுகாக் கொடுந்தொழிற் கூட்டிநெஞ்சை
யழுத்திய தீமை யகற்றிநின் பாத மடைந்தடியேன்
வழுத்திய வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௩)

ஊழ்வித் திதாகித மங்குரங் காம முளைத்துமுளை
சூழ்வித்து வஞ்சிப் பயோதரக் கொம்பதைச் சுற்றிவிடாக்
காழ்வித்து நின்பதக் கொம்பிற் படர்ந்துமெய் காய்க்கவென்னை
வாழ்வித்த வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௪)

உரிப்பித்த வாபித்தை யுள்ளொளி யோடொளி யெக்கநெஞ்சிற்
றெரிப்பித்த வாவினை யாவையுந் தீரத் திருவிழியா
லெரிப்பித்த வாதிருப் பாதத்து ளென்னை யிருத்தியின்பாய்
மரிப்பித்த வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௫)

உருத்திய தென்னைவென் னுள்ளத்தி னோர்ந்ததற் கோருடலை
யிருத்திய வாறு மிழுந்தனிந் நாளிதை யின்பமெனப்
பொருத்திய தீமலப் பொய்யையெற் காகநின் பொன்னடியால்
வருத்திய வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௬)

குணங்கிய தன்றுநின் பாதத்து நோக்குக் குறித்தவுள்ளம்
பிணங்கிய தீமலப் பெற்றிய தாமதைப் பேதமற
விணங்கிய தானுனை யானேத்து கில்லே னிதைப்பிரிந்து
வணங்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௭)

தொழுவேனின் பாதப் பரிசைமிக் கோரெனச் சூழ்ந்தடியி
லழுவே னவரென வுள்ளமவ் வாறன் றகமகிழ்ந்து
விழுவேன் செகத்துனின் பாதத்தை வேண்ட விருப்பமந்தோ
வழுவேயெவ் வாறுந் தில்லையு ளாடிய மன்னவனே. (௫௮)

புளிப்பட்ட தாம்பிரம் போலுமென் னுவிநின் போதமுற்று
ருளிற்பட்ட கால மறக்களிம் பென்னவென் னுள்ளமைய
லொளிப்பட்ட தாகுமிக் கோரொடு நின்னடி யுன்னவிந்நாள்
வெளிப்பட்ட வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௫௯)

துளைத்தது காமன் பகழியென் னெஞ்சைச் சுடுநெருப்பாய்க்
கிளைத்தது வான்மதி தீர்க்கு மருந்தெனக் கேடிலருண்
முளைத்தது மாதின் முயக்க மருந்தென முற்றிப்பொய்யா
விளைத்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௦)

தெரிவித்த நின்னருட் பாதக் கதிரென்றன் சித்தம்புக்குப்
பிரிவித் தகவிருள் யானெய தாக்கிப் பிரிவிலுடல்
வருவித்த தன்பணிக் காய்வினை நிற்கென மன்னிநின்பால்
விரிவித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௧)

இரவிய தாமரு ளாணவந் தீதிரு ளேயுமுடல்
மருவிய நீதந்த தாயுமுன் பாத மறைத்திருளாய்
பரவிய தாமலம் வேறது வாகப் பரிந்தென்னெஞ்சில்
விரவிய வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௬௨)

ஒடுக்குமென் றுய்பரி வாற்றந்தை வஞ்சத் துலகியல்பா
யடுக்குமின் ஞர்புல னைந்தா லடக்க மிகவுருவாற்
றடுக்கும் புதல்வரிப் பாசப் பகையறச் சார்ந்தருளில்
விடுக்குமெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (சுஙு)

துலக்கு மறிவினைக் காயம் வினையுமத் தூய்மையதாய்க்
கலக்கு மலங்கல வாவிடின் காமன் கணைக்குநெஞ்ச
மிலக்கு மலக்கதிர்ப் பாதத்தை நாட்டி யிருளகத்தில்
விலக்குமெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (சுச)

சுடுகின்ற தோர்புறங் காமமற் றோர்புறஞ் சூழ்பசித்தீ
யடுகின்ற தோர்புற நோயொரு பாலி லைமர்கையிறுற்
றொடுகின்ற வாறெங்ங னீயென யாவையுந் துன்பமென
விடுகின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (சுரு)

நடக்கின்ற தீது நடவாத தீதென நாட்டியருள்
கொடுக்கின்ற வாரியன் றன்பா லிருந்துங் கொடுவினையா
லடுக்கின்ற மாதர்க் கவாவுமென் னெஞ்சறி யாமையற
விடுக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (சுசு)

தொடுவித்து மெய்ம்மையம் புலனறி யாமை துடைத்தற்கருட்
குடிவைத் திடவன்பு நின்பா லறமலங் கொங்கைமின்னைப்
படிவைத்துத் தன்வச மாக்கும் புலனெறி பற்றவதை
விடுவித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (சுஎ)

உதித்தனை நெஞ்சத்து ணீயென்ற ஞவியுன் றேடுறைவாய்
மதித்தன வந்தவை நிற்காய் மலத்தொடு வந்ததெல்லாஞ்
சிதைத்தன தீயர் பிராரத்த தேகமுஞ் சீவனுக்காய்
விதித்ததெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (சுஅ)

இரும்பிய லாகுமென் னெஞ்சம்பொய் மாதர்க் கிசைந்தருளிற்
றிரும்பிய தாலென்ன தீவினை யோமலந் தீத்தனுவைக்
கரும்பிய லாக்கிநின் னன்பரை வேம்பெனக் காட்டுமிதால்
விரும்பிய வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (சுகூ)

இலையுற்ற வாணவ நீபே ரறிவு மெழிற்பகழி
முலையுற்ற வாதி முடித்தாம மாகு முழுமதியாங்
கலையுற்ற துன்சடை காமன் கருதிக் கணைதொடுப்பான்
விலையுற்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (எ0)

நினையுற் றிடுமென் னறிவு மனம்பொறி நின்பணியாந்
தனையுற் றிடுவது யானறி யாமையைச் சார்தலின்றாற்
பினையுற் றிடுவதென் றேகப் பிராரத்தப் பெற்றியிரு
வினையுற் றிடுவதென் றில்லையு ளாடிய வித்தகனே. (௭௧)

ஆவிநின் பாலன்பென் னங்கமு நின்பணி யங்கமொன்றைத்
தாவில துன்செயல் யானே யெனக்கிலைத் தத்துவத்தா
லாவதொன் றற்கிலை யாமாலென் பால்விட் டகன்றவினை
மேவிய வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௭௨)

கொளையுற்ற தாமலம் யானறி யாமைக் கொடுங்கருவி
யினையுற்ற வாறெங்ஙன் மாறு வுடலம் பிறக்கவினை
தனையுற்ற வாறெங்ங னின்று டரிக்கத் தரிக்குஞ்சத்தி
வினையுற்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௭௩)

முளைக்கின்ற காலு முளைக்குமுற் காலும்பொய் மோகநெஞ்சிற்
கிளைக்கின்ற தாலதற் கேற்ற தனுவினைக் கிஞ்சனுற
வளைக்கின்ற வாக்கினை நின்செய னின்செயல் மற்றுமென
விளைக்கின்ற வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௭௪)

யாவையுந ீங்கரும்பாய்
வருவித்துத் தீய பிறப்பினை யாக்கு மலமதற
விரிவித்த நின்செயல் பொய்யாத தீதையு மையணியாய்
விரிவித்த வாறென்கொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௭௫)

உதிக்குமுற காலும்மக் காலதது முளளதைை யுறறுமலனு
சதிக்கும் பிறவிக்குத் தானுட னாகவச் சத்தியற
மதிக்குநின் சத்தி மருளாய் மயக்கமு மன்னநியாய்
விதிப்பதெவ் வாறுசொல் தில்லையு ளாடிய வித்தகனே. (௭௬)

வெண்பா.

அதிசய மாலை யருளெழுபா னாறு
மதிசெய் மலமாற்ற வைத்தான்—துதிசெய்வோர்
கூடா வடுதுறையிற் கூடம் பலவாணன்
வீடாயென் னெஞ்சில் விளைந்து.

கண்ணாகுங் கண்ணா முயிர்க்கா வடுதுறையிற்
றண்ணாரு மம்பலவா ணன்றகுதி—பெண்ணனி
யதிசய மாலை யறைந்ததைத் தேர்ந்து
கதிசெயுமா லாற்கண்டு கண்டு.

அதிசய மாலை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# நமச்சிவாய மாலை.

சீரேற்று நின்கருணைச் சித்தமே புக்குமலப்
போரேற்றி நிற்கப் பொருந்திடுவ தென்னாளோ
வாரேற்றுங் கொங்கை மகளி ரறக்கருணைத்
தாரேற்று மாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧)

வன்னமே நின்னருளை மன்னின்மல வன்னமெலாம்
பின்னமே யாக்குமருட் பேறளிப்ப தென்னாளோ
வன்னமே யில்லா வடிவே வருங்கருணைச்
சொன்னமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨)

ஊழே கருணைக் கொருப்பட்டு மூழென் னுமலக்
காழே யுரைக்குமிந்தக் கற்பகல்வ தென்னாளோ
பாழே யகவிற் பயிர்பா ழெழுஞர்கருணைத்
தோழேதென் றுவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩)

வித்தவா தீப்பிறப்பில் விட்டதாற் சங்கமலப்
பித்தவா மாற்றியருட் பேறளிப்ப தென்னாளோ
தொத்தவா வுற்றவருட் டொண்டர்க்கு நன்மேனி
யொத்தவா வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪)

இற்றகர்த்தார்க் காசை யெழலா லருளின்மலக்
கற்றகர்த்து நின்னருளைக் காட்டுவதிங் கென்னாளோ
சொற்றகர்த்து நின்னருளிற் றோய்வா ருளத்தமுதா
யுற்றகற்று வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫)

கற்றகலா திற்சுகத்தைக் காதலிக்கு மென்னெஞ்சப்
பற்றகற்றி நின்னருளைப் பாலிப்ப தென்னாளோ
சற்றகலா துற்றவர்க்குச் சர்க்கரையே நற்றவரை
யுற்றகலா வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬)

விதித்திடுமா விருவினைக்கே வெய்யமலந் தீயேனைச்
சதித்திடுமா னின்னருளைச் சார்ந்திடுவ தெந்நாளோ
துதித்திடுமா ஹற்றவின்பத் தொண்டர்க்கு நின்னருளே
யுதித்திடுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எ)

புண்டகைய நற்றுகிலைப் பூட்டியிருண் மாதருளக்
கண்டகையு மாயக் கலியகல்வ தெந்நாளோ
தண்டகையுந் தீத்தரித்த கையா தவர்க்கமுதா
மொண்டகையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே (அ)

கற்றவனே ருற்றிலமே காதலிக்கு மென்னெஞ்சு
நற்றவனே ருற்றருளை நாடுவதிங் கெந்நாளோ
சற்றவநேர் தில்லாத் தவர்க்கமுத மாய்நிறைந்தங்
குற்றவனே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௯)

சொற்பவமே மாதரின்பு சொல்லிறந்தன் ஞர்களின்ப
மற்பகலுந் துய்ப்பேற்குன் னருடருவ தெந்நாளோ
விற்பவமே மாயவரு ளேய்வா ருளத்தமுதா
முற்பவமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௰)

உண்பொருளே நோக்கி யுலாவுமன மூன்றொழித்தென்
கண்பொருளே நோக்கவருட் கண்டருவ தெந்நாளோ
விண்பொருளே மிக்கோர் விழுங்குமமு தேகருணை
யொண்பொருளே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௧)

பொய்க்கயலா நின்கருணை பூண்பதற்குப் பொய்மாதென்
மெய்க்கயலாய் நிற்க விதித்திடுவ தெந்நாளோ
விக்கயலா வேட னெழிலெரித்த வாநோக்குக்
குக்கயலே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௨)

திக்கயலே நீயாமாற் சேரவுனைத் தீச்சொலென்றன்
வாய்க்கயலே யாகவுனை வைத்திடுவ தெந்நாளோ
நோய்க்கயலே யுற்றதவ நுண்ணியரோ டொத்தவரு
ளோய்க்கயலே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௩)

செகத்தயலே நீயாமாற் சேர்ந்தவுடற் போகமென்ற
னகத்தயலே யாக வளித்திடுவ தெந்நாளோ
பகுத்தயலே தானகைப் பார்க்குமான் மாக்கள்
சுகத்தயலே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௧௪)

என்னுக் கயலே யெழுமா ணிதிப்பொருளென்
கண்ணுக் கயலேயாய்க் காட்டுவதிங் கெந்நாளோ
விண்ணுக் கயலே விடுஞ்சுகத்தை வேண்டுமக்க
ளுண்ணுக் கயலேதண் டுறைநமச்சி வாயனே. (௧௫)

மோகத் தயலே முளைப்பாய்நீ மாதரின்பெ
ருகத் தயலா யளித்திடுவ தெந்நாளோ
சோகித் தயலே சுகத்திலிரு மாக்குமக்க
ளுகத் தயலேதண் டுறைநமச்சி வாயனே. (௧௬)

போகத் தயலே யெனுமால்நீ பொய்ம்மலமென்
பாகத்தய லேயவருட் பண்பளிப்ப தெந்நாளோ
சோகத் தயலே சுகத்திலிரு மாக்குமக்க
ளுகத் தயலேதண் டுறைநமச்சி வாயனே. (௧௭)

இன்பத் தயலே யெழுமானீ நிமலமா
ளின்பத் தயலாக நீக்குவிப்ப தெந்நாளோ
வன்பற் றயலார்க் கருத்தியிரு மாக்குமக்க
டுன்பத் தயலேதண் டுறைநமச்சி வாயனே. (௧௮)

மாசுக் கயலே மதிப்பானீ நிமலத்தின்
றேசுக் கயலாரைச் சேர்ந்திடுவ தெந்நாளோ
வாசைக் கயலாருக் காவிமன மீயுமக்க
ளோசைக் கயலேதண் டுறைநமச்சி வாயனே. (௧௯)

திண்மைக் கயலர்முன் றேசெனுமாற் றீயமலப்
பெண்மைக் கயலாரைப் பெற்றிடுவ தெந்நாளோ
வண்மைக் கயலாக்கு மாதரின்பஞ் சேருமக்க
ளுண்மைக் கயலேதண் டுறைநமச்சி வாயனே. (௨௦)

கள்ளத் தயலாங் கருணையெனு மான்மலத்தின்
பள்ளத் தயலாரைப் பற்றிடுவ தெந்நாளோ
வெள்ளத்தய லாக்குமருண் மேவுமங்கை யின்புறுவா
ருள்ளத் தயலேதண் டுறைநமச்சி வாயனே. (௨௧)

கோணுக் கயலாய்க் குறிப்பானீ தீயமல
நாணுக் கயலாரை நண்ணுவிப்ப தெந்நாளோ
மாணுக் கயலாக்கு மாதரின்பஞ் சேருமக்க
ளுணுக் கயலேதண் டுறைநமச்சி வாயனே. (௨௨)

அன்னவாய்செய்யக் கருவிகொடுத் தொக்கநின்று
மின்னல்வாய்த் தீநிரயத் தேத்துவிப்ப தெவ்வாறோ
மன்னுவாய் தீதகல மாதவர்க்கு மற்றுமன்பா
யுன்னுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௩)

எள்ளுவாய் தீதை யுணவேயுங் கருவிதந்து
தள்ளுவாய் நீநரகைத் தந்திடுவ தெவ்வாறோ
கொள்ளுவாய் முத்தர்தனுக் கோவிலுள நீயாக
வுள்ளுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௪)

மணந்தாளல் லாரை மருவுகைக் கங்கங்கம்
புணர்ந்தாய் நரகதனிற் போடுவதிங் கெவ்வாறோ
கொணர்ந்தாய்நன் மேனி கொடியேன் கொடுமையற
வுணர்ந்தாய்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௫)

கள்ளுவிற் பார்க்கேற்ற கருவியளித் துண்ணின்றுங்
கொள்ளுவிப்பாய் நீநரகிற் கூட்டுவதிங் கெவ்வாறோ
தள்ளுவிப்பாய் தீதைத் தவர்க்கமுத மாயுளத்தங்
குள்ளுவிப்பா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௬)

குந்தமே யீந்துங் கொலைக்குளருங் கூட்டியென்னு
லந்தமே யாக்கிநர காக்குவதிங் கெவ்வாறோ
தந்தமே யிச்சையறச் சார்ந்ததவத் தோருளத்துட்
டொந்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௭)

கொல்லுவாய்க் கெல்லாங் கொலைக்கருவி யீந்துளரு
நல்குவாய் நீநரகி னண்ணுவிப்ப தெவ்வாறோ
புல்குவா ருள்ளம் புகுவாய்பொய் மக்களுளத்
தொல்குவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௮)

கோனே தினவூன் கொலவுயிரைக் கூட்டியுநீ
தானே நிரயமெற்குத் தந்திடுவ தெவ்வாறோ
தேனே புலான்மறுத்த செல்வ ருளம்புகுந்த
ஆனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௨௯)

வலைவாய்ப் படவகையுங் காட்டி யுயிர்மாய்த்துத்
தலைவாய் நரகமெற்குத் தந்திடுவ தெவ்வாறோ
மலைவா யிலாதவருண் மன்னுவா ருள்ளத்
துலைவாதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௦)

களிப்பாய்க் குருநிந்தை கத்துதற்குச் சிந்தை
யளிப்பாய் நரகதற்கு மாக்குவதிங் கெவ்வாறோ
துளிப்பார்கண் ணீர்வாய் துதிப்பாரைத் தாளி
லொளிப்பாய்தென் றாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩க)

இடிப்பார்க்குக் கோயிலுடை லீந்தும் பிரேரித்துங்
கொடுப்பாய் நரகக் குழிவைப்ப தெவ்வாறோ
வெடுப்பாய்த் திருக்கோயி லேத்துவார் நீயாய்த்
தொடுப்பாய்தென் றாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩உ)

ஈட்டுவாய்க் கெல்லா மியற்று மலவினைக்காய்க்
கூட்டுவாய் நின்செயலாய்க் கூறிடுவ தெத்தாலோ
காட்டுவாய் தீதகலக் காண்பார்க்கு நின்னருளே
யூட்டுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௩)

கூட்டுவாய் நீதினிது கூடுமிருண் மாணைக்கி
யாட்டுவாய் நின்செயலா யாக்குவதிங் கெத்தாலோ
கேட்டுவாய்த் தீநெஞ்சைக் கிட்டாம னின்னைக்கா
லோட்டுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩ச)

ஆக்குவாய் நீவினைக்கீ டான்மலத்தின் பின்னாகத்
தாக்குவாய் நின்செயலாய்ச் சாற்றிடுவ தெத்தாலோ
நீக்குவா யைம்புலனு நீங்காத வன்பரன்பா
யூக்குவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩ரு)

ஆட்டுவிப்பாய் நீவினைக்கீ டவ்வினையு நீதானே
யீட்டுவிப்பா யென்ன விசைத்திடுவ தெத்தாலோ
காட்டுவிப்பாய் பொய்யகலக் காண்பார்க்கு நின்னையின்பா
யூட்டுவிப்பா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩சு)

பூட்டுவாய் நீகருவி பூண்பார்க்குப் பொய்வினையைக்
கூட்டுவாய் நின்செயலாய்க் கூறிடுவ தெத்தாலோ
வீட்டுவாய்த் தீதுக் கிருநிரயத் தாக்கிமல
மோட்டுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩எ)

மதித்திடுமா லல்வினையு மனப்படலான் மலத்தைமுன்னாய்
விதித்திடலாந் தீயாய் விளம்பிடுவ தெத்தாலோ
சதித்திடலா வுளத்தைமலந் தருநிரயத் தாக்கியரு
ளுதித்திடுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩அ)

பொய்விப்பா ரங்கத்திற் பூண்டபணி யான்மருளச்
செய்விப்பார் நின்செயலாய்ச் சேர்த்திடுவ தெத்தாலோ
மெய்விப்பா யுன்னை விரும்பவரு ளாரமுதத்
துய்விப்பா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௩௯)

விதித்திடவெப் பிறப்பினுரு மேவுமல மிக்கென்னைச்
சதித்திடவு நின்செயலாய்ச் சாற்றிடுவ தெத்தாலோ
மதித்திடநி னன்பரன்பை மன்னியருண் மெய்ஞ்ஞா
புதித்திடுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௰)

தற்பகையைக் காய்ந்த தவர்க்குவிட மானமல
விற்பகையை நன்றெனன் றிசைத்திடுவ தெத்தாலோ
கற்பகமா மாதைக் கடிந்ததவத் தோருளத்து
ளுற்பவமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௧)

துன்றுவா யெல்லாந் துலங்கக் கருவிதந்து
நின்றதா வீட்டுவித்த னீயென்ப தெத்தாலோ
பொன்றுங்காற் றீநரகிற் பூட்டுமல மோட்டவுள
மொன்றுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௨)

வானே ருடலுளமும் வாங்கவுநீ தியேற்குத்
தானே பிராரத்தஞ் சாற்றிடுவ தெத்தாலோ
தேனே யுயிர்க்குயிரே சேர்ந்ததவத் தோர்தரித்த
வூனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௩)

காட்டுவாய் நீவினையைக் காதலித்து நிற்காகக்
கூட்டுவே னெற்கென்னக் கூறிடுவ தெத்தாலோ
யூட்டுவாய் நற்றவர்க ளூட்டவதை யுண்டுமல
மோட்டுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௪)

புல்குவா யெல்லாம் புணருவா யென்னையற
நல்குவா யவ்வினைக்கு நானென்ப தெத்தாலோ
செல்குவாய்க் குன்னருளைச் சேராதா ருள்ளமுற
வொல்குவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௫)

வான்றீ செயினுமுள மன்னிமல மாற்றியருட்
டேன்றீ னிடவும்வினை சேருமென்ப தெத்தாலோ
மான்றீ யெனவிலத்தை மாற்றுவார் நெஞ்சமுதாய்த்
தோன்றீதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௬)

களித்திடுமா லிருவினையைக் கைக்கொடுக்க வாங்கிநிற்கை
யளித்திடுமா லெற்கென் றறைந்திடுவ தெத்தாலோ
குளித்திடுமா வின்பதத்திற் கூடியயா னீயா
யொளித்திடுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪எ)

கண்கதிரே நோக்கவிருள் காணுமென் றுவியருட்
டண்கதிரே நோக்கில்வினை தாக்குமென்ப தெத்தாலோ
விண்கதிரே தீதை விளக்குமிரு ளோட்டுமரு
ளொண்கதிரே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪அ)

யானேநீ யாலென்றன் னங்கமுநின் னங்கமதாற்
கோனே வினையெனக்குக் கூடுமென்ப தெத்தாலோ
தீமை விரும்பிச் செயற்படுவா ரங்கமுறு
தோனேதென் றுவடுதண் டுறைநமச்சி வாயனே. (௪௯)

காழே மலமகலக் காட்டி யுணைக்கருணை
வாழ்வே யளித்தும்வினை வைப்பதென்ப தெத்தாலோ
ஊழே யகலவரு ளூணுக்கி யூட்டுமருட்
டோழேதென் றுவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௦)

ஆவியுநீ யென்றன்னங் கமுநின் னங்கம்வினை
தாவியுமேற் சாருமெனச் சாற்றிடுவ தெத்தாலோ
சாவியமே ஞெக்குந் தவருளத்தை நீங்காத
வோவியமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௧)

ஊனை யுனக்கூட்டி யுண்டு முனக்குழைத்துங்
கோனைய யுப் பார்க்குவினை கூடுமென்ப தெத்தாலோ
வீனை தொழில்புரியா மிக்கவர்க ளுற்றவருட்
டேனேதென் றுவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௨)

புண்ணியமேற் பாவங்கெட் போக்குமற நின்பாவிற்
பண்ணியதே யவ்வினையைப் பாற்றின்முத்தற் கேனுமோ
வெண்ணியுமே நின்னடியார்க் கிவார்கள் மும்மலமு
முண்ணையுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே (௫௩)

நீக்கிமா னெஞ்ச நினைவை நினக்காக
வாக்குமா னூமெழற் கணையுமென்ப தென்னுமோ
போக்குமால் போக்கியுன்றன் பொன்னடியா னாமகற்றி
யூக்குமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௪)

ஓட்டமா லைம்புலனை யுற்றவினை மாற்றிநெஞ்ச
மீட்டுமா நிற்கா யிதாகிதமேற் கென்றுமோ
யாட்டுமா றுற்றவினை யற்றார்க் குணையமுதா
யூட்டுமா லாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௫)

அங்கத்தா னுற்ற வருநோ யனையனுமுன்
சங்கத்தான் மாற்றுமெற்கூழ் சாருமென்ப தென்றுமோ
மங்கத்தா னூழை மருவுமுயிர் தானுனை
துங்கத்தா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௬)

சித்தமுந் தீய கரணமுஞ் சித்திலே
யொத்ததே யென்னமுத்தற் கூழென்ப தென்றுமோ
பித்தமே மாற்றிப் பெறாந்செயனு நின்செயலா
யொத்ததே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௭)

கன்னமே வான்பொருளிற் காத னுனக்காக
வுன்னுமே நெஞ்ச முறுவினையெற் கென்றுமோ
வன்னமே தீக்கை மனுவான் மறைந்தருளாய்த்
துன்னுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௮)

பரியுமே நற்பொருளைப் பற்றி யுனக்காகத்
தெரியுமே நெஞ்சம்பொய்த் தீவினையெற் கென்றுமோ
திரியுமே யாவிதனுச் சேர்ந்தபொரு ளோடன்பாய்ச்
சொரியுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௫௯)

தேட்டமே நீயாய்த் திரண்டபொரு ளிற்காக
வீட்டுமேற் கன்க ளிதாகிதமேற் கென்றுமோ
நாட்டமே யெள்ளளவு நாடினுனை மும்மலமு
மோட்டமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௰)

நாவேயு மின்பமதை நண்ணிமன முன்றுவுக்
காவே கருத லருவினையெற் கென்றுமோ
சாவே விடுத்ததவர் தற்பரத்தோ டுற்றபரந்
தேவேதென் றாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௧)

கொந்தமே நற்பொருளைக் கேடினுனைக் காகமன
முந்துமே யாகி லுறுவினையெற் கென்றுமோ
பந்தமே யற்றார் பரத்தோ டுறுபரமாந்
தொந்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௬௨)

வாக்குமே லூற்று வரும்பொருளை நின்னடியி
லாக்குமே நெஞ்ச மருவினையெற் கென்றுமோ
நீக்குமேற் றீயமல நின்றதெலா நீயாக
வாக்குமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (சுங)

பாதமே லூற்ற பணிபலவு நின்னடிக்கென்
போதமே யேற்றப் புகின்வினையெற் கென்றுமோ
சேதமேற் றீயமலஞ் சேர்ந்தவெலா நீயாமென்
றோதுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (சுச)

பாணிமே லூற்ற பணிபலவு நின்னடிக்காய்ப்
பூணுமே நெஞ்சம் பொதுவினையெற் கென்றுமோ
நாணுமேற் றீயமல நன்குடனு நீயாக
வூணுமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (சுரு)

அங்கமே லூற்ற வவலவினை போக்கிநெஞ்சுன்
சங்கமே யாக்கில்வினை தாக்குமென்ப தென்றுமோ
மங்குமேற் றீயமல மற்றவெல்லா நீயாக்குந்
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (சுசு)

ஆகமே லூற்றங் கணைவாரை யென்னெஞ்சுன்
பாகமே யாகப் படுத்தின்வினை யென்றுமோ
மோகமே யில்லாத முத்தர்தமை நீயாக்கும்
யோகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (சுஎ)

போகமே நோக்கிப் புணர்வாரை யுன்னடிக்காம்
பாகமே யாகப் படுத்துவித்தா லாகாதோ
வேகமே யாக விசைவாரை நீயாக்கும்
யோகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (சுஅ)

காதலே யுற்றுக் கருதுவார் தம்மையருட்
பாதமே நோக்குதற்குப் பண்ணுவித்தா லாகாதோ
பேதமே யற்றாரைப் பின்னமறத் தானுக்கு
மோதமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (சுகூ)

மயலே மிகநோக்கி மன்னுவார் நின்னடிக்காஞ்
செயலே விரும்புதற்குச் செய்வித்தா லாகாதோ
வியலே விரும்பி யிசையாதார் தங்கட்
கயலேதென் றுவடுதண் டுறைநமச்சி வாயனே. (எம)

வாக்குமேற் காயமன மற்றதெல்லா முன்னடியை
நோக்குமே யோர்கருவி நோயாக நோக்கிமிக
நீக்கமே செல்லா நிறைவாகு நீயாக
வாக்குமே யாவதுதண் டுறைநமச்சி வாயனே. (௭௧)

இருபாற்கு மோர்கருவி யேயுமாற் றீதை
மருவார்க்கு நன்கருளே மன்னுவித்து மாலை
பொருவார்க்குப் பொய்யே யுறுவித்துத் தீதி
லுருவாக்கு மாவதுதண் டுறைநமச்சி வாயனே. (௭௨)

கன்டத்தா லஞ்ஞானங் காட்டலா நின்கருணைத்
தன்மத்தா னீயாகச் சாற்றியிட லாகாதோ
வன்மத்தாற் செய்கை வருவிப்பா ரீடழித்த
வுன்மத்தா வாவதுதண் டுறைநமச்சி வாயனே. (௭௩)

சாதியே யுற்றுரைச் சாதிசொல்ல லாங்கருணை
யாதியே யாகிலப்பே ராக்கியிட லாகாதோ
யோதியே சாதி யொளிப்பாரோ டொட்டாநற்
சோதியே யாவதுதண் டுறைநமச்சி வாயனே. (௭௪)

பாயும் பரிபாயப் பாகனென லாங்கருணை
யேயு முயிர்தனை யீசனென லாகாதோ
சாயு மலைமதறச் சார்ந்தவுயிர் மேற்கருணை
தோயுந்தென் னாவதுதண் டுறைநமச்சி வாயனே. (௭௫)

அங்கமேற் செல்லவுற்ற வாவியென லாங்கருணைச்
சங்கமே சொலினீயாச் சாற்றியிட லாகாதோ
பங்கமேற் றீயமலம் பற்றுமுட னீயாக்குந்
துங்கமே யாவதுதண் டுறைநமச்சி வாயனே. (௭௬)

ஆகமே யுற்றுரை யாகமென லாங்கருணை
யேகமே யாகிலரு ளீசனென லாகாதோ
பாகமே யுற்றுரைப் பற்றியருட் டாளுக்கும்
யோகமே யாவதுதண் டுறைநமச்சி வாயனே. (௭௭)

பொன்னோ டுறுஞ்சீலை பொன்னதென லாங்கருணை
தன்னொடுறு வாரையருட் டானெனலு மாகாதோ
வென்னோ டுடல்வினையு மேற்றுமல மாற்றுமருட்
சொன்னதென் னாவதுதண் டுறைநமச்சி வாயனே. (௭௮)

லிங்கமே யுற்றமனை லிங்கமென லாங்கருணைச்
சங்கமே லாவியருட் டானென்னு மாகாதோ
பங்கமேற் றீயமலம் பற்றுமுயிர் நீயான
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (எகூ)

மந்திரமே சேரின் மனுவெனவா மெய்ஞ்ஞானத்
தந்திரமே சேரினருட் டானென்னு மாகாதோ
வந்தரமே நின்பதமென் றுதரிப்பா ரங்கமுறச்
சுந்தரமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அ௰)

சாதியே மாறுஞ் சமயத்தென் னாஞான
நீதியே யாகிலருண் ணீதியென லாகாதோ
வாதியே யாவியறி வப்பரத்தோ டொற்றுமருட்
சோதியே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அக)

நீரே கடமருவி னீரதென லாங்கருணைச்
சீரே யுயிர்கருணைச் சித்தென்னு மாகாதோ
பாரே றிருவினையைப் பற்றிமல வேரறுத்த
சூரேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அஉ)

முட்டேறு வாரையந்த முட்டதென லாங்கருணை
தொட்டேறு வாரையருட் சோதியென லாகாதோ
விட்டேறு வாருடலை மேவியருட் டாணுக்குஞ்
சுட்டேற யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அங)

கெடுக்கும் வினையுருவாய்க் கெடுக்குமென லாமுன்னைக்
கொடுக்குங் கருணையுருக் கொண்டதென லாகாதோ
தடுக்கு மலமகறத் தத்துவமே நிற்கா
யொடுக்குந்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அச)

பாதகமே செய்தாரைப் பாவியென லாங்கருணைப்
போதகமே செய்யிலருட் பொற்பென்னு மாகாதோ
சாதகமே நீயாந் தவத்தோர் தனுவையுறத்
தோதகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அரு)

பித்தமே யுற்றாரைப் பித்ததென லாங்கருணைச்
சித்தமே யாகினீயாய்ச் செப்பியிட லாகாதோ
வத்தமே நீயாக வாற்சிப்பா ரங்கமுறச்
சுத்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (அசா)

தீப்பேற் களித்தபொருட் டெய்தென லாங்கருணை
மெய்ப்பேற் களிக்கிலருண் மெய்யெனலு மாகாதோ
பொய்ப்பேற்கு நின்னருளைப் பூட்டியுயிர் வாங்குமருட்
டெய்ப்போய்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௮௭)

பாவியே யேற்றபொருட் பாவமென லாங்கருணை
மேவியே யேற்கிலருண் மெய்யெனலு மாகாதோ
வாவியே நீயாக வற்றவர்மே லுற்றவருட்
டேவியே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௮௮)

பொக்கமேய் வார்க்கீகை பொக்கமென லாங்கருணைப்
பக்கமேய் வார்க்குமருட் பண்பெனலு மாகாதோ
வக்கமே நீயாக வாக்குவா ருள்ளமுற்ற
சொக்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௮௯)

இழிவோர்கட் கீகை யிழிவெனலா நின்கருணை
மொழிவோர்கட் கீகையருண் முற்றெனலு மாகாதோ
வழிவோ ரகமதுற்ற வங்கமென் றுஞ்செல்லா
வொழிவேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௯௰)

சிக்கேய்வார்க் கீகைமலச் சிக்கெனலா நின்கருணை
மெய்க்கேய்வார்க் கீகையருண் மெய்யெனலு மாகாதோ
பொய்க்கேய்வா ருள்ளம் பொருந்தாத நற்கருணைச்
சொக்கேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௯௧)

மத்தமே லுற்றாருன் மத்ததென லாங்கருணைப்
பித்தமே லுற்றாருன் பித்ததென லாகாதோ
சித்தமே நீயான சித்தர் செயலுகந்த
அத்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௯௨)

பேயொத்தா ருற்றசெயற் பேயெனலா நின்கருணை
யாயொத்தார் செய்கை யருளெனலு மாகாதோ
நீயொத்தா ரொத்து நினைக்கில்நின தாக்குமருட்
டேயொத்தா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௯௩)

கள்ளேய்வா ருற்றசெயற் கள்ளதென லாங்கருணை
நள்ளேய்வார் செய்கையரு ணல்கெனலு மாகாதோ
வெள்ளேயு மில்லத் திசையாதா ரங்கமுற்ற
வுள்ளேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௯௪)

மாலைவார் செய்கையந்த மையலினை வாங்கருணை
யாலேவார் செய்கை யருளினனு மாகாதே
தோலையு மங்கந் துடைப்பா ருளம்புகுந்த
ஆலேயென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (கரு)

தீங்குவா யெல்லாஞ் செலினு முனையளித்து
வாங்குவாய் நின்செயற்கு வைப்பதற்கென் கைம்மாறே
நீங்குவா யெல்லா நிரப்பியநன் முத்தருளத்
தோங்குவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (கசு)

மருவனே ருற்றமருட் செல்வ மறவீசன்
றருவனே யென்னவுருத் தந்ததற்கென் கைம்மாறே
பருவநே ராகவருட் பண்பாங் கருணை
யொருவனே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (கஎ)

களவே பலிப்பதற்காய்க் காணிற் களவி
னளவே கொடாதருளை யாக்குநிற்கென் கைம்மாறே
மௌவே புனைநோக்கி மேவுவார் தங்கட்
குளமேயென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (கஅ)

ஈற்றுவாய் நோயி லெழுவாயுந் துன்பத்தாற்
கூற்றுவாய்க் கேற்றவுருக் கொண்டதற்கென் கைம்மாறே
வேற்றுவா யைம்புலனும் வேறாக நன்மேனி
தோற்றுவா யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (ககூ)

மகப்பேறே யிச்சையால் வந்திக்க நின்னையந்த
வகைப்பேறே யன்றியருள் வைப்பதற்கென் கைம்மாறே
பகைப்பேறே யில்லையெனப் பார்த்தகல்வார் நெஞ்சிற்
சுகப்பேறே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (ர)

அற்றேயு நற்கண்போ லாயிருளை யார்மதிக்கோர்
கற்றேயு நற்கதிர்போற் காட்டுநிற்கென் கைம்மாறே
யிற்றேய் விலாதவன்ப ரேயு மிடந்தோறு
முற்றேயென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (ரக)

தீனே நினைவுடற்குத் தேடினர் காணினைவைத்
தானே நினைத்தேடத் தந்ததற்கென் கைம்மாறே
தேனே புனையடைந்த செல்வர்க்கமு தானவொரு
னோனேயென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (ரஉ)

அல்லையக் கண்ணுக்கி ளாயிழைதன் னின்பமில்லா
வில்லை யெனுமா லெரித்ததற்கென் கைம்மாறே
யெல்லை தவத்தோர்க ளின்பமே யாங்கவர்கள்
சொல்லேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩)

பெத்தமே புன்முகளாய்ப் பெற்றதெல்லா நம்மருளைத்
தொத்துமே யென்னவுருத் தோய்ந்ததற்கென் கைம்மாறே
சித்தமே புக்கிருந்த தீவினையு நிற்காக்குஞ்
சுத்தமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௪)

மித்தே யகலவலை மேவுதற்குப் பூவையிடு
வித்தே தொழுமேனி வேண்டுகைக்கென் கைம்மாறே
முத்தே கருணை முளைத்தென்மல மாற்றுமின்பத்
தொத்தேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱

போகமே யுண்ணுதுன் பொன்னடியை நோக்கிநெஞ்சென்
னாகமே நீயா யமைத்ததற்கென் கைம்மாறே
மோகமே மிக்கோர் மொழியு முகக்கருணை
யோகமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௬)

இருவினையே தீதென்பா லெய்ந்ததுநிற் காக்கவுரு
மருவினையே பூசை மகிழ்தலுக்கென் கைம்மாறே
திருவினையே யிருவினையைத் தீர்க்குமெனு மன்பருணு
மொருவினையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௭)

புத்திவா யெல்லாம் புகுந்துபொருள் வாங்கியென்பா
லத்துவாச் சுத்தி யமைத்ததற்கென் கைம்மாறே
பித்துவா யைம்புலனைப் போர்த்துநினக் காக்குமன்பர்க்
கொத்தவா வாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௮)

கன்னமே வாயாய்நீ களவமல மைந யும்
பின்னமே செய்தருளைப் பெய்ததற்கென் கைம்மாறே
வன்னமே யில்லா வடிவேமிக் கோர்க்குதவுஞ்
சொன்னமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௯)

காதே வழியாக்கிக் காதலுற நின்கருணைத்
தூதே யளித்த துணைவநிற்கென் கைம்மாறே
தீதே யகற்றவென்றன் றியவுருப் போலமைந்த
சூதேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௰)

சேதனமே மாற்றித்தன் செய்தியதாக் குமுடனிற்
காதனமே யாக வமைத்ததற்கென் கைம்மாறே
சாதனமே பூண்டுடலைச் சாராதா ருண்ணுமரு
ளோதனமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௧)

சிறைவாய்ப் புலன்கணையாய்ச் சிந்தையுள் ளும்புக்கு
நிறைவாய் மலமொதுக்கி நின்றதற்கென் கைம்மாறே
யிறைவா நினைவுனக்கே யீந்தார்க ளுள்ளத்
துறைவாய்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௨)

பூவியமே ஞெக்கவெற்கிப் பூமிசையி னின்னுருவாம்
பாவியமே செய்த பரிசதற்கென் கைம்மாறே
யாவினையே ஞெக்கியறி யாமையறுப் பாருளத்து
ளோவியமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௩)

உற்றே யிருவினையு மோர்வினையே யாகவுள
நிற்றே பிராரத்த நீக்குதற்கென் கைம்மாறே
நற்றேற் குனையும்பொய் நள்ளிருளுங் காட்டுமரு
ளொற்றேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௪)

நாட்டமே வாயாய் நடந்துளத்தை வாங்கிமலக்
கோட்டமே மாற்றியருட் கூட்டுதற்கென் கைம்மாறே
யாட்டமே நிற்கா யமைப்பார்க ளாடுமருட்
டோட்டமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௫)

மலமே யகலுகைக்கு வாய்த்த கருவிக்
குலமே யளித்தறிவைக் கூட்டுகைக்கென் கைம்மாறே
யிலமே பகைத்திங் கெழுவார்கட் குற்ற
நலமேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௬)

இருளே மலங்கருவி யீயாக்கா ணீயும்
பொருளே யெனவிளங்கிப் பூண்டதற்கென் கைம்மாறே
மருளே யகல மருவுமுயிர் தானு
மருளேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௭)

ஊனே விரும்பி யுயிர்செகுக்குந் தீயமனந்
தானே யகலவருட் சார்ந்ததற்கென் கைம்மாறே
கோனே யுயிர்க்குயிரே கோலம்பல் வானவருட்
டேனேதென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௮)

அங்கமே நோக்கி யணையுமக ளீர்தஞ்
சங்கமே மாற்றவருட் ந்ததற்கென் கைம்மாறே
மங்கமேற் றீது மருவுங் கருணைகொண்ட
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௧௯)

தந்திரமே தீதனைத்துந் தானாய்த் தழுவுநெஞ்சன்
மந்திரமே நோக்கவருள் வைத்ததற்கென் கைம்மாறே
யந்தரமே நில்லா வகன்றவறி வாய்நிறைந்த
சுந்தரமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௰

தாயர்பா லூற்றுத் தருக்குமன முன்னடியிற்
பாய வருளளித்த பண்பதற்கென் கைம்மாறே
மாயு மலமதற வாழுமுயிர் தானாகத்
தோயுந்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௧)

தந்தைபா லூற்றுத் தருக்குமன முன்னடியில்
வந்தனையே செய்யவருள் வைத்ததற்கென் கைம்மாறே
சிந்தனையே நீயாய்ச் செறிந்தவுயிர் நீயாகுந்
தொந்தனையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௨)

பாசமே தானாகப் பற்றுமன முன்பூசை
நேசமே தானாக நின்றதற்கென் கைம்மாறே
நாசமே யில்லா நவைவே ரறுத்தவுயிர்
வாசமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௩)

காமமே யுற்ற கடு யுன்மேனி
நாமமே யோட்டியரு ளூட்டுகைக்கென் கைம்மாறே
தாமமே சாத்தித் தருக்குந்தவத் தோருளத்துச்
சேமமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௪)

காயமே தானாக் கருதுமன முன்னடியிற்
சாயமேல் வைத்த சதுரதற்கென் கைம்மாறே
ஞாயமே யாக நடப்பார்க ளாடுமருட்
டோயமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௫)

தன்னியல்பே மாற்றித் தரும்பொதுவே யாக்குமல
மன்னியமே யாக்கைக் களித்ததற்கென் கைம்மாறே
யென்னியல்பே நீயா யெழுகைக் கெழுப்புமரு
ளுன்னியல்பே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௬)

மாற்றி மலத்தை வருமுயிரை நீயாகத்
தேற்றி நடத்துஞ் செயலதற்கென் கைம்மாறே
யாற்றுந் தனுவை யறவிட்டார் தாமாகத்
தோற்றுந்தென் னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௭)

வன்னமே தீக்கை மருவமல வன்னமதைப்
பின்னமே யாக்குமருட் பேறதற்கென் கைம்மாறே
கன்னமே நின்புகழைக் காதலிக்கக் காதலுற்ற
சொன்னமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௮)

மலமாலே நோக்கி வருமுயிரை நீயாங்
குலமாலே யாகவருட் கொண்டதற்கென் கைம்மாறே
பலமாலே யாகப் படுத்திமல மாற்றிமிக்க
நலமாலே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௨௯)

மலமே லொருமலமாய் வாய்த்த கருவிக்
குலமே யருளாகக் கொண்டதற்கென் கைம்மாறே
நலமே யிலதாக நாட்டுமலந் தீர்த்தவருட்
செலமே தென்னாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௰)

இருவினையே மும்மலத்தோ டொன்றாக வேய்ந்து
வருவினையை நின்னடிக்காய் வைத்ததற்கென் கைம்மாறே
கருவினையே மாற்றியுனைக் காதலிப்பார் தங்கட்
கொருவினையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௧)

இருவினையே திருவினையா யேயு மிருவினையு
மொருவினையே யாகவரு ளாக்குதற்கென் கைம்மாறே
மருவினையே யாக்கை மருவாரை மாற்றார்க்
கொருவினையே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௨)

தம்பனையே நீயாந் தகுங்காமே யானைகும்
வெம்பு மனல்வினையாய் வேண்டுகைக்கென் கைம்மாறே
நம்புமுயிர் நீயாக நாட்டிவினை மாற்றுமருட்
செம்பொனே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௩)

மந்திரமே நீயாய் மருவுமங்கம் யானாய்ப்போய்ப்
பந்தவினை பாம்பாகப் பண்ணுதற்கென் கைம்மாறே
தந்திரமே நீயாய்த் தழுவிவினை மாற்றுமருட்
சுந்தரமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (௱௩௪)

இங்கே வினையதனை யேயுமுடற் பாத்திரமுன்
நன்கையே யேந்தி நடக்குதற்கென் கைம்மாறே
மங்குமேற் றீயவுடல் மற்றுமுடை யீயாத
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (ளகரு)

இங்குப்போம் பாத்திரத்தி லிங்கிலையா லங்கதது
தங்கும் வினைதீர்த்த சதுரதற்கென் கைம்மாறே
சங்கமே நீயாய்த் தரிக்கின்வினை மாற்றிமிக்க
துங்கமே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (ளகசு)

உன்னியல்பே யென்றோ டுறுமியல்பா மென்னியல்பே
யுன்னியல்பை யொட்டி யுணர்வதற்கென் கைம்மாறே
தன்னியல்பே யெல்லாந் தவிர்ந்தநடை தானுகு
முன்னியல்பே யாவடுதண் டுறைநமச்சி வாயனே. (ளகஎ)

## சிறப்புப்பாயிரம்.

உற்றதனு லம்பலவா ணன்று வடுதுறையுட்
பற்றதனுற் பஞ்சாக் கரமாலை—கற்ற
விளம்போனுண் டேதுணையெல் லார்க்குநமக் கிந்த
மனம்போனுண் டேதுணையா மாண்பு.

நமச்சிவாயமாலை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



## பண்டாரசாத்திரம் முற்றும்.

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அம்பலவாணதேசிகர் அருளிச்செய்த

# பாஷண்ட நிராகரணம்.

கட்டளைக்கலித்துறை.

உருவாய்த் திகழ்ந்தங் கறம்பல வோதி யுயர்கயிலை
யருவா யுனக்கில்லை யாம்லிங்க தாரண மன்னுதவ
மொருவா தவர்க்கு மிலையா மகுசியை யோங்கிமுன்னாட்
குருவாய்த் திகழ்ந்தவ ராரோதென் றில்லையிற் கொற்றவனே. (௧)

கோவாற் றிகழுந் தனுலிங்க தாரணங் கோவினங்க
மேவா திருக்கும் விதியென்கொ லோலிங்க மேவியவா
நாவா லிகழ்வதற் கோசரி யாதிசைய நண்ணியன்பர்
தேவாய்த் திகழ்வதற் கோசொல்லு வாய்தில்லைத் தேசிகனே. (௨)

இருமூச் சமயத் திலைவீர மெங்ஙனெ ழுந்திவர்க்குத்
தருமெச் சமயஞ் சரியாதி நான்கிற் றனுவிலிங்கம்
வருமெந்தப் பாதமந் நான்கினு மாறை மருவியவை
பொருமா லிவர்கதி யேதோதென் றில்லையிற் புண்ணியனே (௩)

மானன் முகலிங்க தாரண மோமலை யாண்மருவுங்
கோனனை நீலிங்க தாரண மோகுக னேடுமுன்னோன்
வானு னவர்லிங்க தாரண மோமதி மாறுகொண்ட
ஆனு னவர்கதி யேதோதென் றில்லை யுயர்ந்தவனே. (௪)

நாவாற் றிகழு மனுவிலை யங்கத்தை நண்ணியதை
யோவா நிசித்திலை யாலந்தத் தீக்கையு முற்றதின்றும்
பாவாற் றிகழுங் குருவிலை யாகும்பொய்ப் பாஷண்டர்சென்
றேவா நிலையது வேதோதென் றில்லை யுயர்ந்தவனே. (௫)

உதிக்கும் பரார்த்தத் துயர்சரி யாதி யுடலிலிங்கம்
பதிக்கின்ற பாஷண்டர்க் கேது பரார்த்தமிப் பண்புபற்றி
விதிக்கு நடையென் விலக்கினை மேற்கொளும் வீணரெதாய்
மதிக்கவென் னம்பல வாணதென் றில்லையின் மன்னவனே. (௬)

எழுவா ரெவருஞ் சமயந்தம் மீசனை யேத்துதலை
வழுவா ரிறைசினம் போற்றரித் தாருமில் வையத்துளோத்
தழுவா ரிவரெச் சமயமிப் பாஷண்ட சண்டிகள்பொய்
கழுவா ரிவர்கதி யேதோதென் றில்லையிற் கண்ணுதலே. (எ)

காயத்திற் சின்னந் தரிக்கவக் காயமுங் கண்ணியதாய்த்
தோயத் திரிமல மாயுமச் சித்தத்திற் றுன்மையருட்
பாய வவாவியப் பண்பாம்பொய்ப் பாஷண்டர் பற்றிலிங்க
மேயத் தருநிலை யேதோதென் றில்லை யிறையவனே. (அ)

உதிக்குங் குருலிங்க சங்கமந் தத்தமக் குற்றசின்ன
மதிக்கின் மயக்க மிலவாகும் லிங்கத்தை மற்றிரண்டிற்
பதிக்கி லவையங்கம் பார்க்கிலொன் றுமற் பதிமயக்காய்
விதிக்கும்பொய்ப் பாஷண்டர்க் கேதோ கதிதில்லை வேதியனே. (௯)

தாரண லிங்கங் கதியேற் றருமணி நீறெனவாங்
காரண மேலொன்று காண்பதுண் டாங்கதி பூசையெனிற்
றாரண நீக்கத் தரும்வழி பாடு தனுச்சுசியுஞ்
சீரண மாற்கதி யேதோது தில்லைச் சிதம்பரனே. (௰)

தரிப்பார் தரிப்பவை யெல்லாந் தரித்தங் கருச்சனையைத்
தெரிப்பா ரெனமறை செப்பிய தாலிங்க மங்குமுறப்
பரிப்பார்க் கருச்சனை யேதா மெனவந்தப் பாருமிதைச்
சிரிப்பா ரவர்கதி யேதோதென் றில்லைச் சிதம்பரனே.

பாதக துறுசலம் ன மேற்படின் பன்னுமனுப்
பேதித் திடும்பஞ்ச சூதகம் பின்னுறச் சைவமறச்
சேதித் திடுமிந்த வஞ்சமுந் தன்னினுந் தீயதென
வாதித் திடுங்கதி யேதோதென் றில்லையின் மன்னவனே. (௰௨)

மண்ணிற் றிகழ்லிங்க மங்கத்தின் மேல்வைத்து மற்றதன்பேர்
நண்ணித் திகழ்வித்து மாலிங்க நம்மிலுந் தண்ணிதென
வெண்ணுற் றிகழும்பொய்ப் பாஷண்டர்க் கேது சமயமெனக்
கண்ணிற் றிகழ்வது முண்டோதென் றில்லையிற் கண்ணுதலே. ௰௩)

பூவா லயமைய மாமாற்பொய் யங்கத்திற் பூண்டலிங்கந்
தேவா லயமென்ப தேதாஞ் சகரட்சை சங்கம்மேற்
காவா லயஞ்சரி யாதிபொய் பாஷண்டர் கண்டநிலை
பாவா லயமென்று தில்லையு ளாடும் பராபரனே. (௰௪)

தரிக்கிற் றனுலிங்க மாமந்த லிங்கமுஞ் சங்கமமா
யிருக்கு மெனிற்குரு லிங்கமற் றேதிய சங்கமமும்
விரிக்கிலொன் றல்ல திரண்டு மயங்குமிம் மூன்றுமொக்கத்
தெரிக்குமெவ் வாறுசொ லம்பல வாதில்லைத் தேசிகனே. (௰௫)

தோற்றுங் குருலிங்க சங்கம மூன்றிற் றுலங்கிநெஞ்சை
யாற்றி லதத்து விதமாகும் லிங்கத்தை யங்கமுற
வேற்றி லதத்து விதமோ சரங்களி லேற்றியவை
மாற்றிய பாஷண் டாக கேதோ க மன்னவனே. (௰௬)

ஆரணம் போற்றுங் குருலிங்க சங்கம மாருயிரிற்
றோரணஞ் செய்கென வவ்வுரை தப்பித் தனுலிலிங்கந்
தோரணி செய்யும்பொய்ப் பாஷண்டக் கொத்தறக் கூர்த்தசைவச்
சீரணி செய்துநற் றில்லையு ளாடுஞ் சிதம்பரனே. (௰௭)

நோக்கிலிட் டங்குருச் சங்கம மென்று நுவலிலிங்கந்
தாக்கிலிட் டம்மற்ற லிங்கம தென்றும்பின் சாற்றிநெஞ்சு
மூக்கிலிட் டம்மங்க மொன்றுந் தனுலி லுறுமசுசி
மாக்கிலிட் டார்கதி யேதோதென் றில்லையின் மன்னவனே. (௰௮)

இட்ட மிவர்க்கிவ ரென்று லிவரோ டிவருமுறக்
கட்டிக் கிடப்பது வோமனமே மனங் காதலித்தங்
கொட்டிக் கிடப்பதன் றோலிங்க மங்கத்தை யோங்குமெனத்
தெட்டிய பொய்யர் கதியேது தில்லைச் சிதம்பரனே. (௰௯

பரிசிக்கப் பட்டதை யிட்டமென் றுயைம் புலன்கள்பற்றித்
தெரிசிக்கப் பட்டது மிட்டமன் றோமனஞ் சேர்ந்தவையோ
டிரிசிக்கப் பட்டதொன் றுண்டே லெவையு மொழிந்தனபொய்க்
கரிசிக்கப் பட்டவர்க் கேதோ கதிதில்லைக் கண்ணுதலே. (௨௦

கட்டிய திட்டமென் றுயது காணுமனந்
தோயத் தருலிங்க மேதோவப் பாவகந் தோய்ந்ததன்மே
லேயப் படுலிங்க மேதோவிம் மூன்றின்மெய் யொன்றையன்றி
மாயப் படும்பொய்யர்க் கேதோ கதிதில்லை மன்னவனே. (௨௧)

மணந்தாள வன்மங் கிலியத்தை மன்னி வருஞ்சுகத்தை
யணந்தா ளறிந்து மவனைத்தன் னங்கத் தருங்கயிற்றுற்
புணைந்தா ளிலையவன் வேளாக ணேக்கிப் புணர்ந்துமங்கந்
தணந்தா ளிவளென்ப ரோதில்லை வாழுமெய்ச் சங்கரனே. (௨௨)

ஆவிரி னின்றது போலிங்க வங்கத்துந் தங்குலிங்கம்
பாவிய மன்றென்ற தேதோ வெனின்மலப் பற்றிநெஞ்ச
மேவிய தாலிங்க மங்கத் தருசியை விட்டுலிங்கந்
தாவிய தேகதி யன்றோதென் றில்லையிற் சங்கரனே. (உ௩)

பிறிவித்த தத்து விதத்தைப் பேதக மெய்ப்பொருளை
யறிவிற் றரித்தது முண்டோவிவ் வங்கத் தருசியறப்
பிறிவித்த லிங்கம் பரிசித்த லைவிதிபான்மையறச்
செறிவித்தல் பாஷண்ட மன்றோதென் றில்லைச் சிதம்பரனே. (உ௪)

புலமே லினையுந் தனுவே யெனினும் புறத்தசுசி
சலமே யனையத் தவிர்வதன் றோலிங்கந் தங்குமங்க
மலமே யனையுமெவ் வாறது மாறு மலமதறுங்
குலமே யனையுங் கதியேது தில்லையிற் கொற்றவனே. (உ

சரியாதி மூன்றுமெய் யாவிமெய்ஞ் ஞானந் தகுதியங்க
மரிதா லறிவென்ப தேதாகும் லிங்கம தங்கமுறிற்
பெரிதா மருசி பிறவாது ஞானம்பொய்ப் பேதைமையற்
கரிசா மிவர்கதி யேதோதென் றில்லையிற் கண்ணுதலே. (உ௬)

ஈட்டு மருளைச் சரியாதி நான்கு மிவையலவா
யோட்டு முருலிங்க தாரண மால்வைய முய்பவந்தோ
காட்டுங் குருமற்றச் சங்கம மீதைக் கருதிற்பொய்மைப்
பூட்டு மவசல வோதில்லை வாழுமெய்ப் புண்ணியனே. (உ௭)

அழைப்பார்தம் போலவர் பேரேற்றி யாங்கவர் தானையுற்றுப்
பழிப்பா ரவர்பழி தம்பழி யாகப் பணியுமறப்
பிழைப்பார்பொய்ப் பாஷண்ட ரங்கத் திலிங்கம் புனைந்துபொய்யி
லுழைப்பா ரிவர்கதி யேதோதென் றில்லை யுயர்ந்தவனே. (உ௮)

மண்டிகழ்ந் தாளு முனையங்கத் தாக்கி வருஞ்சரியைத்
தொண்டிகழ் விப்பவர் சங்கம ரோதொன்மை யர்ச்சனையைக்
கண்டிகழ் வித்து விளக்கினைக் கைக்கொள்ளுங் கையருன்பா
லெண்டிகழ்ந் தேறுவ தெந்நாட்டென் றில்லை யிறையவனே. (உ௯)

பார்த்திகழ் லிங்கம் பழித்துத்தம் பாணியி லிங்கமுறச்
சேர்த்துமெய்ஞ் ஞானச் சரியாதி நான்கையுந் தீதெனவே
கூர்த்திகழ் விப்பவர் சங்கம ரோகொலை யாமபக்கை
யார்த்தவர்க் கேது கதியோதென் றில்லையி லாரமுதே. (௩௰)

தோயும் பரார்த்தஞ் சொனுந்தவ சொல்லாந் துறந்துமற்றுக்
காயங் கொளுலிங்கங் கற்புமற் றோர்லிங்கங் காதலுறிற்
சாயு நரக மெனுமிந்தப் பாஷண்டச் சங்கமெல்லா
மாயத் தரும ருளம்பல வாதில்லை மன்னவனே. (ரு௧)

தங்கு மவையவ மெல்லாந் தரிக்கத் தருமுயிர்தன்
மங்கையைத் தீண்டின் மரபிழப் போவங்க மன்னும்லிங்க
மெங்குந் தருலிங்க நீயங்க லிங்க மிழக்கிலொன்றைப்
பொங்கத் தரிப்பவர்க் கேதோ கதிதில்லைப் புண்ணியனே. (ரு௨)

சரியாதி நான்கிற்கு மோரியல் பாகுந் தனுவிலிங்கங்
கருதா திவற்றிலொன் றாக விலக்கைக் கருதுவிதி
யரிதாற லாற்பிழை யன்றோபொய்ப் பாஷண்ட ராதரிக்குங்
குருவா ரிவர்கதி யேதோதென் றில்லையிற் கொற்றவனே. (ரு௩)

துடக்கோடு லிங்கந் தரிப்பார்மெய் யாவி துறந்துமந்த
விடக்கோ டடக்கிப் புதைப்பார்தம் மூச்சிட்ட மேலவர்க்கா
யடுக்கோ டளிப்பவர் சங்கம ரோபொய் யருசியதா
மிடக்கோ ரிவர்கதி யேதோதென் றில்லை யிறையவனே. (ரு௪)

வாழ்வினும் வாழ்வறச் சாவினு மற்றென் னிறையையறச்
சூழ்வது மில்லை யெனுமால்மெய் லிங்கத்தைச் சூட்டியவர்
தாழ்வினுந் தாழா ரயரினுந் தம்மொடு சேர்வதென்னும்
பாழினும் பாழிதிங் குண்டோதென் றில்லைப் பராபரனே. (ரு௫)

ஏதோ தகப்பதி யேதோமெய் யீசனுக் கெச்சிறன்றன்
பாதோ தகம்படைத் தாட்டு மிதாற்பதி யாயிவனு
மாதோ தகங்கொள்ளும் பாஷண்ட மார்க்க மயலதுவாங்
கேதோ கருங்கதி யேதோ தில்லைச் சிதம்பரனே. (ரு௬)

சாத்திரத் துள்ளது மன்றூந் தனுவிற் றரிக்கும்லிங்கஞ்
சூத்திரத் துள்ளது மன்றுகுஞ் சூட்சத் தொகுதிலிங்க
மாத்திர மற்ற வதைமற்றுந் தீதென மாற்றியதா
மீத்ததா லீதென்ப தேதாகுந் தில்லை யிறையவனே. (ரு௭)

மெய்யிற் புனைந்த சிவலிங்கம் பீடத்தின் மீதினல்லாற்
கையிற் புனையவுங் கண்டதுண் டோகலி யோகழிந்த
பொய்யைப் புகழமெய் யாமோ புலமற்ற புல்லருக்கிச்
சைவத் திறமென்கொ லம்பல வாதில்லைச் சங்கரனே. (ரு௮)

காரத் துரூர்புறந் தூய்மையெவ் வாறுறு நண்ணுமலத்
துரத் தொடுலிங்கந் தோய்வார்க்கெவ் வாறகத் தூய்மையுறுஞ்
சாரத் தவஞ்சற்று மில்லாத பாஷண்டச் சண்டிகட்கவ்
வீரத் தனமென்கொ லம்பல வாதில்லை வேதியனே. (௩௯)

போரைத் துடைத்தவர் வீரரென் பார்பொய்ப் பகைகளெல்லாஞ்
சோரத் துடைத்தவர் வீரரென் பார்சரி யாதிதொக்கும் [கவ்
வேரைத் துடைத்துப்போய் மார்க்கத்தை மேற்கொண்ட வீணருக்
வீரத் தனமென்கொ லம்பல வாதில்லை வேதியனே. (௪0)

ஏயு மிடக்கரம் லிங்கமிவ் வங்கத்துட் டங்குமலங்
காயுங் கரமெக் கரமன மூட்டுங்கை யேதததற்
றேயு மசூசி சுசியெந்த வாறுந் தொடாதுபுத்தி
மாயு மிவர்க்குக் கதியேது தில்லையின் மன்னவனே. (௪௧)

கற்புடை யாடுணை மாய்ந்தான் மடிவது கற்பவன்றான்
சொற்புனை யாளுடன் மாய்வதுண் டோதுணை பாரியொத்த
பொற்புடை யாவிசென் றுலிங்க மாயப் புதைப்பர்கெட்டேன்
பற்பல போதகத் தாலிங்க தாரணம் பாஷண்டமே. (௪௨)

அன்னிய லிங்கந் தொழூாரங்க லிங்க மகலலிங்க
முன்னிய வாறென் றிருக்கோயி லிங்க முதித்ததுவாற்
னுன்னிய லிங்கத்திற் பேதமுண் டாக்குந் துரோகநெறி
மன்னிய வாறென்கொ றில்லையு ளாடிய மன்னவனே. (௪௩)

நீக்கிய தீய செனனவஞ் சூதக நீக்கவருந்
ளாக்கிய தாமெனும் வேதமத் தீதை யொழிக்கவருட்
டேக்கிய காலமச் சூதக மேதுந் துடர்ந்துடலைத்
தாக்கிய வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪௪)

புந்திக்குந் தீது புலாலுண்டல் போக்கிற்பொன் னாருளே
பந்திக்கு மென்னுமப் பான்மையி னுலைதைப் பாற்றியருட்
சிந்திக்கு நாளது தீய புலாலது சேர்ந்துடலைச்
சந்திக்கும் வாறென்கொல் தில்லையு ளாடிய சங்கரனே. (௪(

புலப்படு மில்லந் துறக்கமெய்ஞ் ஞானம் பொருந்துமெனச்
சொலப்படும் வேதஞ் சொலுமா லதனைத் துறந்தருளி
னிலைப்படுங் காலத்து நீங்கிய வில்ல நெருங்கியுடற்
றலைப்படும் வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (௪௬)

அந்திக்குந் தீப தசுனுமெய்ஞ் ஞான மனுதிநெஞ்சிற்
சிந்தித் திருதைத் தெசித்திடு மாலென்னுஞ் சீர்மறையால்
வந்தித் தருளை மருவிய கால மருவிருது
சந்திக்கும் வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (சஎ)

மரிக்கின்ற சூதக மாற்றமெய்ஞ் ஞான மருவுமென
விரிக்கின்ற தாகமம் விட்டுமெய்ஞ் ஞானம் விளைந்துநெஞ்சிற்
றெரிக்கின்ற காலத்துச் சூதக மேது திரண்டுடலிற்
றரிக்கின்ற வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (சஅ)

பாவிய சாதியிற் சூதக மாற்றப் பரிந்தருளே
யாவிய தாமெனும் வேதமத் தீதை யகற்றியருண்
மேவிட காலமச் சூதக மேதும் விரவியுடற்
றூவிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (சகூ)

மங்கிய வெச்சிலச் சூதக மாற்ற மருவியருட்
பொங்கிய தாமெனும் வேதமத் தீதினைப் போக்கவருட்
டொங்கிய காலத்துஞ் சூதக மாற்றுஞ் சுகமுடற்குத்
தங்கிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருல)

பெருக்கும்பொய்த் தீவினைப் பெத்தற்குச் சூதகம் பேதமென
விருக்கு மியம்பிய தாஞ்சிவ தீக்கைக் கிசைந்தமிக்கோ
ரொருக்கிய தாமிதைப் பாவிகண் ஞான வுயர்ச்சியெனத்
தருக்கிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருக)

சேதித்த தாம்பஞ்ச சூதகந் தீக்கையிற் றீதிருட்கோ
ளாதித் தனுமருட் டேய்க்குமெய்ஞ் ஞான மடைந்தகனைப்
பேதித்த தாம்பொய்யர் சூதக மெய்யருட் பெற்றியெனச்
சாதித்த வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருஉ)

சேரும்பொய்ச் சூதக மாதி சரிதையைச் செரிணந்நாட்
பேருந் தனுவறப் போதாத ஞானவப் பெற்றியுரு
வாரும்பொய்ப் பாவிகள் சூதக மாதி யடைந்துமருட்
சாரு மதுவென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருங)

அண்டத்திற் றூபித்த நாளது மாலய மானதென்னப்
பிண்டத் திலிங்கத்தைத் தாபித்த நாளந்தப் பெற்றியென்பா
ரண்டத்தி லிங்கத்திற் சூதக மேது மடாதுடலிற்
றண்டுற்ற வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (ருச)

தாபித்த லிங்கம் பதிமற்ற வங்கஞ் சதியதெனப்
பாவித் திடுமப் பதியோ டிறக்கப் படாதுகெட்டேன்
சேவித்த வங்கச் சதியே சிதைந்திடச் சேர்பதியைச்
சாபித்த வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (௫௫)

விதித்த விதிக்கு நிஷேதமுண் டேலவ் விதியுமின்றாய்
மதித்தது வாமிம் மதிக்கொரு மேன்மதி மன்னிவந்தோ
வுதித்தது வாந்திய மக்கட்குப் புன்சொ லுயர்த்திவஞ்சர்
சதித்ததெவ் வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (௫௬)

சூதக மேது மிலைமற்றச் சூதகர் சூதகராம்
பாதகர் தம்மைப் பரிசிக்கிற் சுத்தரப் பாதகராந்
தோதகர் தம்மைத் தொடிற்றீட்டுப் பாவிகள் சூதகத்தைச்
சாதக மேதுசொல் றில்லையு ளாடிய சங்கரனே. (௫௭)

சூட்டிய போதை மறந்தரன் பாதத்திற் சூட்டமறை
நீட்டிய பாவ மெனத்தங்க ளுச்சிட்ட நீள்பதத்தி
லாட்டிய நீர்முடிக் காட்டுமஞ் ஞானமெய்ஞ் ஞானமெனச்
சாட்டிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (௫௮)

வீட்டிய சூதக மைந்தும் விழைந்து விதிவழியே
கூட்டிய பூசையுஞ் சேவையும் விட்டுக் குருபதத்தி
லாட்டிய நீராற் காட்டுமஞ் ஞானமெய்ஞ் ஞானமெனச்
சாட்டிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (௫௯)

வழுவிய தாம்பஞ்ச சூதக நீருற வாய்த்தமல
நழுவிய தாமருட் கோலத்தை நாட நடிக்குமருட்
கழுவிய தாம்பஞ்ச சூதக மென்னக் கருதிலிங்கந்
தழுவிய வாறென்கொ றில்லையு ளாடிய சங்கரனே. (௬௰)

வெண்பா.

பாஷண்டம் போகப் பகர்ந்தா னறுபதையும்
வீழண்டத் தெய்தாமல் வீடெய்த—வேழண்டத்
துள்ளா வடுதுறையி லுற்றம் பலவாணன்
விள்ளா வறிவாய் விளைந்து.

கைபெற்றே மாக்கைவிடு கைபெற்றேம் பாஷண்டங்
கைபெற்றேங் காட்டு நிராகரண—மீபெற்றுச்
சேர்க்கம் பலவாணன் செய்தா வடுதுறைச்சொல்
லேற்கப் பெறுகையினா லே.

பாஷண்ட நிராகரணம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அனுபோக வெண்பா.

அளித்த கருணை யனுபோகந் தன்னை
விளக்கியொரு பாவின் விரிக்க—வுளக்கணிரு
மெய்யசோ முத்திநகர் மேவியசிற் கருணை
ஐயா நமச்சிவா யா. (௧)

ஆகற்றாற் கில்லை பரிவுடைமை யாங்கரன்பாற்
றேகற்றாற் கெல்லாந் தெரியுமே—மாசற்ற
நல்லார்க் கறிவு நடக்குமா றெல்லாக் கருத்தைச்
சொல்லாய்த் தொடுத்தேன் றுணிந்து. (௨)

தோற்றப்போ தாற்றுந் தொடர்ந்த குருடதனை
டாற்றும்போ லின்று மறைப்பேறுந்—தேற்றுதற்கு
மற்றொருவர் சொல்லை மதித்ததுபோற் றிப்பல
மற்றவர்க்குச் சற்குருவே யாம். (௩)

சரமசர வென்னத் தரிக்கு முயிரச்
சரமசர மன்றுகத் தங்குஞ்—சரமசர
மீசற் குடைமை யிசைத்துயிர் தொண்டாகு
மாசெவர்க்கும் பேதமென மன். (௪)

பொறியும் புலனும் பொருந்திச் சகத்தி
லறியும் பகுதி யறிந்தா—னெறியி
னடக்கு முடலதனை நன்னியகோ ராவி
யெடுக்குமென்ப தெல்லா மிழுக்கு. (௫)

பாதாதி கேசப் பரப்புமே னின்றதனைப்
பாதாதி கேசப் பரப்புள்ளே—யேதாருந்
தானென்ன நோக்கித் தனையறவே கண்டமல
வீனலுக்கே யாவியிலை யென். (௬)

பரந்த கருவிப் பரப்பெல்லாந் தானாய்
விரிந்த வறிவினையும் விட்டுத்—தெரிந்த
மனமோ பொறியோ மருவியனாற் பூதத்
தினமோவென் பானுக் கிசை. (எ)

தாமொன்ற காயந் தனைத்தொன்ற போதாவி
தானொன்றி நின்றதுபோற் சாருமே—யூனொன்றி
நின்றவினை செத்தா லிகழ்பிணமாங் காயமறச்
சென்றதனை யுள்ளதெனத் தேறு. (அ)

தான்றிரிந்து காயமே தானாய்க் கருதுமுயி
ரூன்பிரிந்து காண்ட லுடற்குருவங்—தின்பொருந்துங்
காயஞ் சடமென்னக் காண்ட றெரிசனமா
மாயுமுட லென்னைச் சத்தி மாண்பு. (கூ)

காயமே யுற்றுக் கருதும் பிரமமே
மாயமே யுற்ற மடக்கமா—ஞாயமா
மங்கமே யற்றொழிகின்ற பிரமமேற்
சங்கமே யில்லைத் தனி. (௰)

பரமன் கருணைப் பசுபதியாய் நின்ற
பிரமனு மென்றுமிகப் பேசில்—வரமெனக்குத்
தாதா வெனவிறைஞ்சித் தாழ்ந்துநிற்கும் பேதமுனக்
கேதா மிதனை யியம்பு. (௰க)

கோனுனை யென்னிற் குறித்திரண்டுங் காணுமற்
போனதே யன்றோ புகலுங்கால்—றானுனை
வாறே திரிவற்ற மன்னிற் கருணைநெறிப்
பேறே யுனதுமெய்ப் பேறு. (௰உ)

தன்னையும் பாழாய்த் தகுமப் பிரமமெனு
மன்னையும் பாழாக வந்ததாற்—றன்னு
மிருவருமே கெடா திருப்பதுவோ முத்தி
வரமெனக்குச் சொல்வாய் மகிழ்ந்து. (௰ங)

பாசம் பதியென்னப் பற்று மிரண்டாக
நாசமே யின்றி நடக்குமாற்—பாசமாய்த்
தான்றிரிந்து நின்ற தகைமைபோற் றற்பதியாம்
வான்றிரிந்து வைத்தாய் மதி. (௰ச)

மருவுதனுக் தாருக மன்னியதோ ராவி
திரிவாய்த் தனையிழந்த சீர்போ—லொருவா
வரனே யெனக்கருதி யாங்குனக்குக் கேடு
தரினே யுனக்கேது சார்பு. (௧௫)

நாடியோ வென்போ நரம்புசிக் கோழையோ
தேடி யெனையறியேன் றேருங்கால்—கூடியதோர்
பாதாதி கேசப் பரப்பெல்லா நீயான
தேதா மறிவே தியம்பு. (௧௬)

நன்றமரை நோக்கித் தரும்பெருங் கேட்டென்னைக்
கண்டதோ வென்னக் கருதிப்பின்—மண்டிப்
புறப்பட்டான் பூதலத்தார் போற்றுமிறை தானென்
றுறப்பட்டான் போலவுனை யோர். (௧௭)

அறியும் பொறியி லறியாத போது
பிறியுந் தனுவே பிணமாற்—குறியதனை
நட்டார்க் கறிவே நடக்குமே யாங்கதனை
விட்டார்க் கறிவோ வியப்பு. (௧௮)

தோற்ற மொடுக்கஞ் சொலுமாவிக் கில்லாத
மாற்றம் பொறிதனக்காய் மன்னுமாற்—போற்று
முடலகல வைத்தார்க் குயிர்நிலைமே லையப்
படவருவ தில்லையெனப் பார். (௧௯)

அங்கமே யாவிக் ககம்புறம்பா லங்கமெனுஞ்
சங்கமற்றா லுண்டோ தரிக்குமிட—மங்க
மொருபடித்தே யன்றங் குயர்விழிவா லாவி
பெருவடிவே யாகப் பெறும். (௨௰)

நிறைவே குறைவை நிறைக்குமற் றாவி
குறைவேல் நிறைவுசெய்யக் கூடா—வறவே
பெரிதுஞ் சிறிதுமுறும் பெற்றியென மண்ணில்
வருமே சடமாய் மரித்து. (௨௧)

சம்புவுக்கே யல்லாற் சருவ வியாபியென்ப
தம்புவியின் மாக்கட் கடாதென்னி—னம்புதற்கங்
குற்றபோ தத்துவித மன்றோதா னெவ்வாமற்
சற்றே குறையிற் சடம். (௨௨)

நிறைவே யான்போ னிகழ வறிவின்
குறைவேன் வருமாறு கூறேற்—பொறியி
னுணர்த்துவா ரின்றி யுணராதா லங்கண்
குணர்த்துமா றில்லையெனக் கொள். (உ௩)

அரையனைப்போ லென்சா ணவனடிமை யாவா
ரரையனுக்கொப் பாமோ வறையி—லரையனவ
னேவுதலே செய்ய வியன்றபணி கேட்பதுபோ
லாவதுவே யாவிக் கணி. (உ௪)

எல்லாப் பொருட்கு மியன்றநிறை வாலறியச்
செல்லா குணமதற்கே சேருமா—னல்லாய்
நிறைவே யறிவாமால் நீங்கா மலத்தின்
குறைவோ வறியாமை கூறு. (உ௫)

நிறைவேற் பிறவி நிகழும்போ தாவி
குறைவே நிறைவதற்குக் கூடா—நிறைவேபோய்
யங்கத்தை யொத்தங் கதுவா யறியுமலச்
சங்கத்தா லுற்ற சதுர். (உ௬)

நிறைவா முயிரி னினைவாற் பிறவி
துறையாய் நடக்குந் தொடர்பை—யிறையான்
நிலவுமறி வாணீத்து நீடருளைச் சேர்ந்து
விலகாத தன்றோ விடு. (உ௭)

இலங்கும் விளக்கங் கிலங்காத போது
துலங்கு நயனந் துலங்கா—விலங்குமுடற்
றோற்றும்போ தாவி துலங்கு மதனையற
மாற்றும்போ துண்டோ மதி. (உ௮)

போக்கும் வரவும் பொருந்தியதோர் தீபத்தைத்
தாக்கு நயனத்தைத் தாக்காவாம்—நோக்கத்தை
யுற்றபோ துண்டா முறுங்காட்சி யொண்மைய
மற்றபோ தின்றா மதற்கு. (உ௯)

கருவிநிறை வன்றோ கருதுங்கா லெண்ணி
னுருவாய்த் திகழ்ந்தங் குறுமால்—வருமெய்
யுறுப்புக்குப் போக்கு வரவே யுறுதல்
சிறப்புக் கினியதெனத் தேர். (௩௰)

நினைவே செனன நிகழ்ந்தனுவைப் பற்று
மனமே மரண மெனுமாற்—கனவே
புலகமெனக் கண்டக் குறுபரனைச் சார
விலகுமறி யாமை விதி. (௯௧)

சிறந்த கருவி திகழாவி தன்னிற்
பிறந்திறந்து நிற்கின்ற பேத - மறிந்தொருவ
னற்றபோ தன்றே வரனிறைவோ டொன்றாகப்
பெற்றிடுவ தாகப் பெறும். (௯௨)

குணிகுணத்தின் றன்மை குறித்தபோர்க் கன்றே
வெணுடலுயிரின் றன்மை யியல்பாக்—குணியின்
றிறமே மெய்மாகுஞ் சேர்குணத்தின் றன்மை
குறையாச் செயலாகக் கொள். (௯௩)

குணிகுணமே தென்னக் குறிக்குங்காற் பேத
மெணிலவையு மொன்றா யிருக்கும்—நணியறியி
னீரிற் குளிர்மை நிகழ்பயக்கத் துள்ளொளியு
மாருக்கு நேரா மறி. (௯௪)

மயக்கைத் குணமே மருவு மயமச்
செயலை யனுசரிக்கச் செய்யு—மயலையய
லாக்கும்போ தந்த மயமா யரனருளை
நோக்குதற்குச் செய்யுமென நோக்கு. (௯௫)

செயலே பிறப்பிறப்பைச் செய்யுஞ் செயலின்
மயமே யதுவாக மன்னுந்—செயன்மயத்தை
யொத்தபோ தன்றே வுறும்பிறவி மாறியருண்
முத்தியினைச் சேரு முறை. (௯௬)

தன்னைத்தா னோக்கித் தகுங்குணியோ டொன்றினருண்
மன்னைத்தா னோக்க வருமன்றே—வுன்னித்தா
னென்னறிவா லெல்லா மறிந்தே னெனவொருவன்
சொன்னதனாற் பேதமதோ சொல். (௯௭)

வித்தோ டடங்குமுளை வீரியத்தால் வித்துமதை
யொத்தே யடங்கி யுறுமன்றே—சித்தையொத்து
நின்றதோ ராவி நிகழ்சிவத்தோ டொன்றாகச்
சென்றேறு மென்னத் தெளி. (௯௮)

பிறப்பிறப்பாம் பெத்தத்தைப் பேசுங்கா லீசன்
சிறப்புடைய னாதலினாற் செல்லா — மறைப்பாம்
மலமே சடமுயிர்க்கு மாறாப் பிறப்பா
மில்லையா லெவர்க்குமில்லை யாம். (௩௯)

மலமே கருவி மருவா பசுவின்
குலமே பிறப்பிறப்பைக் கூடாச் — சொலுமிரண்டு
மொத்தபோ தன்றோ வுறும்பிறவி யொவ்வாமல்
வைத்தபோ தின்றாக மன். (௪௰)

ஆவிக்கு நன்கா மரிய பிறப்பதனை
யாவிக் கில்லையென் றறைவதென் — மேவு
மலப்பிணியைத் தீர்க்கு மருந்தா லதற்கிங்
கில்லைப்பிணிமற் றென்று மியம்பு. (௪௧)

உயிர்க்குப் பிறவி யுறாதியல்பா லென்று
மயக்க மதற்கியல்பாய் மன்னு — மியக்குமரன்
றானென் றருவான் றகுமுணர்வைத் தாரணிமே
லூனென் றருவா னுரை. (௪௨)

பிணிக்கோ மருந்ததனைப் பெற்றவர்க்கோ வென்னிற்
பிணியே மருந்தைப் பிணியா — வணியுமுயிர்
வினை யருந்தா வியாதியோ டொன்றாகப்
பூணும்போ துண்டாம் பொசிப்பு. (௪௩)

பிணிக்கோ மருந்ததனைப் பேறாகு மங்கந்
தனக்கோ பிறித்தொன்றைச் சாற்றிற் — கனக்கவிவை
சந்தித்தா லல்லாற் றரியா துயிர்மலமு
மிந்தவா றாகுமென வெண். (௪௪)

பளிங்கொளியே வன்னத்தைப் பற்றிப் பளிங்கு
விளங்குதலைச் செய்யா விதிபோல் — களங்கமலத்
துற்றபோ தாவி யுறுமலமாய்த் திப்பிறவி
பற்றிநிற்கு மென்றதனைப் பார். (௪௫)

தனிக்கு மலமுந் தகுமுயிரு மொன்றாய்
நினைக்கப் பிறவி நிலையா — மனைத்தினையு
முற்று நடப்ப துறுமலமே யாங்கதனை
யற்றிடவே தாவிக் கணி. (௪௬)

அனாதி மலமேபந்த னாகையினா லன்றே
பினாதிதனுப் போகம் பெறாத—லனாதிமலக்
கூட்டமே யின்றேற் குறித்தமல நான்குமுன்
னோட்டமே யன்றோ வுணர். (௪௭)

முப்பொருட்கு மின்று மொழியுங்காற் றோற்றம்பின்
தப்பறவே நின்று தனிக்குமா—லெப்பொருளு
மொன்றுகும் போதந் குதிக்கு மூயிர்மலமாய்
நின்றாக் கினுவே நிலை. (௪௮)

சங்கத்தா லுற்ற தனிப்பிறவி சங்கமல
மங்கத்தா னுற்ற வகையன்றோ—வங்கந்தான்
போக்குவதே யாகப் புகுந்ததாந் தீப்பிறவி
யாக்குதற்கே யாகா தறி. (௪௯)

காயமே விச்சையுறக் காட்டியது தீயமல
மாயமே யாமான் மலமன்றோ—வாயதோ
ரீசன்மே லிச்சை யிசைவதற்கே நின்றவுடல்
வாசமே யாங்காற்கா மன். (௫0)

மலமே பிணியுடனு மற்றதனோ டுற்ற
குலமேல் மருந்தேது கூறு—பலமருந்து
தோற்றும் பிணிக்குத் துடர்ந்துடனாய் நிற்பதுபோல்
மாற்றுந் தனுவே மருந்து. (௫௧)

கரும மருந்து கருவிமலந் தானாய்
மருவிவரு மென்னின் மருவாப்—பருகக்
கருவிதனுப் போகங் கருமமாற் காய
மருவுமருந் தென்ன மதி. (௫௨)

ஊட்டு மருந்தை யுறும்பிணிக்குக் காயத்தை
வாட்டியதோர் பாத்திரமாய் வைத்துமிகக்—கூட்டிக்
கொடுப்பான் மருத்துவன்போற் கொண்டமலந் தன்னை
யடுப்பா னரனென் றறி. (௫௩)

தாக்கும் பிணிக்குத் தருமருந்தே லாவியுற்றங்
கூக்கு மறிவி லுறுமன்றோ—போக்கு
மருந்தேற் பிணியகலின் மாறு முயிர்க்குப்
பொருந்துமியல் பன்றே புகல். (௫௪)

வருத்தும் பிணியகற்றி வந்தமருந் தேதன்
கருத்தன்பா னிற்குங் கணக்கா—லொருத்தன்
மலமே யறுத்து வருந்தநுவே யீசன்
குலமே யெனவறிந்து கொள். (௫௫)

மூன்று மலமு மொழியுங்காற் றீதாகத்
தோன்றுமா னேயாகச் சொல்லுவதா—மேன்றசிவ
புண்ணியமே நன்மருந்தாய்ப் போக்குமென வாங்கதனை
நண்ணியநூ லோதுமதை நாடு. (௫௬)

தருமா தருமமெனத் தங்கு மிரண்டும்
வருமாம் பொசிப்பாக மன்னி—மருவிமிக
வுற்றசிவ புண்ணியமே யொண்மருந்தா யோங்குமிதைப்
பெற்றவர்க்கே யில்லைப் பிணி. (௫௭)

மலப்பிணியை மாற்று மருந்தே லதனைச்
சொலப்பிணியொன் றற்றுரே தோய்வ—சலப்பிணியை
யோட்டு மருந்தங் குருமரனை யல்லாம
னூட்டுவதே யன்றோ நலம். (௫௮)

பிணியற்று ரன்றோ பிரியா வருளைப்
பணிவுற்றங் கன்பு பரிவார்—பிணியதனை
யுற்றார்க்குச் சற்று முறுமரனைத் தோன்றுதங்
கற்றார்க்கே யாமென் றறி. (௫௯)

மறைக்கு மலங்கருவி மாற்றுக்கா லென்னி
னுறைக்குங் கருவிகளு மொத்தே—மறைப்புக்
குறைப்பட்ட தன்றோ குறித்தரனை நோக்கிற்
சிறைப்பட்ட தாகுமெனத் தேர். (௬0)

பிரியா வருளைப் பிரிக்கு மலநோய்
திரியா வினைமருந்து சேர்ந்தங்—குரியமல
நந்தநந்த நாதனையே நண்ணிநண்ணி யம்மருந்தால்
வந்திப்ப தாக வரும். (௬௧)

நிலையே மலங்கருவி நீக்காத போதிங்
கிலையேற் பொறியு மிசையா—மலமிருட்டுக்
தீபங் கருவி திகழ்மருந்து சேர்வினையாம்
பூபதிபோ லீசனையே போற்று. (௬௨)

இருளை யொழிக்கு மிசைந்த கருவி
மருளறுவாய்க் கண்ட மருவு — மருளை
மறைப்புற்றோர் காண மருவுமுருப் போலச்
சிறப்புற்று நிற்குமெனத் தேறு. (௬௩)

கருமமருந் தென்றுங் கருது பிராயத்த
வுருவுக் கிசையவு மென்றுங் — கருதி
னுடற்கிசையத் தானே யுமேற் றொடர்ந்து
விடற்கிசையா தென்ன விதி. (௬௪)

பிணிக்கு மருந்து பிராரத்தந் தானே
தணிக்கும் வகையாற் றணிக்குந் — திணிக்கு
மிரைவழியே சேரு மிருளொளியா மென்னு
மரபுமருந் தென்ன மதி. (௬௫)

மலத்தையிருட் போலென்று மன்னுகுரு டென்றும்
பிலத்தநோய் போலென்றும் பேசின் — மலத்துமன
மோகத்தால் வந்தத்தை முண்டரனைக் காணாத
தேகத்தாற் கில்லைக்கண் டேறு. (௬௬)

வறுமையால் நோயால் வணக்கத்தான் மன்னர்
சிறுமையாற் செல்வத்தாற் சேரும் — மறுமையா
லீட்டும் வினையா லியன்றவரத் தாலரன்மே
னாட்டமுற்ற தால்மருந்தாய் நாடு. (௬௭)

உரக்கும் பிணியா லுறுமருந்தை யென்றுந்
தரக்கண் டிருக்குந் தனிமை — நரக்கின்
றியல்பே யெனுமா விதைசந்ததனை மாற்றச்
செயலென் றெடுத்தான் சிவன். (௬௮)

அனாதி மயக்கமுயிர்க் காகையினீசன்
பினாதி யுடல்பெருக்கு வித்துத் — தனாதி
யறிவுள்ள தெல்லா மளிப்பன் மலத்தின்
திறமுள்ள தெல்லாந் தெகித்து. (௬௯)

தன்னியல்புக் கில்லைத் தகும்பிறவி யெப்பொருட்கு
மன்னு பொதுவியற்கே வாய்த்ததாந் — துன்னு
முயிர்க்குப் பிறவி யில்லையென்றான் மற்றென்றால்
மயக்கப் படாவிடத்தே மன். (௭௰)

அறிவித்தா லெல்லா மறியுந் தனித்து
மறுவற்று நின்ற வழக்காற்— செறிவி
லறிவித்தா லெல்லா மறியா பொதுவாய்
மறுவற்று நின்ற வழக்கு. (௭௧)

படிக மொருபொருளைப் பற்றிவிட்டுப் பற்றி
முடியி னொருபொருண்மேன் முற்று—நெடிய
மலமொருகா லாவி மனுவொருகா லீச
னிலையொருகா லென்ன நினை. (௭௨)

பன்னிறத்தோ டொத்த படிகம் பகனடுவிற்
றன்னிறமே கண்ட தகைமையென—மன்னிறந்தா
னுற்றபோ தாவிக் குபாதியற்றுத் தன்னியல்பே
பெற்றிடுவ தாகப் பெறும். (௭௩)

பற்றும் படிகமது பற்றைவிட்டுப் பற்றியபின்
முற்று மொருபொருளை முற்றினன்—மற்றொன்றைப்
பற்றா ததுபோற் பரசிவத்தோ டொன்றுபட்டங்
குற்றார்க் கிலைபிறிதென் றோர். (௭௪)

உற்ற சகல முறுங்கே வலமலத்தாற்
கூற்றமுற்ற நித்திரையே கொண்டதான்—மற்றவருட்
டட்டி யெழுப்பத் தரும்பிரம மாய்த்திரிந்தங்
கொட்டியதே சாக்கிரமென் றோர். (௭௫)

நெடிய வுடலனைத்து நீக்கித்தா னுதல்
முடியு மதுவே முடிவாற்—படியினுறச்
செய்யா திருக்குந் திறமே மறுமையென்கை
மெய்யா யிருக்கும் விதி. (௭௬)

சுத்தப் படிகமெனத் தோய்வற்ற போதாவி
நித்தியமே யென்ன நிகழ்த்தித்தன்— சத்தியோ
டொன்றா யனுபவித்தங் குற்றதனை நோக்கிப்பின்
நின்றாவ தன்றோ நிலை. (௭௭)

தன்னை யநுபவிக்குஞ் சம்புத்தன் சத்தியெனு
பின்னை யநுபவிக்க மேவுங்காற்—றன்னு
முலகுதிக்கு மாங்கவனை யொன்றும்போ தெல்லாம்
விலகுமுயிர்க் கீதே விதி. (௭௮)

தன்னறிவை நோக்கித் தழுவும்போ தீசற்குப்
பின்னமற்ற தாகப் பெறுமன்றோ — துன்னு
மிவனை யறிவுற் றிசையும்போ திங்கே
சிவனருளைச் சேர்வனெனத் தேர். (எகூ)

சிவசத் தியைப்புணருஞ் சீவன்முத்த ரென்ப
தவசத்த மென்ப தறிவேற் — பவசத்தி
யீட்டுவிக்குந் தீப்பிறவி யீங்கிதனை யீசனரு
ளோட்டுவிக்கு மென்றே யுணர். (அ0)

கண்ணாதனை யுற்ற கடிய விருளதனைக்
கண்ணெறியோ வுற்ற கதிரொளியோ — கண்ணகல
வோட்டுவதிங் கேதோ வுறுமுயிரின் றீதிருளை
வாட்டுவதிங் கேதோ மதி. (அக)

நீங்கு மலத்தை நிகழருளே மெல்லமெல்ல
வாங்குதலைச் செய்த வகையன்றோ — தீங்ககலச்
செய்தா ருளத்திருக்கத் தேற்றமே போதுமென்கை
பொய்யாகு மென்னப் புகல். (அஉ)

நீக்கு மறைப்பதனை நீக்கி யுடலனைத்தும்
போக்குதற்குச் செய்ததருட் பொற்பன்றோ — காக்கு
மரனே யிலையா கென்றமல மெல்லாம்
வருமே யுளத்தை மருவி. (அ௩)

அறிவித்தா லொன்று மறியாய்பொய் வஞ்சம்
பிறிவித்தா லுண்டோ பிறிவங் — கறிவதற்கங்
குற்றவா றேதோ வுறுமுடலைப் பொய்யாக
வற்றவா றேதோ வறை. (அச)

பிறப்பித்தா லன்றிப் பிறவா வுலகி
லிறப்பித்தா லன்றி யிறவா — துறப்பித்த
தாரோ வெனவு மறியா வுயிராற்கு
நேரோ வெனவு நினை. (அரு)

மாற்றும் பளிங்கொன்றை மாற்றுமோ வுச்சியின்மேற்
றோற்றுங் கதிர்வந்து தோற்றுக்காற் — போற்று
முடலனைத்துந் தீர வொழிப்பாரா ரீசன்
றடையனைத்துந் தீரானேற் றான். (அசு)

பற்றைவிட்டுப் பற்றும் படிகங் கதிரகன்று
நிற்றலினு லன்றோ நினையுங்கால்—மற்றதுபோற்
றொட்ட வாளை தொடாதவற்று லாவிழுதல்
விட்டதனைத் தேடும் விரைந்து. (அஎ)

இச்சை யறிவுதொழி லெல்லாமெய் யாவியின்மேல்
வைச்சன்றோ தீர்த்தான் மலமனைத்து—நச்சு
மவனு யிருக்கைக் கருள்பெற்று ரன்றோ
சிவனு யிருப்பரெனத் தேர். (அஅ)

திரிவற் றுயிர்க்கோர் செயலற் றருளிற்
பிரிவற்று நிற்கின்ற பெற்றி—தெரிவற்று
நிற்பதுவே சொற்பனமா நீள்சிவத்தி லொன்றாக
வைப்பதுவே முத்தி வழக்கு. (அக)

கருவி யனைத்துங் கருதித்தா னுக
விரவும்போ துண்டோ வெறுப்பு—மருவுமருட்
காட்டியபோ தன்றோ கருதுமுடல் வேறாக
வோட்டியவா றன்றோ வுணர். (கூ0)

காயமே யுள்ளங் கருதுமுயி ரீசனெனத்
தோயி னறிவு தொடுமென்றான்—ஞாயத்
தொழிலோ டுடன்பட்டுத் தோன்றியதிங் கெல்லாம்
வழுவா திருக்கவுமாம் வந்து. (கூக)

ஆணவத்தை நெஞ்ச மடையும்போ தாங்கதுவாய்க்
கோணுவதே யன்றியதைக் கொண்டதுண்டோ—தாணுவனைக்
காமித்து மிக்க கரிசறுத்துத் தன்னருளிற்
சேமித்த தீசன் செயல். (கூஉ)

ஆவி யனைத்திநுக்கு மாதிக்க மாம்போது
மேவி யதுவாய் விளங்கிற்றோ—வாவியன்றித்
தானே யவையையுறத் தங்கிற்றோ பேதமற
வூனே ததனை யுரை. (கூங)

வீட்டுந் தருவினுக்கு வேண்டும் பணியதனைப்
பூட்டும்போ தொன்றுபட்டுப் பூட்டுமா—வாட்டியவ
னங்கத்தைக் கையா லறுக்கும்போ தவ்வங்கஞ்
சங்கத்தை மாற்றுமோ தான். (கூச)

உள்ள நடந்தவழி யூனடக்கு மூனதனைத்
தள்ளவழக் குண்டோ தரிக்குங்கால் — மெள்ள
நடத்துவான் றானை நடப்பதல்லா னண்ணித்
தொடுப்பதுவு முண்டோவின் சொல். (௬௫)

தோற்றுவிப்பா னெங்கே துலக்குவா னெங்கதனைப்
போற்றுவா னெங்கே புகுந்திடுவான் — மாற்றமரு
வீசனு மெங்கே யிருப்பானோ வெவ்வுலகு
நாசமே யாமா லயந்து. (௬௬)

ஆதலினாற் றோற்றமுத லைவருக்கு மோரிடமே
பூதலத்தி லுண்டோ புகலுங்காற் — றீதுநன்கு
செய்வா ரிருந்து செய்வரெனி லைந்தொழிலு
மெய்யாமற் றென்னை யியல்பு. (௬௭)

எல்லாத் தொழிலு மியற்றுவிப்பா னல்லாமல்
வல்லார்கள் வல்லவகை போல — வெல்லா
நடத்துவான் மற்றோர் வினைவழியை நாடி
மிடற்றில்விடம் வைத்தான் விரைந்து. (௬௮)

தொடர்ந்தமல மைந்துந் தொடர்ந்துயிரைப் பற்றி
மிடைந்திடவே செய்யும் விதியா — லடைந்த
வறிவோ டறிவா யறிவுறுத்தி யீசன்
செறியுமலந் தீர்ப்பனெனத் தேர். (௬௯)

அஞ்சு தொழிலு மவையுரிய மாவியுற்ற
நெஞ்சின்மேல் வைத்த நெறியாகு — மஞ்சுமவை
னெல்லா மறித வியல்பறிவா லீசனுக்குச்
செல்லா தெனவே தெளி. (௭௰)

பேரறிவே யீசனுக்குப் பேராத சிற்றறிவு
சாரு முயிர்க்குத் தருமலத்துக் — கோற்றவு
மின்று மிவையே யியல்பாங் குணிகுணங்க
ளொன்றும் பிரிப்பதல வோர். (௭௧)

பதிக்குப் பசுவன்றோ பற்றியதோர் மேனி
விதிக்கிற் சுதந்தரமாய் மேவு — மதித்துத்
துடைக்கி லயலாந் தொடர்ந்தவுரு வாவி
துடைப்பதல வென்னைத் துணி. (௭௨)

ஆதி மலப்பிணியா லாதுர லாதரற்கு
மேவும் பிணியை விளக்கெனக் — கூவு
மகப்பித்தை மாற்ற மருவியதோர் தந்தைக்
ககப்பித்தை யுற்ற தறி. (௱௩)

உடற்குயிர்போ லீச னெனுமா னுயிரி
னடக்கையுற நின்ற நடையா — லெடுக்கும்
பிறப்புத் துயரம் பிரியா தவர்க்கே
யறப்புகுதும் போனு மறி. (௱௪)

பிறப்புத் துயரமது பேரறிவுக் கல்லாற்
சிறப்பித் துயிர்நோக்கச் செல்லா — மறைப்பகலைத்
தோற்றமுத லைந்துந் தொடுத்தான் கருணையினான்
மாற்றுதற்கே யாக மதித்து. (௱௫)

பிணிக்கு மருந்து பிரியாம லின்று
திணிக்கு மவனதனைத் தின்றான் — றணிக்குமல
மீசன் பிறப்பிறப்பை யாக்கியவை யெல்லா
நாசமே யாக்குமெனு நாடு. (௱௬)

எல்லா வுயிர்க்கு மிசைந்தவுயி ராலுமிக
நில்லாமல் மாய நிலாதானுஞ் — செல்லாப்
பிறப்பிறப்பா மென்னுமிந்தப் பேத மரற்கே
யுறப்படுவ தல்லவென வோர். (௱௭)

ஈச னருளுக் கிசைந்ததனு வுள்ளமெனப்
போசுவதே யுள்ளதெனும் பெற்றியா — ஐசமிலா
வங்கமே யின்றே லறியா வுடற்குமதன்
சங்கமே யின்றேற் றடை. (௱௮)

பதிபசுவை யின்றியொன்றும் பற்றா பசுவும்
பதியையின்றி யொன்றினையும் பற்றா — பதிபசுவோ
டத்துவித மாயங் கலைந்துமறி விந்துமலப்
பித்தறுத்து நிற்குமருட் பேறு. (௱௯)

பசுபதியோ டத்துவிதப் பண்பதனைப் பற்றிப்
பசிபதமே யென்பதனை யாய்ந்து — விசிவசித்தங்
கொக்கதனோ டொத்தங் குறுவதன்றே நேயமலக்
கொக்குறுத்து நிற்குங் குறி. (௱௰)

ச்சினமாகு மாவி
நசாக்கோ சிறிதறிவை நண்ணும்—பசக்குமரு
ளாவியே யங்கத்தைப் பற்றியறி யாவேற்
றேனவயே யில்லையங்கந் தேர். (௱௧௧)

பற்றைவிட்டுப் பற்றும் பசுவதனைப் பற்றிநின்றங்
கூற்றறிவ தென்றே யுணருங்கால்—நற்று
யாற்கொன்றை வேண்டி யறியான் மலத்தைத்
தூரத்துதற்கே யாகவெனச் சொல். (௱௧௨)

புணர்வா னெனினுங்
குணத்தின்மா லுற்றுக் குறியான்—நினைத்தவர்க
ளுழினைத்து நோக்கி யொழிப்பான்மற் றல்லாத
பாழினைத்து நோக்கான் பரிந்து. (௱௧௩)

அரனுயிர் போலென்று மாவியுட லென்றும்
வரினே பொதுவாக மன்னுந்—தரமே
பிரித்தெனக்குப் பெத்தமுத்திப் பேதமெலாங் காண
விரித்தெனக்குச் சொல்வாய் விரைந்து. (௱௧௪)

தோற்ற முதலாகத் தோன்றியபோர் நால்வருமே
யாற்றியதோர் பெத்தருக்கே யாகுமால்—மாற்றியெல்லாம்
நின்றார் தமக்கே நிகழு மனுக்கிரக
ரொன்றுவார் முத்திக் குணர். (௱௧௫)

ஊனற்று மாவி யுயிரற் றறுமலமாய்த்
தீனற்று மாங்கதற்கே செல்லாதாற்—றூனற்று
நின்றபோ தாவிக்கு நீழ்பொசிப்பே யில்லைமலம்
வென்றபோ துண்டோ வினை. (௱௧௬)

ஊனு முயிரு மொருங்கொப்ப நிற்பதுயி
ரூனதனை யாகா வொழுங்கென்ன—வூனின்று
தினற்றும் போது செலுத்து முடலுயிரிற்
றூனற்ற போதானுந் தான். (௱௧௭)

அருந்து முயிரை யருத்தியதாய்ச் செப்பல்
பொருந்தியதே யன்று புகலில்—வருந்திமிக
வுண்ணவா வென்று முடற்கிசையா தென்றுமிக
வெண்ணியவா றேதோ வியம்பு. (௱௧௮)

உண்டே னெனவுரைத்த தெல்லா முயிர்மலமாய்ப்
பண்டே யிழந்துடலாம் பண்பன்றோ—வுண்டே
யுடலோ டுயிரென் றுணராத வற்கே
திடமா யுரைப்பதிலைத் தேறு. (௧௧௯)

தனுவே வினையதனைச் சாரு முயிரி
னினைவே யறிவாகி நிற்கு—மினமே
யினத்தோ டிசைத்தங் கிருப்பதல்லான் மாறி
மனுமேல் மயக்கமேன் மன் (௧௨௦)

வாழுந தனுவுயிரான மறறமல நோயாக
ஆழை யுறுமருந்தா யூட்டிடுமென் றாம்—வாழ்விக்கு
மாதவிறு லீச னுயிர்க்குயிரா மென்றுமவை
யோதலா மென்ன வுணர். (௧௨௧)

தனுவிக் கிசைந்தகிலங் தங்கியதே யாவி
மனுவுக் கிசைய மருவா—நினைவுக்கு
வேண்டியது முண்டோ விரும்பு முலகதனிற்
பூண்டதுவே யாகும்வினைப் பொற்பு. (௧௨௨)

உற்றதோ ராவிக் குறுந்துன்பம் வஞ்சமெனச்
சொற்றதென்ன வேறே சுகமுண்டோ—குற்றமற
விட்டவர்க்கே யாகும் விரிந்தறிவால் மேலறிவைத்
தொட்டதனு லாகுஞ் சுகம். (௧௨௩)

அருவே லெவரு மறியா ரறிவங்
குருவே லுலகத்தோ டொன்றும்—மருவுமுயிர்
காமித் தருந்தக் கருதியதோர் மேலறிவைச்
சேமித் திருப்பதெங்ஙன் செப்பு. (௧௨௪)

அறிவோ டறிவா யறிந்து முயிரி
னிறைவாகி யெவ்விடத்து நின்றும்—பிறவா
முருவாகி யெங்கு முறைந்தும் பொறியில்
வருமா லுலகமென மன். (௧௨௫)

மருவும் பொறியை மருவாத போது
தெரியும் பொருளைத் தெரியா—வொருவுமல
மாட்டியபோ துண்டோ வாற்கன்பங் காங்கதனை
யோட்டியபோ துண்டாமென் றோர். (௧௨௬)

மலமற்றார் தம்மை மதிக்குங்கால் வஞ்சக்
குலமற்று றென்னக் குறிப்பான்— நலமுற்ற
காயந் தனதாய்க் கருதுமுயிர் தானுயுந்
தோயுமா வீசனெனச் சொல். (௧௨௭)

வஞ்சங் கெடுப்பாரை வஞ்சமென்ப தெல்லாம்போய்
நெஞ்சத்தார்க் குள்ள நினைவாகும்—கொஞ்ச
மலவே ரறுத்தார்க்கு வாய்த்தசிவ மல்லாற்
சொலவேறொன் றில்லையெனச் சொல். (௧௨௮)

ஒட்டுமல மாவி யுயர்சிவமு மோருருவைத்
தொட்டுநிற்கு மார்க்காகச் சொல்லுமே—னட்ட மோ
ராதிக்கி நெஞ்சேகை யடைந்த தவர்க்காகச்
சோதித்து நன்றாகச் சொல். (௧௨௯)

காயமே தானாய்க் கருதுவிக்கும் வஞ்சத்தைத்
தோயவே நெஞ்சைத் துணிவிக்கும்—நேயமா
மீசனையே நெஞ்சி லிழப்பிக்கும் மங்கையர்பால்
வாசமே யாக்கும் மலம். (௧௩0)

அங்கங் கசந்தங் கறிவே யினித்துமலச்
சங்கமெலாந் தீதாகத் தள்ளிப்பின் – பொங்குமரற்
கன்பே புகுவித் ததுவா முயிரென்னுந்
தன்பெருக் குற்ற சதிர். (௧௩௧)

தோற்ற முயிரின் றுயர்க்கிரங்கல் மற்றதனைத்
தோற்றுதற்கே யுள்ளத் திறஞ்செய்தல்—போற்றன்மிகும்
பூசை யனுக்கிரக மெல்லாம் புணர்தலருட்
டேசனார்க் குற்ற செயல். (௧௩௨)

உலகுடைமை யாவி யுறுமடிமை யாக
நிலவுலக மெல்லா நிறைந்து—குலவுபர
னூட்டியதே யல்லா லவனுக்கு மற்றொருவ
ரூட்டியவா றேதா முரை. (௧௩௩)

நீராகிப் பூவாய் நெருப்பாய் நிகழுமாற்
சீராகி யெங்குஞ் செறிவாற்குச்—சார்வாவா
ரூட்டுதற்கு முன்ன முறைவா னதுவாய்க்கை
காட்டும்போ தூண்டதலைக் காண். (௧௩௪)

கண்டிருப்பார் தங்களுக்கே காட்டியதுங் காதலித்தங்
குண்டிருப்பார் தங்களுக்கே யூட்டியதும்—பண்டறியோர்
மெல்லாத் தினுள்ளு மிசைவார்க்கே யாங்கொடுக்கச்
செல்லா தெனவே தெளி. (௧௩௫)

அத்துவா வாறு மவரவர்க்கே யாய்நிறைந்தங்
கொத்ததா வீசனதை யோர்கிலான்—கத்தனென
நற்றினு னாகி னயவாப் பிணியவர்க்கு
முற்றினுற் போலு மொழி. (௧௩௬)

ஈசனே யெல்லா மிசைப்பான்மற் றெவ்வுயிர்க்கு
மீசனே யெங்கு மிசைவதா—மீசனே
யூட்டுவா னெவ்வுயிர்க்கு முண்ணு மொருவன்னைக
காட்டினு னல்லாமற் காண். (௧௩௭)

பித்துள்ள போதே பெருமருந்து முண்டாய்ப்பின்
பித்தகற்ற வந்ததன்றோ பேய்க்காற்—சித்தமல
மோட்டுதற்கே யாமா லுறுங்கன்ம மீசனுக்கங்
கூட்டுதற்கே யாமாமென் றோர். (௧௩௮)

சரமசர மென்னத் தரிக்குமரன் றானே
வரமெவர்க்கு மீய வருமாற்—றரமறிந்தங்
கூட்டியபே ரன்றோ வுழமலத்தோ டைந்தினையும்
வாட்டியபே ராவார் மதி. (௧௩௯)

மருத்துவற்கே மற்ற மருந்துடைமை பித்தைத்
துரத்துதற்கே யுற்றதொரு தொந்தங்—கருத்தனடி
காட்டுதற்கே யுற்ற கருவி கருமமாற்
கூட்டுதற்கே யாகுமென வோர். (௧௪௰)

கருவற்றா ரேனுங் கருணையே தோற்று
முருவற்றான் மெய்ப்பசியு முண்டாந்—தெரிவுற்றங்
கூட்டாத போதொன்று முண்ணார் பசிப்படுவ
ரூட்டுவதே முத்தற் கொழுங்கு. (௧௪௧)

கருமமல மல்லக் கருதுங்கா லீசன்
றருமமே யாகத் தருமாற்—பொருமலத்தை
யோட்டி யுயிருக் குறுமன்பே யாக்கியராற்
கூட்டுதற்கே நிற்குமென வோர். (௧௪௨)

பொருந்தும்வினை யெல்லாம் புகுமலமே தானு
மருந்து மலத்தா லருந்தத்—திருந்தமலந்
தந்தவர்க்கே யூட்டத் தருமாற் றருமருட்குச்
சந்தையமின் றாகத் தரும். (கசங)

தோற்று மலப்பிணியைத் தோய்வார்க்கு நன்மருந்தான்
மாற்ற வரனை மருவுமாற்—றேற்றமா
யெல்லாப் பொருளு மிசையுமா லீசனுக்கு
நல்லா ரருத்துவதே நன்று. (கசச)

தனுவும் வினையுந் தருமுலகந் தானு
மனமு மலமு மருவி—வினைமலத்தை
யோட்டுதற்கு மாகு முறுமரற்கே யன்பாக
வூட்டுதற்கு மாகுமென வோர். (கசரு)

நீண்ட தவத்தோர்க்கு நிகழ்மலத்தார் தங்களுக்கு
மாண்டவினை யுண்டாங் கருளானேல்—வேண்டும்
பலமடைவ தெவ்வாறு பண்பிலார் தங்கள்
மலமுடைவ தெவ்வாறு மன். (கசசா)

மலநோய் கரும மருந்தா லுயிர்க்கு
நலமா யருந்துதலே நன்று—மலநோய்
வருத்துமவன் றின்ன மருவு மதனை
யருத்துமாற் கேளு மறை. (கசஎ)

ஆவி யனாதி யடிமை தனுவினையு
மேவு முடைமையென மேவியதாற்—பாவும்வினை
யுண்ணும்போ தீசனுக்கே யூட்டிப்பின் னுண்ணுமதே
நண்ணுமுயிர்க் குற்ற நலம். (கசஅ)

அருத்துமவ னேனோ வருந்து மலத்தைத்
துரத்துதற்கே யாமாற் றொலையக்—கருமத்தை
யீட்டுந் தவத்தா லிசைந்ததெல்லா மாங்கவற்கே
யூட்டுதற்கே யாகுமென வோர். (கசகூ)

ஆற்றுந் தனுவி லடைந்தபொசிப் பாலுற்றுத்
தோற்று மரனைத் துடருமாற்—றேற்றும்
வினையே மருந்தாய் விரும்பியது மீசன்
றனையே நினைவதற்காந் தான். (கருய)

ஊனுருவப் பிரு மொருங்கொப்ப நிற்பினும்பி
னூன்புசிப்பை நோக்க லொழுங்காகும்—வானேயு
மாவிக்குப் போக மரனு மதுவாக
மேவியபோர்க் காகும் விதி. (௯௧)

பொசிப்பாங் கருமம் பொசிப்பாரைப் பற்றி
யிசைப்பா னரனூனை யெண்ணுன்—பொசிப்பு
மல்லாம னின்று மருவுமா னுண்டு
சிலவான போதானுந் தேர். (௯௨)

அருத்து மருந்தீசற் கருத்து மதனுலோ
வருத்து மலப்பிணியை மாய்த்தோங்—திருத்துங்
கரும மருந்திக் கருதுமத னுலோ
வருமமையா லொன்றை மதி. (௯௩)

மையமேல தானய் மருவு மலநோய்க்கு
வையமே நன்மருந்தாய் வாய்த்ததாற்—கையகல
நோக்கும்போ தீசனையே நோக்குமா லாங்கதனைப்
போக்குமே நெஞ்சே புகுந்து. (௯௪)

மலமகன்று சன்றே வருமரனை நோக்கும்
மலமுடையா ரெவ்வாறு மன்னும்—பலமே
பரிந்தரனை நோக்கும் பரிவினுற் சற்றுந்
தெரிந்ததல வென்னத் தெளி. (௯௫)

வினைநோக்க மல்லால் விரும்பியதோ ரீசன்
றனைநோக்க மின்றாய்த் தருமால்—மனநோக்க
மாற்றியபோ தன்றே மருவுமரன் றனுகத்
தோற்றியவா றருமெனச் சொல். (௯௬)

ஆகத்தார் தீதா மருவினையை நோக்கின்மல
பாகத்தா ராகப் பிடிவரான்—மோகத்தா
லீசன்மே லன்பே யிசைவார்க்கே தீயமல
நாசமே யாகுமென நாடு. (௯௭)

இருளி லிசையா திசைந்த கருவி
மருளி லிசைய வருமா—லருளதனை
யொட்டவொட்டத் தானே யுறுமலத்தின் சத்திகெடப்
பட்டதென்ன நெஞ்சே பகர். (௯௮)

உயிர்க்கோ பிணிமற் றுறுமுடற்கோ வென்னின்
மயக்க மிருவகைக்கு மன்னு—மியக்குந்
தனுவும் வினையுந் தரும்பிணியே யாயு
நினைவா லடங்கிவிடு நேர். (௧௫௯)

காட்டத் தடங்குங் கருதியதீத் தானந்தக்
காட்டமே யாகாக் கணக்கேபோ—னூட்டமைத்
தொத்த கருமமுழு மான்பா லொத்துமைக்
கொத்தனுக்கு மென்னக் கூறி. (௧௬௰)

மருந்துநோய் தன்னை மருவு மருந்தும்
பொருந்துநோய் தானாய்ப் புகுமாற்—றிருந்து
மனோநோய றுந்த மருந்த மருவிச்
சிலநா ளிருக்குமெனத் தேர் (௧௬௧)

மனப்பிணியை மாற்று மருந்தாங் கரும
மனற்பிணியோ டொன்று யழுந்தி—மனப்பிணியை
மாற்றி யானை மருவி யவனைத்
தேற்றுமே செந்தேச தாணி. (௧௬௨)

அருந்து மருந்தை யருந்துமனற் கூட்டித்
திருந்தவழி பாடெவருஞ் செய்யார்—மருந்து
தகியே பெறுமாற் றந்தவர்க்கே யன்பர்
மதியா லுருக்துவதே மாண்பு. (௧௬௩)

மனமே பிணிகரும மாற்றுமருந் தீசன்
குலமே யெனநடக்குங் கொள்கை—மலமகல
னூட்டிதற்கு மாகும்பின் னூட்டி மாற்றேககருதி
யூட்டிதற்கு மாகுமென வோர். (௧௬௪)

மனமே யனாதி மருவுங் கருமக்
குலமே யானீக்க கொள்கை—நலமா
முயிரே மலமா மொடுங்குமா மெல்லாஞ்
செயிரே யெனவே தெளி. (௧௬௫)

மலமுந் தனியாகு மற்றுயிரா யுற்ற
குலமுந் தனியாகக் கொள்ளு—நலமாகு
மீசனேயாகு மிசைந்த தனுவினையு
மாசறுகுஞ் சத்தியென மன். (௧௬௬)

பிறியா தறியாமை பேரா தனுத்
செறிவாந் தனுவினைமேற் சிந்தை—குறியாஞ்
சிவத்தோ டணையாது சேர்ந்தெல்லாம் பொல்லாப்
பவத்தோ டணைக்குமலம் பார். (கசுஎ)

வையமெல்லா மெய்யாக வந்ததுவு மற்றுயிரின்
செய்கை மறமாகத் திரிந்ததுவு—மெய்யாந்
தனுவும் பொசிப்புந் தருமாற்கு மாறு
நினைவுமல மென்ன நினை. (கசுஅ)

மலமே யதன்மத்தை மன்னு மதனி
னலமே தருமத்தை நண்ணு—மலமே
தெசித்தார்க்கே யாகுஞ் சிவதரும முற்று
நசித்தபோ தாமுத்தி நாடு. (கசுகூ)

மலப்பிணியை யுற்றார்க்கு மாசிவமே கைப்பா
மிலத்தொழில்க ளெல்லா மினிப்பாம்—மலப்பிணிநோய்
தீரும்போ தீசனிலை தித்திக்குங் கைப்பாகுஞ்
சாரு மிலத்தொழிலே தான். (கஎ0)

கருமமருந் தோயின் கருதானே வெண்ணி
விருவகையு மொன்றா யிசையும்—மருவுந்
திருவுருவே தானாந் திகழ்கரும மாமால்
மருவுமருந் தென்ன மதி. (கஎக)

பிணிக்கு மருந்து பிரியாம னின்று
தணிக்கு மருத்துவனைச் சார்ந்து—பிணியை
வருத்தியதின் குற்ற மருந்தோ மருத்துவனோ
திருத்தமா யென்றதனைச் செப்பு. (கஎஉ)

மருந்தே பிணியை வருத்தின் மருத்துவனைத்
திருந்தவழி பாடெவரே செய்வர்—பொருந்துமவ
னுற்ற மலத்தை யொழிப்பன் கருமத்தாற்
பற்றிவழி பாடெவர்க்கும் பாங்கு. (கஎங)

ஆவி நிருமலமே யான தரனுக்கு
மேவி யருத்தும் வினையாமாற்—கூவுஞ்
சரியாதி நான்குந் தரித்ததனு லன்றோ
பிரியாச் சிவனை பேறு. (கஎச)

திருமலனே யாகி திருமலமே யாக்கி
யொருகலமாய் நிற்கை யொழுங்கா—முருமலத்தை
மாற்றி யவனே மருவுமா லாங்கவற்குந்
தேற்றமே யில்லையெனத் தேர். (கஎரு)

இருளகலா தாரு மிசைந்தவொளி யல்லான்
மருளகலு மீசன் மருவிற்—றெருளுநங்கா
லத்துவித மாமா லடைந்த தனுவினையுங்
கத்தனுக்கே யாகுமெனக் காண். (கஎசா)

ஊனற்றும் போக முயிர்நற்றிக் கென்னவுயிர்
தானற்றும் போகந் தலைவற்காந்—தினற்ற
ஆற்ற மலத்தா லாறுமே லரன்கருணை
பற்றியதா லுண்பான் பரிந்து. (கஎஎ)

மலத்தோ டடங்கி மருவியபே ருண்பா
மலமே யருந்த மருவா—நலமாரு
மீசனே டொன்று யிசைவா ரருந்துமிக்க
வீசனே யுண்ணுமென் றெண். (கஎஅ)

ஆவி மலத்தோ டடங்கவது தானுக
மேவி யதுவாய் விளங்குமா—லாவியெனத்
தானே யிலையாற் றருமலமே தானுரு
மூனு மதுவாமென் றேர். (கஎகா)

சிற்றுயிரோ யுற்ற செயலானற் றேவனுக்கு
மற்றுருவாய் நின்று மருவுமா—லுற்றமலச்
சேட்டையே மாற்றுஞ் செயலாற் சிவனுக்கு
நாட்டமே யாகுமென நாடு. (கஅய)

வினைமருந்தா னேக்கி விரும்புங்கா லீச
னினைவனைத்துந் தானுகி நிற்பன்—பினைமலத்தி
னோட்டமே யின்றே நடந்தமல மைந்தும்பி
னோட்டமே யன்றே வுணர். (கஅக)

மருத்துவனே யீவான் மருந்து பிணியைத்
துரத்துதற்கே யன்றே தொலைந்தாற்—கருத்தனடி
நோக்குவதே யாமா னுண்ணியதோர் தீமலத்தைப்
போக்குங்கா லீசற்காம் பொற்பு. (கஅஉ)

அற்றார் தனுவி லடைந்தவினை யெல்லாம்பின்
மற்றா ரருந்த மருவுவா — றுற்றவுயிர்
மன்னியவன் றானான் மற்றுயிரைப் பற்றும்வினைக்
கன்னியமே னாவா னரன். (௧௮௩)

அடைந்தார் தனுவி லடைந்தவினை யன்றோ
தொடர்ந்தார் மலத்தைத் துடைக்கு — மிடைந்த
தொடர்பே யிலையாற் றொடர்ந்தமல மாற்ற
நடையேது மில்லையென நாடு. (௧௮௪)

புன்மலமே யற்றார் பொருந்துந் தனுவினையு
நின்மலமே யாய்நிறைந்து நிற்குமேற் — கன்மம்
பலர்பா லிருக்கப் படுமேற் றருவார்
மலமா லறுக்குமென மன். (௧௮௫)

கருமத் தொடர்ச்சி கருதிலிங்கத் தின்று
மருவும்வினை யெங்ஙன் வருமோ — பெருகுந்
தவத்தோர்க்கே பிச்சை தருமாற் றகுதி
சிவத்தோ டிணையுமெனத் தேர். (௧௮௬)

அருந்தும் வினையை யருந்துன மலத்தாற
றிரிந்து தனுவே செனிக்கும் — பொருந்து
மருளோ டிணைவா ரருந்தியதிங் கெல்லா
முருவோ டிணையாதென் றோர். (௧௮௭)

தனுவு முயிருந் தருமலத்தா லொன்றுந்
தனுவே பொசிப்பதனைச் சாரு — நினைவாகு
மாவிக்குப் போக மரனா முடனுயிரு
மேவியபோ தொன்றாயும் வேறு. (௧௮௮)

தனுவும் பொசிப்பைத் தவிரா மலத்தை
மனுமாற் பிறவி மருவுந் — தனுவும்
பொசிப்புஞ் சிவத்தைப் பொருந்தின் மலத்தைத்
தெசிக்குமென நெஞ்சே தெளி. (௧௮௯)

உயிர்க்கு மயக்க முறுமலமே தானாஞ்
செயற்குக் கருமந் திகழ்மருந்தா — னயக்கு
மரனே மருத்துவனா யாங்கருத்தி நின்று
வசலா லகனுமென மன். (௧௯௰)

உருவும் வினையு முறமருந்தே யாமாற்
கருது முருவசனைக் காட்டி—மிருவினையு
மூட்டுமாற் கன்பா யுறுமான் மலப்பிணியை
யோட்டுமென நெஞ்சே யுணர். (ககக)

கருமத்தா லாகுங் கருதுமுட லீசன்
றருமத்தை நோக்குதற்குஞ் சாரும்—வருமத்தா
லாட்டதற்கு மாகு முறுமாசனைத் தானே
வீட்டுதற்கு மாகுமென வெண். (ககஉ)

தனுவுள்ள போதே தகும்புசிப்பு முண்டாய்
மனதிருந்த வாறே மருவும்—பினமா
மலத்தோ ரூணுவார்க்கு மன்னுசிவந் தானே
நலத்தோ டணுவார்க்கு நன்று. (ககங)

அணியு மலமே யறியாமை யாமாற்
பிணியா மெனவுரைத்த பெற்றி—பணியுங்
கருமமருந் தென்னக் கருதியது மீசற்
கொருமைப்பா டாக்குமா றிற்று. (ககச)

வினையுந் தனுவு மிருமருந்தே யாமா
னினைவே தனுவாக நிற்கு—மினமாங்
கருமம் பிரியாக் கருதசனைக் காட்டுந்
தருமம் புசிப்பாய்த் தரும். (ககரு)

அறிவா யிருந்தங் கருந்துங்கா லாகுஞ்
செறிவாம் வினையுந் திரிவாம்—பிறியா
மலப்பிணியு மாறு மருவுமான் முரித்
றலைப்படுவ தாகத் தரும். (ககசு)

மலமேமற் றெல்லா மருவும்பின் னீசன்
குலமே யதைமாற்றிக் கொள்ளு—மிலையாம்
புசிப்பே யுயிர்க்குப் பொருந்துமா னல்லால்
வசிப்பேது மில்லையென மன். (ககஎ)

அறிவே தனுவை யடைப்பி னறிவும்
பிறியாத் தனுவாகும் பெற்றி—மறமாந்
தனுவே யறிவோ டடையின் றனுவு
மறிவா மெனவே யறி. (ககஅ)

அறியாமை நோய்க்குக் கறிவா மருந்தைத்
தெறியா யருந்துங்கா னீங்குஞ்—செறிவா
யகத்தோ டணையு மரனோடெ நானுஞ்
சுகத்தோ டிருக்கத் துணி. (௧௯௯)

பாகத்தா ரெல்லாம் பருகுவார் நற்கருணை
யாகத்தை யன்றோ வறையுங்கால்—மோகத்தா
ரெல்லார்க்குந் தோற்ற மிசையுமரன் மேற்கருணை
வல்லார்க்கு மீதே வழக்கு. (௨௱)

காய மலமலவே யானாலுங் காணாமலந்
தோயுமா லாங்கதுவாய்ச் சொல்லுவதாம்—ஞாயமாங்
காய மருளலவே யானாலுங் காணாமரன்
றோயுமா லாங்கருளாய்ச் சொல். (௨௱௧)

ஆவிதா னற்றங் கருளோ டழுந்தியருட்
டேவி செயலனைத்துஞ் செய்வதெனக்—கூவல்
சுழுத்தி பிரித்தரனே தானாகச் சூழ்ந்தங்
கழுத்தியதே முத்திக் கழகு. (௨௱௨)

அருளிலய மாமா லாங்கதற்கு மேலாம்
பொருளுண்டே யில்லைப் புகுவா—யிருளை
விலக்கி யொளியே விரிகதிரைக் காட்டிக்
கலக்குமரு ளீங்கிதுபோற் காண். (௨௱௩)

பன்னிறம்வந் தற்ற படிகம் பலவணமாய்த்
தன்னிறமே காட்டுந் தகைமையென—மன்னிறம்வந்
தொட்டியபோ தாவி யொடுங்கிவிளங் காததனா
னட்டமே யில்லையென நாடு. (௨௱௪)

ஆவி சிவத்தி லமர்வ தகலாற்பின்
மேவி விளங்கா விதியென்னி—லாவியரன்
வாசமே யாக மருவியதோ ரங்கமாய்
நாசமே யில்லையென நாடு. (௨௱௫)

அளியி லழுந்துமரு ளானந்தந் தானா
யொளியி லொளிக்கு முருவை—வெளியி
லொடுக்குவதே நற்றுரிய மொத்தசிவந் தானா
யடக்குவதே முத்திக் கழகு. (௨௱௬)

மனத்தினி லூற்ற மறைப்பதனை மாற்றி
யனைத்துலக மெல்லா மகற்றி—யெனக்குயிராய்த்
தேற்று மருளின் செயலகற்றித் தானாகத்
தோற்றுஞ் சிவமதிதஞ் சொல். (௨௱௭)

தோற்றுவிப்பான் காப்பான் றுடைப்பா னுயிரனைத்து
மேற்றுவிப்பான் றிரோயத் தென்றுமுற—மாற்றியிவை
போக்கித்தா னாகப் பொருந்துமா னென்னுமிந்த
நோக்கே யரற்குருவாய் நோக்கு. (௨௱௮)

என்னதியா னற்று விறைவனடி தானாகுந்
தன்னதனை யீயிற் றருமுகமாந்—துன்னு
மவனேதா னாகு வடையின் முடியாஞ்
சிவனோர் தெரிசனமாய்த் தேர். (௨௱௯)

சேரும் பொருளனைத்துஞ் சேருமா லீசனுக்குச்
சாரும் பொருளறிந்து தாங்குவதாய்ச்—சீரானை
யல்லதொன் றைச் சாராம லாங்கவனோ டொன்றுகச்
செல்லல்சிவ யோகமெனத் தேர். (௨௱௰)

பாதகத்தை யுற்ற பலவினைகள் செய்தாலென்
றீதகற்று நல்வினைகள் செய்தாலென்—பேதமற்ற
நாத னுடனுயிராய் நண்ணியதான் மிக்கவருட்
போதஞ் சிவயோகப் பொற்பு. (௨௧௧)

இந்தவா றுருகு மிசைந்தநிரு வாணநிட்டை
முந்தியதோர் நூலின் மொழிந்ததாற்—சந்ததமுந்
தேற்றியதோர் நூலிற் றெளிந்தபோர் நெஞ்சினுறத்
தோற்றுமா னென்னத் துணி. (௨௧௨)

சரியைக்குத் தீக்கை சமயமா நிட்டை
வரிசைத் திருவுருமேன் மாலாய்த்—தெரியுந்
தொழிலோ டடன்பட்ட சுத்தசா லோகம்
வழுவா திருப்பார் மகிழ்ந்து. (௨௧௩)

கிரியைக்குத் தீக்கை கிளக்கில் விசேடந்
தெரியுநிட்டை மேனிச் சிறப்புப்—பெரியோர்க்குப்
பூசைத் தொழிலனைத்தும் பூண்டடைவர் சாமீப
மாசற்ற வன்மை மதித்து. (௨௧௪)

யோகத்துக் கில்லை யுறுந்திக்கை யாகிலுமெய்
யோகஞ் சமய விசேடமே—யோக
மிருதிறத்து முற்றங் கிசையிற் றியானந்
தருமவர்க்குச் சாரூபந் தான். (உகரு)

இருத்தித் தனுவை யிசைந்தொருமைப் பாடாய்
வருத்தி யறிவதற்கு வாராக்— கருத்தையரன்
பாலி லொடுக்கிப் பலதொழிலும் பாங்கவர்தம்
மாலி லொடுக்க வரும். (உகசு)

ஈங்கிவையே யல்லா விசைந்தகிட்டை யெல்லாம்போய்
நீங்கதுவே யாகச் செயுமதுவாற்—பாங்குடைய
நல்லார்க் கிவையே நலமா மறிவுடைமை
யில்லார் தமக்கேது மில். (உகஎ)

பன்னரிய மெய்கண்டான் பன்னுமருட் போதத்தைச்
சென்னிமேற் கொண்டொருநூல் செய்தேனு—விந்நூன்மெய்
முத்தர்க்கு நெஞ்சத் தமுதாம்போய் மூடர்க்கும்
பெத்தத்தைத் தீர்க்குமருட் பேறு. (உகஅ)

அனுபோக வெண்பா முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாயமூர்த்திமீது

# ஞானத்தாராட்டு.

காப்பு.

நற்றுறைசைத் தேசிகனை நல்லறிவாற் றாராட்டக்
கற்றவர்க்கு ஞானமருள் கற்பகத்தைக் கைதொழுவாம்.

நூல்.

அகளமாய் நின்றோ னருளே வடிவாகிச்
சகலர்மல நீக்கவிங்குத் தானேவெளிப்பட்டு வந்தாரோ.
என்று மருள்சுரக்கு மெம்மா சிலாமணிவாழ்
தென்றுறைசை மேவிச் சிறந்தே யிருந்தாரோ.
பொய்கண் டகன்றசிவ போதக் கடலுந்தி
மெய்கண்ட சந்ததியை மேவி விளக்கினரோ.
சித்தர் சிவப்பிரகாசர் திருவருளால்
முத்தி நெறியறிக்க மூலப் பரம்பொருளோ.
உன்னும் பொழுதடியா ருள்ள மலமகல
நன்னமச்சி வாயவென நாமந் தரித்தாரோ.
பதியும் பசுவும்பொய்ப் பாசமுநீ காவென்று
விதியா லெனக்களிக்க வேண்டியிங்கு வந்தாரோ.
அறிவா யசஞ்சலமா யானந்த மாயெங்கு
செறிவாக நிற்போநா மென்றுதெளி வித்தாரோ.
உற்றபொரு ளெல்லா முணருமரு ளுற்றிடுநீ
சிற்றறிவ னென்றே திருவாய் மலர்ந்தாரோ.
செம்மைவிழி பானுவினைச் சேரா தறியாபோல்
நம்மைவிட்டு நீயறியா யென்றுரைத்த நாயகமோ.
ஒன்று முணரா வகையுயிரி லொன்றுமிக
வென்று மயக்குவது மூலமல மென்றாரோ. (௰)
சுத்த மசுத்தமெனு மாயைத் தொடர்பகல
நித்த வறிவளித்த நித்தபரி பூரணமோ.

நல்வினையுந் தீவினையு நாடோறு நீயகன்று
நில்லா யெனக்கருணை நேய மளித்தாரோ.
அமையும் பருவமறிந் தாணவத்தின் கோளடக்கிச்
சமையமிது வென்றுசிவ சத்தி பதித்தாரோ.
நேரா விருவினையு நேராக நேர்ந்தவழி
யாரா வமுதா யளவிறந்து நின்றாரோ.
வாரா யெனவழைத்து வண்கைமுடி மீதுவைத்துத்
தீரா வினைதீர்த்த தேசிகசி காமணியோ.
கேட்டன் முதன்முறையாற் கிட்டியபி னானந்த
வீட்டி லெனையிருத்த வேண்டியிங்கு வந்தாரோ.
நீங்காத கேவலமு நீண்ட சகலமுமே
தீங்கா மெனவகற்றுந் தேசிகசி காமணியோ.
பாச வறிவும் பசுவறிவு நீக்கியரு
ளேச வறிவளித்த நித்தபரி பூரணமோ.
சுத்தவத்தை தன்னிற் சுட்டறவே நிற்கின்மிகத்
தித்தித் தமுதூறுந் தேசிகசி காமணியோ.
அத்துவா சுத்திபண்ணி யாறு வினையகற்றி
யொத்தபிரா ரத்தமுனக் கில்லையென்ற வொண்பொருளோ. (௨௰)
முப்பொருளு நித்தியமே யாயிருக்க முப்பாச
மெப்படியும் யான்சேரா வண்ண மிசைத்தாரோ.
தீயமல மொன்றகலச் சேர்ந்தவிரு பாசத்தை
மேயவரு ளாக்கியென்னை மேவி யிருந்தாரோ.
அத்துவித வானந்த வெள்ளத் திடையழுத்திச்
சித்தமலந் தீர்த்தவருட் டேசிகசி காமணியோ.
ஆவிநா மென்றருளி யன்பாற் றனைநாளும்
பாவியா தென்றன் பதைப்பை யகற்றினரோ.
தூய வருளே தொகுமுதலென் றேயிருந்த
நாயேனை ஞேயத்தி னூட்டும் பரம்பொருளோ.
ஞானமு ஞேயமு ஞாதுருவு மற்றுவிடற்
றேனு மெனவினிக்குந் தேசிகசி காமணியோ.
ஒன்றோ விரண்டோ வெனத்தெரியா முத்திநெறி
தென்றுறைசை வந்துதந்த தேசிகசி காமணியோ.
ஒப்பரிய முத்தியினு மோவாக் கருமமென்கை
திப்பியமா மென்றருள்செய் தேசிகசி காமணியோ.
எண்ணரிய முத்தியினுஞ் சிற்றறிவே யென்றும்மிகத்
திண்ணம் வரவுரைத்த தேசிகசி காமணியோ.
பாடாண வாதமுதற் பற்பலவா முத்தியினைக்
கூடா தெனவுரைத்துக் குற்ற மகற்றினரோ. (௩௰)

கூடாத முத்திநெறி கூட்டுவித்தே நீயொன்றுந்
தேடா திருவென்ற தேசிகசி காமணியோ.
ஆசானு பெந்தமெல்லா மாகா தெனத்தூர்த்துப்
பேசா வனுபவத்தைப் பேசி யளித்தாரோ.
எந்தைவே லப்பகுரு வெப்பொழுது மிப்படியிற்
சிந்தைசெய்து போற்றச் சிறந்தே யிருந்தாரோ.
வடகலையுந் தென்கலையு மற்றும் பலகலையுந்
திடமுடனே நாமேற்குச் செப்பி யளித்தாரோ.
பலகோடி மாற்றியருட் பண்பினரா யேயிருந்த
நவகோடி சித்தரெல்லா நன்னெறி மகிழ்ந்தாரோ.
வேலப்ப சற்குருவின் மெய்ப்படியை யென்சிரத்திற்
சாலப் பதித்தேதன் சந்நிதிக்காட் கொண்டாரோ.
தானேயுந் தானந்த வாழ்வுதந்த தற்பரனுக்
கியானோர்கை மாறளிக்கு மென்ன முறைமையோ.
திருவா வடுதுறையிற் சேர்ந்தவர்க்கு மெய்ஞ்ஞானத்
தருவோ மெனக்கிருபை தாங்கி யிருந்தாரோ.
எல்லையிலா வின்ப மெனக்குத் தரக்கருதித்
தில்லைப் பொதுவிற் றிருநடனஞ் செய்தாரோ.
வாழ்க குருநமச்சி வாயன் மலரடிகள்
வாழ்கவே லப்பகுரு வாழ்க வடியாரே. (௪௰)

சீரார் பெருந்துறைவாழ் தேசிகவே லப்பாருட்
டாராட்டை யேத்திப்போர் தற்பர மே சார்வாரே.

நமச்சிவாயமூர்த்தி தாராட்டு முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உற்சவ விளக்கம்.

ஆடக மன்றி லேறி யம்மையுந் தானு மாக
நாடக நடிக்கும் போது நல்லவர் சிவானந் தத்தே
வீடகம் புக்கு லாவி விரைமலர்த் தாளை மேவிப்
பாடக மான பாசம் பாறுமென் றறையு மன்றே.

நாலு பாதங்களிலே சரியாதரற்குத் திருவடிபெறுவது காரியமாக, நாலுகாரியமும் பொருந்திய சாம்பவமென்னுந் தீக்கையே உற்சவமாவது. இது பத்து நாளாகக்கொண்டது காரியம் பத்தையுமுடையதான படியினாலே. இதிலே நின்ற பதத்திற்குரியோர் அதற்கேற்ற முத்தியைப் பெறவும், அல்லாதார்க்குச் சத்திநிபாத முண்டாகவுங் காரணமாம். இதற்கு உதாரணம்

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

உற்சவ விளக்கந் தன்னை யுரைத்திடி லுயிர தற்கு
முற்செனனங்கள் விட்ட முகிழ்த்ததோர் கருணை யாலே
தற்பரந் தரும மாய் தனிக்கொடிக் கட்டி யுண்மைச்
சிற்பரத் துயிர்கண் முத்தி சேர்ந்திடச் செய்வார் மன்னே (௧)

சாதிசண் டாளர் பொல்லாக் கன்மசண் டாள ரென்னும்
போதமி லுயிர்க டம்மைக் கதியினிற் போக்க வேண்டி
யோதருங் கருணை யாலே யுமையவ ளோடுங் கூடி
யாதிபொய்ப் பாச நீக்க வவுத்திரி தொடங்க லுற்றார். (௨)

யாகமண் டபத்தி லெய்தி யெழிறரு குண்டஞ் செய்திட்
டாகவே திகையின் மீதே யைவகை கலைநி றுத்தி
யோகமா யாதி யாய வொன்பது கும்ப மர்ச்சித்
தேகமா மீசர் கண்ணே கும்பவத் தனையி ருத்தி. (௩)

இந்திர னாதி யாய தேவதாத் திசைக ளெட்டில்
வந்தனை செய்து மற்றத் தேவர்கள் வணக்க மாக்கி
முந்திய பாலி தன்னின் முளையினை யாக்கி யெட்டாஞ்
சுந்தர மங்க லங்க டோரண மாலை செய்து. (௪)

பாசம்போ யழிவு மின்பப் பரசிவ வரவு முண்மை
நேசநல் லுயிர்கள் பெறு நிலைமைய தாகக் காட்டி
வீசிய கரமு முத்தி விங்கிய பதமுங் காட்டித்
தேசுலாந் திருவெ ழுச்சித் திருவுலாச் செய்ய லுற்றார். (௯௩)

உற்றிடுஞ் சகாதி தத்தி னுண்மையை யளிக்க வேண்டித்
தற்பர னுடை கத்தின் றன்மையே தன்மை யாகச்
சிற்பர வுபாதி யோகத் திருவுலாப் புறம தாக
நிர்க்குண மதீத மாக நிலைமையி னுலாவ லுற்றார். (௯௪)

வாதனை யாக நின்ற வானந்த னனந்த மான
நாதனு முடிவி லாடு நாடகங் காட்டி வீதி
போதரு மருளி னாலே பூரணப் போதா னந்தம்
வேதகம் விளக்கி யின்ப விமலனார் விளங்க லுற்றார்.

தனுவொடு கரண மாயா புவனபோ கந்த விர்க்கும்
புனிதநீ றுய சுண்ணம் போதகற் களித்திட் டுண்மை
யினிதமர் சிவம தாக்கி யெல்லையொன் றில்லா வின்ப
வனுபவ தீர்த்த மாடி யமலமாய் நிலைமை செய்தார். (௯௬)

மந்திர முதலாந் தேவர் வகைக்குநல் விடைகொ டுத்து
விந்துரு விழுந்த மோனத் திருவுலா வீதி வந்திட்
டந்தமி லருளி னாலே யருட்கொடி யிறக்கி ஞானப்
பைங்கொடி முன்ன தாகப் பண்டுபோ லுலாவ லுற்றார். (௯௭)

ஞானசங் கார மாற்றி நலமிகு முயிர்க்கு முத்தி
தானிக வளிக்க வேண்டித் தமோமய மான பாசத்
தீனமாந் திரோத மாற்றி யின்பநற் கிருட்டி செய்வான்
தேனமர் குழலி யின்னே திருவுலாச் செய்ய லுற்றார். (௯௮)

பத்தினோ டிரட்டி யெட்டுப் பதினெட்டுப் பத்து மூன்று
மத்தனார் விழாவு முத்தி யருளினு னுரைக்குங் காலை
முத்தர்க்கு முதனு னாகும் முனிவரர்க் கிரண்டா நாளாங்
கத்துமா கடல்க ளுக்குங் கருதுமூன் றுநா ளாகும்.

நாலாநா ளெண்டி சைக்கு மஞ்சாநா டேவர் கட்கு
மாலொடு பிரம ருத்தி ராதியர்க் காறு நாளா
மேலவர் கிரிய னுக்கு மேழாநா ளெட்டா நாட்டான்
மாலாநாற் காற்ப றவை லனத்துளோர்க் கெனவு ரைத்தார். (௱)

காப்புநாண் சரியை யாருங் கருஞ்சாந்து கிரியை யாகும்
போக்கற வுலாவ ருனும் பொலிவுடை யோக மாகும்
வாக்கிறன் ஞான னந்த மானிடர் தமக்கு மற்றத்
தேக்குள சனங்க ளுக்குஞ் சிவமுத்தி யெனமொ ழிந்தார். (உக)

கதிபெற விருளாம் பாசக் கடலிலே கட்டுண் டோர்க்கு
முதுமைசெய் ஞான வின்ப முத்தியை வழங்க வேண்டி
விதியினுற் றெய்வ நாளா விழாவுவந் தானென் றுண்மை
மதிவல்லோ ருணர்த்தக் கேட்டோர் மறுபிறப் பறுப்ப சன்றே. (உஉ)

உற்சவவிளக்கம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முத்திபஞ்சாக்கர மாலை.

திருவேயென் செல்வச் சிறப்பே சிவானந்தத் தெள்ளமுத
வுருவே யுருவமு மூருடன் பேருமொன் றும்புணரா
வருவே தெளிந்த வறிவேமெய் யன்பர்க் கருளுந்தெய்வத்
தருவேதென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௧)

சுந்தர மாலயன் வாழ்வுமைந் தாரிற் சுவர்க்கவைப்
மிந்திர ஞாலங் கனவெனக் கண்டுன் னிணையடிக்கே
யந்தமில் காதலுற் றூராத வின்பத் தமர்ந்திருக்கத்
தந்தருள் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௨)

பண்டறி யாமை பிடித்துவிட் டேனை விடாதுபற்றிக்
கொண்டு குணவழி விட்டுத் திருத்தியென் கோதகற்றிப்
புண்டரி கப்பதந் தந்தாய்க்கென் னாலொரு போகமுண்டோ
தண்டமிழ்க் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௩)

மாயா படலங் கிழித்தருள் ஞானம் விளங்கவைத்துன்
நேயானந் தத்தி லழுத்திடு வாய்நித்த முத்தசுத்தத்
தூயா சராசர பேதங்கள் யாவையுந் தோற்றுவிக்குந்
தாயான கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௪)

அரணங்கண் மூன்று மெரித்தாய் சரண மதினுமன்பர்
மரணம் படாதருள் வைத்தாய் சரணம் வலியவந்தக்
கரணங்க ளான்மெலிந் தெய்த்தேன் சரணநின் பொற்கழலே
சரணந்தென் கோமுத்தி முத்திபஞ் சாக்கர சற்குருவே. (௫)

முத்திபஞ்சாக்கரமாலை முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ மெய்கண்ட தேவர் திருவடி வாழ்க.



உ

சிவமயம்.

# பரிசோதந பத்திரம்.

| பக்கம். | செய்யுள். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨௫ | ௬௪ | ௨ | கிறைவா | இறைவா |
| ௬௪ | ௫௧ | ௩ | தாய்ச்-சீர | தாய்ச்சீர |
| ,, | ௯௫ | ௩ | கணத்தி | கணத்தின் |
| ௧௨௩ | ௭௪ | ௬ | யோதி | வோதி |
| ௧௪௧ | தலைப்பு | | நிராகரனம் | நிராகரணம் |
| ௧௪௬ | ,, | | ,, | ,, |
| ௧௪௫ | ,, | | ,, | ,, |
| ௧௯௩ | ௧௨௨ | ௩ | தகிலங் | தகிலந் |



# பிரதி பேதங்கள்.

இப்புத்தகத்துப் பெரும்பாலு மூலபாடம் எனது சொந்தப் பிரதியதே. பல பிரதிகளையு மொத்துப் பார்த்ததிற் காணக்கிடந்த பாடபேதங்கள் இதன்கீழ்க் குறிக்கப்பட்டுள்ளன. ஒரு சுவடியிலுங் காணப்படாதனவும் கரணபரம்பரையில் வந்தனவுமான இரண்டு செய்யுட்கள் உள. அவை வருவன:—

தக்ஷி-தசகாரியம்.

"சற்குருவி னருளாலுந் தவமுடிவின்
பயனாலுஞ் சனன நீங்கிச்
சிற்கனவாழ் வடைந்ததற்கே சிந்தைசெயுந்
திறமுடைய சீல ராகி
நிற்குநிலை சாதனங்க ளொருநான்கு
மாசறவே நீந்தி யோக
வர்க்கமொடு சகலகலை யுந்தெரிந்து
ஞானநெறி வருவ ராமால்."

"இருவிழிக ளுலகறிந்துந் தமையறியா தனபோ
லியானறியும் பொருளலதிங் கெனையறியா மையினாற்,
கருவிடைபுக் கின்பதுன்பக் கடலிடையே சுழன்று
கணக்கலக்கப் படுவேனைக் கருணைவிழி யதனை,

வருவினைக ளறநோக்கி யாணவமே போக்கி
மகடகமென் றிருந்ததனை மறிவுகொண்டே நீக்கிப்,
பருவமதிற் பதந்தாக்கிக் கற்பனைகள் யாவும்
பாழாக்கித் தாளுரும் பரகுருவைப் பணிவாம்.''

சில பிரதிகளில் பஞ்சாக்கரப்பஃறொடையில், ரு, சு, எ, கண்ணிகள் பின்வரும் ரூபமாகக் காணப்படுகின்றன.

''நாக மணியகிலி னன்குறடு சந்தமுந்தி
யாகவஞ்செய் காவிரியா மாரோடு—வேகமாய்
வந்து வணங்கு மதிலா வடுதுறையே
யெந்தநா ளும்பத்தர்க் கேயருளிப்—பந்தமகற்
றாரென்றுநாடி யுலவாத வின்பமருட்.''

அநுபோக வெண்பாவுள், கஎஉ, கஎஙு-வது செய்யுட்கள் வெண்கலிப்பாக்களாக எல்லாப்பிரதிகளிலும் உள்ளவற்றுள் 'மருத்து வனே' என்பதனை 'தீர்ப்பானே' என மாற்றி வாசிப்பின் வெண்டளை பிழையாது. சிவாச்சிரமத்தெளிவில் உ—அ வெண்பாக்கள் விளு கூ முதலியன உத்தரம் ஆகும். சீர்பிரிக்கு மிடைவெளிகளை யிரண்டோ ரிடத்து பொருந்துமா றமைத்துக்கொள்க. எல்லாச் சுவடிகளிலும் பொதுவாகக் காணக்கிடக்கும் பாடபேதங்கள்:—சரியை-சரிதை; சமயம்-சமையம்; புசி-பொசி; பிரி-பிறி; உதயம்-உதையம்; தசம்-தெசம்; சகம்-செகம்; அழி-அளி; ஒழி-ஒளி; மார்க்கம்-மாற்கம்; அர்ச்சி, அருச்சி-அற்சி; தகும்-தரும்; பாவின்-பாவால்; பாட்டில்-பாட்டின்; பாட்டால்-பாட்டுள்; நிரயம்-நிரையம்; வெண்ணெய்-வெண்ணை; இசை-இசை; நேயம்-நேயம்; ஈந்து-ஈய்ந்து; திய-திய்ய; மதித்தது-மதித்தல்; ஐந்து-அஞ்சு; அருளி-உதவி; சதுர்-சதிர்; சதுர்-சது; சாற்றுவி, சாற்றிவி-சாற்றிவை; குகையில்-குகையுள்; சார்-சேர்; கோளா-கோலாய்; கோலாகி-கோலாக; கீன்று-கீண்டு; நீள்-நீழ்; அன்று-இன்று; இல்லைகாண்-இல்லைக்காண்; மையல்-மயல்; நீக்கல்-நீத்தல்; தெரிவி-தெளிவி; மார்க்கசித்தி-மார்க்கச்சித்தி; தேர்-தேறு; என்-வன்; அபிடேகாந்தம்-அபிடேகாந்தம்; பிரமோபதேசம்-பிரமவுபதேசம்; கருமோபதேசம்-கருமவுபதேசம்; தேவாம்-தேவம்; நிட்டூரன்-நெட்டூரன்; தொடர்-துடர்; ஏற்ற-ஒத்த; சுவர்க்கம்,சொர்க்கம்-சொற்கம்; ஒன்றிற்று-ஒன்றித்து; மேலாம்-மேலாய்; சாக்ராதிகம்-சாக்கிராதி; போகம்-போதம்; பழம்பொருளோ-பரம்பொருளோ; வெப்பொழுது-வெப்போது; ஒதுங்கி-ஒதுக்கி; மாறி-மாற்றி; யசுபததே-யசிபததே முதலியன.

# பெரும்பாலும் பொருள் வேறுபடக்கூடிய சில முக்கிய பாடபேதங்களே கீழ்க்குறிக்கப்பட்டுள்ளன.

| பக்கம். | செய்யுள். | வரி. | |
|---|---|---|---|
| க | | ச | பலவாய் |
| | உ | ச | சென்னிவைப்பாம், உளத்திற்சேர்ப்பாம் |
| உ | ச | ச | தேவன் |
| | ரு | க | தானுற்ற |
| | அ | க | பயன்கள் |
| ந | ௰அ | ச | போதம் |
| ரு | உந | உ | கண்ணை |
| | | ந | உயிர்த்த |
| சா | நசா | க | யானுறியவுடலு |
| | நஎ | ச | புரத்திடு |
| | நஅ | உ | கண்டொருத்திடு |
| | நகூ | உ | பதித்து |
| | | ந | மடிமையாக்கி |
| | ச௰ | க | கரந்திடு |
| | | ந | நாளும் |
| அ | ருசா | உ | னின்று |
| கூ | உ | உ | புகழ்ந்து |
| | | ச | பரந்தழிந்தே, பாந்தழிந்தே, பரந்தளித்தே, பாந்தேறுந்தவர்க்கு. |
| கூ | ச | ச | ரூபகமே |
| கக | ௰ | ந | தாரதரமே |
| | | ரு | வியாபகமாமுட் |
| கஉ | கஉ | அ | புகுத்தி |
| கந | உ | ந | வகைத் |
| | ந | உ | சத்தியச் |
| கசா | உஉ | உ | மூன்றுநன்றாய் |
| | | ந | இறாமே |
| | உந | ந | கண்ணியல் |
| | உச | உ | பயபத்து |
| கஎ | க | ந | மூதிர |
| கஅ | அ | ந | கருதரு |
| ககூ | கசா | ந | பொய் |
| உஉ | எ | ந | மலமிரண்டாய் |
| | அ | ந | வுணரா |
| | கந | ந | மரு |
| உந | கரு | ந | தொக்குச், தொத்தி |
| உச | உஎ | க | கானன்றில்லை, கான்றில்லை, கான்றில்லை. |
| | ந௰ | க | சத்தியத்தாலாத |
| உரு | நச | க | பிறிவா |
| உசா | நகூ | உ | யோரார், யேலார் |
| உசா | ச௰ | ந | தீர்த்தங் |
| | சச | க | விடப்பட்டதனை |
| | | ச | ரவரே |
| உஎ | ருஉ | க | இல்லத்தார் |
| உஅ | ருகூ | ச | ரறிவிலராய் |
| | சா௰ | ந | ரலரா |
| ந௰ | எக | | சிவாச்சிரமாங் |
| நக | உ | உ | விண்டிலங்க |
| | ச | க | காமனெனு |
| நஉ | உசா | க | குணமாற்றி |
| நந | ந௰ | உ | வன்பே |
| | நஅ | உ | கொண்டதெனு |
| | ச௰ | உ | மாசிரிய |
| நச | சகூ | உ | யருந்தும் |
| நரு | எக | உ | நோக்கு |
| | எரு | க | னென்று |
| | அச | உ | மக்கடமை |
| நசா | அஅ | க | பெற்றியுற்ற |
| | அகூ | உ | யென்றே |
| நஎ | ௱ரு | உ | வினைத்துட்டன் |
| | ௱சா | க | கையாலும் |
| நஅ | கநசா | க | உண்மையாற் |
| சஎ | ந௱எ | உ | விரைவாய் |
| சகூ | நநஅ | க | றுற்கண் |
| | நச௰ | உ | ம்ருள் |
| ருக | நஎ௰ | க | ஏதென்பானே |
| | நஅரு | க | கருதுமாற் |
| ருஉ | ச௰ரு | உ | னிற்கண் |
| ருரு | சசசா | உ | அரணுகும் |
| | சருகூ | க | லாய்ந்த |
| | சசாக | க | தனன்னியமா |

| | | | |
|---|---|---|---|
| ௫௬ | ௪௬௮ | ௧ | போலீசன் |
| | ௪௬௯ | ௧ | கொடுங் |
| | ௪௭௧ | ௨ | கோலோ |
| ௫௭ | ௪௮௫ | ௨ | சரியுங் |
| | ௪௯௰ | ௧ | தடைவாய், மறை வதனை |
| ௫௮ | ௫௦௮ | ௧ | விளக்குவமை |
| | ௫௧௧ | ௧ | அருளென்ன |
| ௬௰ | ௫௫௧ | ௨ | மேலோகச் |
| ௬௧ | ௫௬௩ | ௨ | கூவு |
| ௬௨ | ௫௯௫ | ௨ | மாகத்தர் |
| ௬௪ | ௬௩௪ | ௨ | பண்டை |
| ௬௬ | ௩ | ௨ | சத்சாந்த |
| ௬௮ | ௰௫ | ௨ | பின்ன |
| ௬௮ | ௰௬ | ௨ | தேய்த்த |
| | ௨௧ | ௧ | யோநாம |
| | | ௧ | சாதிகுண |
| ௭௰ | ௬௨ | ௨ | ஊணுன |
| ௭௧ | ௮௨ | ௧ | வாணு |
| ௭௨ | ௯௩ | ௨ | திலதென்று |
| | ௯௪ | ௨ | நெஞ்சம் |
| | ௱ | ௨ | மெய்ப்பொரு ளுந் |
| ௭௪ | ௱௪௰ | ௨ | யண்டிலரை |
| ௭௭ | ௧௮௬ | ௧ | வறியு |
| | ௧௮௭ | ௧ | யறியு |
| | ௧௮௯ | ௨ | மூன்றூற்றமற |
| ௭௮ | ௩ | ௨ | றித |
| ௭௯ | ௩௧ | ௨ | சொல்ல |
| ௮௩ | ௨௨ | ௨ | லதனை |
| | | ௪ | யடக்கின்ருர் |
| ௮௪ | ௨௫ | ௩ | மற்ருரை |
| ௮௬ | ௪௧ | ௩ | யிசைவார், யிசைவரச் |
| ௮௯ | ௬௯ | ௧ | வுருவோ |
| ௯௰ | ௭௨ | ௨ | பவநேசம், சிவநேசம் |
| ௯௧ | ௮௧ | ௧ | சங்கமல |
| ௯௨ | ௮௮ | ௪ | யகம் |
| ௯௪ | ௰ | ௨ | மோரா |
| | ௰௧ | ௩ | தான் |
| ௯௫ | ௨௧ | ௪ | பலம் |
| ௯௮ | ௪௰ | ௩ | மரன் |
| | ௪௨ | ௪ | நூறுன் |
| ௱௧ | ௯ | ௧ | யறும், பாகத்தி |
| ௱௧ | ௧௩ | ௨ | வெருண்டு |
| | | ௩ | சாதகர் |
| ௱௨ | ௨௨ | ௨ | ரெணு |
| ௱௩ | ௨௪ | ௧ | கணி |
| | | ௨ | சதாசிவத்தி |
| | ௨௬ | ௧ | சொல்லிற்றி |
| ௱௪ | ௧ | ௨ | கருத்ததுவா |
| ௱௫ | ௯ | ௧ | விலங்கு |
| | | ௨ | மாங் |
| ௱௬ | ௧௫ | ௩ | யோவாமற் |
| | ௧௬ | ௧ | மாற்ற |
| ௱௯ | ௪௨ | ௩ | தணிந்தரனை |
| ௱௧௧ | ௧௩ | ௧ | புத்தியற்ருய்க் |
| ௱௧௨ | ௨௰ | ௨ | மூ[illegible]ீந்த [காய |
| ௱௧௪ | ௩௧ | ௨ | காயத்தும் |
| ௱௧௫ | ௩௯ | ௧ | யாழ்த்திய |
| | | ௩ | தகப் |
| | ௪௧ | ௧ | சொலிப்பித்து, கழைத்தோளிணை |
| | | ௨ | புலிப்பித்து |
| | ௪௩ | ௧ | டள்மங்கை |
| | ௪௫ | ௧ | பொய்யவிர் |
| ௱௧௯ | ௭௩ | ௨ | வினையுற்ற |
| ௱௨௧ | ௧௨ | ௪ | குய்க்கயலே |
| | ௧௪ | ௩ | மரன் |
| | ௧௮ | ௧ | யெழுமாநிதிமல மா |
| ௱௨௩ | ௨௩ | ௨ | மின்னில |
| | ௨௪ | ௧ | யுணர்வே |
| | | ௨ | தீநரகை |
| | ௩௰ | ௨ | தலைவா |
| ௱௨௫ | ௪௪ | ௧ | தீவினையைக் |
| ௱௨௬ | ௫௰ | ௩ | ளுக்கி |
| ௱௨௯ | ௭௧ | ௪ | ஆக்கமே |
| | ௭௮ | ௪ | சொன்ணுய் |
| ௱௩௨ | ௯௫ | ௪ | தாலே |
| ௱௩௩ | ௱௭ | ௧ | காக்கவரு |
| ௱௩௮ | ௨ | ௨ | மேவியவர் |
| | ௪ | ௧ | முகன் |
| | ௬ | ௧ | பதார்த்த |
| ௱௩௯ | ௭ | ௨ | ரிறைஞ்சி |
| | ௧௨ | ௧ | பண்ணுமனுப் |
| ௱௪௧ | ௨௩ | ௨ | மன்றென்றெடு |
| | ௨௮ | ௧ | பேரவர் [த்தோ |
| | | ௨ | பழிய |

| | | | |
|---|---|---|---|
| ௱௪௧ | ௨௯ | ௩ | விலக்கினை |
| ௱௪௨ | ௩௭ | ௨ | சூட |
| | | ௪ | மீத்தாமீதென்ப |
| | ௪௧ | ௪ | மாயமி |
| | ௪௨ | ௪ | பேதகத் |
| ௱௪௪ | ௪௮ | ௨ | நெஞ்சிரிக்கின்ற |
| | | | நெஞ்சிற்றரிக் |
| ௱௪௫ | ௫௫ | ௪ | சாவித்த [கின்ற |
| ௱௫௨ | ௫௰ | ௪ | கார்க்கா |
| ௱௫௪ | ௬௯ | ௨ | பேருக்கு |
| ௱௫௮ | ௱௧ | ௪ | பரிப்பதல |
| ௱௬௰ | ௱௧௭ | ௩ | முயிருடலிற் |
| ௱௬௩ | ௧௪௧ | ௨ | முருவற்றுன் |
| ௱௬௪ | ௧௪௬ | ௪ | மலமடைவ |
| | ௧௪௯ | ௨ | கருத்தை |
| ௱௬௭ | ௧௬௮ | ௩ | தருமாற்கு |
| | ௧௭௧ | ௧ | கருதாரே |
| ௱௭௰ | ௧௯௨ | ௩ | லூட்டு |
| | ௧௯௪ | ௨ | யணியுங் |
| | ௧௯௬ | ௩ | பிணியைமாற்று |
| | ௧௯௭ | ௧ | மலமேன் |
| ௱௭௫ | ௧௯ | ௧ | சுத்தவவத்தை |
| | ௩௰ | ௧ | பற்பலவர் |
| ௱௭௬ | ௩௨ | ௧ | துரத்திப் |



PRINTED AT THE THIRUPURASUNDARI PRESS, SHIYALI.